# கங்கைப் பருந்தின் சிறகுகள்

(அஸ்ஸாமிய நாவல்)

லக்ஷ்மீநந்தன் போரா

*தமிழாக்கம் :*

திருமதி துளசி ஜயராமன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது டில்லி

1979 (1900)



விலை ரூ. 9-50

*Original:* GANGA CHILANIR PAKHI (Assamese)
*Tamil Title:* GANGAI PARUNDHIN CHIRAGUGAL

விநியோகிப்பாளர்கள் :

**பாரி நிலையம்**

59, பிராட்வே

சென்னை-600 001

PUBLISHED BY THE DIRECTOR, NATIONAL BOOK TRUST, INDIA,
A-5, GREEN PARK, NEW DELHI-110 016 AND
PRINTED AT TAX AND COMPANY LAW PRESS, MADRAS-600 032

# அசாமிய நாவல் பற்றிய சுருக்கமான கண்ணோட்டம்

அசாமிய நாவலைப்பற்றி மேலெழுந்த வாரியாகத் தெரிவிப்பது என்பது ஒரு பெரும் முயற்சியாகும். மத்திய காலத்துக் காப்பியங்களிலும் கிராமியக் கதைகளிலும் இது பற்றிய எந்தக் குறிப்பும் காணவில்லை. நவீன அசாமிய உரைநடை, முதல் அசாமிய இதழான 'அருணோதய' த்திலிருந்து (1846-82) தொடங்கியது. அந்த நேரத்தில் ஏறக்குறைய ஆறு நீண்ட கதைகள் — நான்கு மொழி பெயர்ப்புக்கள், இரண்டு அசாமிய மொழியிலேயே எழுதப் பட்டவை — வெளியாயின. 'யாத்ரிகர் யாத்ரா' (பில்கிரிம்ஸ் பிரொக்ரஸ், 1851), 'எலோகேசிர் பேஸ்யா' (டேல் ஆப் எலோ கேசி தி பிராஸ்டிட்யூட், 1857), 'காமினி காந்த்' (1877), 'பூல் மணி ஆரு கருணா' மொழிபெயர்ப்புக்களாகும். 'சுதர்மார் உபாக்யான்' (சுதர்மனின் கதை, 1884), 'பாகிரே ரங்க் சங்க் பீத்தரே கோவா பாதுரீ' (மின்னுவதெல்லாம் பொன்னல்ல, 1876) இந்த இரண்டும் மூலக் கதைகளாகும். மொழி பெயர்ப்புக்கள் அமெரிக்க பாப்டிஸ்ட் மிஷனரிகள் மூலம் செய்யப்பட்டன. மூலக் கதைகளில் ஒன்றின் எழுத்தாளர் பத்மாவதி புக் நநி என்ற பெண் மணியாவார். மற்றொரு கதையின் ஆசிரியர் புகழ் பெற்ற அகராதி ஆசிரியரும், கேலியாக எழுதக் கூடியவருமான ஹேமசந்திர பருவா என்பவராவார். கிறுத்துவக் கதைகளின் இலட்சியம் மத மாற்றமாக இருந்தது. கோவா பாதுரியில் முதன் முறையாகச் சீரான இலக்கிய உரை நடை காணக் கிடைக்கிறது. அது ஒரு கேலி நாவலாகும். கதைப் போக்கு, பாத்திரப் படைப்பு, இவ்விரண்டிற்கும் அதில் சிறந்த இடம் அளிக்கப் பட்டிருக்கிறது.

அசாமிய நாவலின் அடுத்த கட்டம், 'ஜோனாக்கி' (1889), 'பிஜூலி' (1890) என்ற இரண்டு இலக்கிய இதழ்களுடன் தொடர்புடையது. ஜோனாகியில் எல்.என். பேஜ்பருவாவின் 'பதும் கும்வரி' (1905) என்ற நாவல் தொடர் நாவலாக வெளியாயிற்று. பிஜூலியில் பத்மநாத் கோஹாயீ பருவாவின் சிறந்த நாவலான 'பானுமதி' வெளியாயிற்று. 'பானுமதி' கருத்து செறிந்த கதைப் பின்னலின் காரணத்தால் முதல் அசாமிய நாவலாகக் கருதப் படுகிறது. பத்ம

நாத்தின் '**லாஹோரி**' யிலும் (1892) இந்தச் சிறப்புகள் காணப்படு கின்றன. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் '**பதும் கும்வரி**' சாதாரண நாவலாகத்தான் தோன்றும். இந்த நாவல்கள் எல்லாம் போட்டியிடும் வேட்பாளர்களின் கதைகளாகும். அந்தக் கதை களில் தலைவனையும் தலைவியையும் எளிதில் இனம் கண்டுகொள்ள முடியும். சிருங்கார ரசமே இவற்றில் பிரதானமாக இருந்தது. 'பதும் கும்வரி'யில் இடம் பெற்ற தற்கொலை செய்துகொள்ளும் கட்டம் அப் பொழுதிருந்த எழுத்தாளரான லம்போதர போரா என்பவரின் கடும் விமரிசனத்திற்கு ஆளாயிற்று. நாவலில் சமு தாயப் பண்பு நிறைந்த உயரிய இலட்சியம் இருக்க வேண்டும் என்று விமரிசகர் விரும்பினார் என்பது தெளிவாகிறது.

அசாமில் நாவல் எழுதும் முறை பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சமுதாயத்தில் இந்தியப் புதுவிழிப்பின் அடிப்படையில் தோன்றிய மனித உணர்வின் பிரதிபலிப்பாகும். ரஜனிகாந்த் பர்தோலாய் எழுதிய சரித்திர நாவல்களின் ஆர்வத்தைத் தூண்டும் கதை, பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் மோதிக் கொள்ளும் போக்கு, உள்ள உணர்ச்சிகளின் வருணனை, நாட்டுப் பற்றுக்கு விளக்கமாக அமைந்த காலச் சரித்திர நிகழ்ச்சிகள்—இவற்றைத் தனித் தனியாக வும், குறிப்பாகவும் அஸ்ஸாமிய நாவலில் புதிய வடிவங்கள் தோன்றி யதற்கு அடையாளமாகக் கொள்ளலாம். ஆதிவாசிகளின் வாழ்க் கையை அடிப்படையாகக் கொண்ட அவருடைய '**மீரி ஜியாரி**' (மீரி பெண், 1894) என்ற நாவலைக் கதை இலக்கியத்தின் முன்னோடி யாகக் கருதலாம். அவருடைய சரித்திர நாவல்களான '**மனோமதி**' (1900), '**ரங்கீலி**' (1909) '**நிர்மல் பக்த**' (1926), '**ராதா ருக்மிணி**' (1925), '**தாம்ரேஸ்வரி மந்திர்**' (1936), '**தந்துவா த் ரோஹ**' முதலியவை ஆங்கிலேயர் காலத்திற்கு முன்பு பர்மியப் படையெடுப் பாலும், அசாமிய உள்நாட்டுக் கலவரங்களாலும் தோன்றிய புரட்சி களையும், தாழ்ந்த மனப் பான்மைகளையும் அடிப்படையாகக்கொண்ட வையாகும். பாத்திரப் படைப்புகளால் பண்பாடு, மதம், சமுதாய பழக்க வழக்கங்கள், முறையான ஆண் பெண் தொடர்புகள் முதலி யனபற்றி நன்றாக அறிய இயலுகிறது. கதைகள் பெரும்பாலும் மற்ற மொழிகளிலிருந்து எடுக்கப்பட்டவையாகவும், காதலர்களையே சுற்றிச் சுற்றி வருவனவாகவும், நேரத்தையும் விதியையும் எதிர்த்து அவர்கள் செய்யும் போராட்டங்கள் பற்றியனவாகவும் இருந்தன. '**தாம்ரேஸ்வரி மந்திர்**' என்ற நாவலில் பர்மியப் படையெடுப்பால் கொடுமை குடிகொண்டிருந்த தாந்திரிக பீடத்தை எதிர்த்துக் காத

லன் நடத்தும் போராட்டம் சித்திரிக்கப் பட்டிருக்கிறது. **‘ மனோமதி’** என்ற நாவலின் கதை சுருக்கமாகவும் கட்டுக்கோப்பு நிறைந்த தாகவும் இருந்தது. அதில் காதலன் படையெடுப்பால் ஏற்பட்ட குற்றச் சாட்டுகளை மட்டுமல்லாது ரோமியோ ஜூலியட்டைப் போல் சாதி வெறியரின் எதிர்ப்புக்களையும் எதிர்த்துப் போராடுகிறான். **‘ நிர்மல் பக்த ’** என்ற நவாலின் கதை பர்மியப் படையெடுப்பால் தோன்றிய குறை மனப்பான்மையை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்ட தூய காதலின் உணர்வைச் சித்திரிக்கும் கதையாகும். **‘ தந்துவாத் ரோஹ் ’** என்ற நாவலில் ஆசிரியர் பதும் கும்வரியின் கதையை நல்ல பாத்திரப் படைப்புடனும் கதைப் போக்குடனும் சித்தரிக்கிறார். சில சமயங்களில் பர்தோலாய் வரையும் பொருத்த மற்ற உபதேசங்களை அகற்றி விட்டுப் பார்த்தால் அவர் பொதுவாகத் தம் காலத்துக் சமூகத்தேவைகளைப் பூர்த்தி செய்துள்ளார் என்பது விளங்கும்.

சரித்திர நாவல்களின்பால் ஆர்வம் குறைந்து விட்டதுபோல் தோன்றினாலும் சில ஆசிரியர்கள் இத்தகைய முயற்சிகளில், அவ்வப் பொழுது ஈடுபட்டுத்தான் வருகிறார்கள். ஹரிதேஸ்வர் பர்பருவாவின் நாவல் **‘ மாலிதா ’** (1914), சரத்சந்திர கோஸ்வாமியின் நாவல் **‘ பானீபத் ’**, எச். என். தத்த பருவாவின் நாவல் **‘ சித்ர தர்ஷன் ’** தந்தீ நாத் கலிதாவின் நாவல் **‘ ஜன விப்லவ் ’** முதலியவை இந்த மரபைச் சேர்ந்த படைப்புகளாகும்.

சமூகத்தில் உலகியல் சக்தி வளரத் தொடங்கிய பொழுது அசாமிய மொழியில் சமூக நாவல்கள் தோன்றின. சரித்திர அடிப் படையில் வெறுக்கப் பட்ட காதலையும், தேவையில்லாமல் ஒடுக்கப் பட்ட ஆண் பெண் உறவையும் இயற்கையாகவும் மனிதப் பண்பின் அடிப்படையிலும் கொண்டு வரவேண்டியது தேவையாக இருந்தது. அந்தத் துவக்க காலத்தில் இந்தப் பிரச்னையை எழுத்தாளர்கள் எவ்வாறு எதிர் கொண்டார்கள் என்பதை இங்கு விளக்கத் தேவை யில்லை. அந்த எழுத்தாளர்களில் சில பெண் எழுத்தாளர்களும் இருந் தார்கள். இவர்களெல்லோரும் சேர்ந்து துன்புற்ற மனிதனின் பிரச் சனைகள்பால் நம் கவனத்தை ஈர்க்க முயன்றார்கள். மற்றொரு பக்கம் தந்தி நாத் கலிதா, தெய்வ சந்திர தாலுக்தார் போன்ற எழுத்தாளர் கள் காந்தியின் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளைப் பெரிதும் போற்றி னார்கள். ஆனால் நாவல்களில் சீர்திருத்தப் பண்பைக் கலையழகுடன் சித்திரிப்பதில் அவர்களுக்கு வெற்றி கிட்டவில்லை. சீர்திருத்த வாதியைக் கதாநாயகனாகக் கொண்டு வருவதால் தோன்றும்

போராட்டமும், சூழ் நிலைகளை நன்கு புரிந்து கொள்ளும் திறனும் தான் அவர்கள் நாவலின் சிறப்பான அம்சங்களாகும். கலிதாவின் நாவலான '**சாதனு**' (1925)வின் கதாநாயகன் தீனபந்து பள்ளிக் கூடத்து ஆசிரியன். ஆனால் பெண்கள் மற்றும் ஏழைகளுடைய மானத்தைக் காக்கும் தைரியம் அவனிடத்தில் இருந்தது. தன்னை ஏசுபவனிடமிருந்து தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள இலட்சியப் பாதையையும், உபதேச முறையையும் அவன் ஏற்றுக் கொள்வது நன்கு புலப்படுகிறது. தாலுக்தாரின் நாவல்களில் இலட்சியப் பாதை, பாத்திரங்களின் போக்கு இவற்றிற்கு இடையே ஏற்படும் போராட்டம், சித்திரிக்கப்பட்டிருக்கிறது. கட்டுக் கோப்பில்லாத கதை, உருவமற்ற பாத்திரங்கள், இவற்றினூடே இயற்கையாக வெளியாகும் ஆசிரியரின் கருத்து புகழத் தக்கதாகும். இந்தச் சிறப்பை '**வித்ரோஹி**' (1948) என்ற நாவலில் காணலாம். அந்த நாவலில் ஆக்னேய கிரியைச் சேர்ந்த கார்த்திகன் தைரியத்துடன் ஒரு இளம் விதவையை மணம் செய்து கொண்டு சமூகச் சீர்திருத்தத்திலும் ஈடுபடுகிறான்.

தீனநாத் ஷர்மாவின் '**சங்கிராம்**' போன்ற நாவல்களில் தாழ்ந்த சாதி மக்களின் சமுதாயக் குறைபாடுகள் அனுதாபத்துடனும் உணர்ச்சியுடனும் சித்தரிக்கப் பட்டிருக்கின்றன. 'சங்கிராமில்' வரும் படித்த புத்திராம் வேலையில்லாதவன். ஏனென்றால் அவன் மனிதத் தன்மையற்றதும் தாழ்ந்ததுமான நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு வேலை செய்யத் தயாராக இல்லை. அதனால் அவன் ஒன்றுக்குப்பின் மற்றொன்றாக வரும் சூழ்நிலையோடு போராடிக் கொண்டு ஒரு கனவுக் காரிகையின் கற்பனையில் மூழ்கியிருந்து கொண்டே இறந்து விடுகிறான். '**நதாயி**'யில் நம் எதிரில் மறுபடியும் ஒரு உழைப்பாளிக் குடியானவன் வருகிறான். அவன் நல்ல வருமானமுள்ள தன் தொழிலின் எல்லையை அடையவிருக்கும் பொழுது ஒரு வீணான சூழ்நிலையில் சிக்கிக் கொள்கிறான். அங்கே புதுத் தலைமுறை அவனுடைய கொள்கைகளை மதிக்க மறுக்கிறது. இப்படிப்பட்ட உணர்ச்சி நிறைந்த மனிதத் தன்மையை அடிப்படையாகக் கொண்ட 1930ல் இருந்த அசாமிய வாழ்க்கையின் வர்ணனையை பீனா பருவாவின் நாவலான '**ஜீவனோர் பாடவ்**' (வாழ்க்கைப் பாதையில்) (194[illegible])வில் காணலாம். அந்த நாவலில் நடையும் பொருளும் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு சூழ்நிலைகளையும் பாத்திரங்களையும் நம்பத்தக்கதாகவும், வர்ணனைகளைச் செறிவு நிறைந்ததாகவும் ஆக்கியுள்ளன.

## 2

ஆகஸ்டு புரட்சிக்கும் இரண்டாம் உலகப் போருக்கும் பிறகு நாவலாசிரியர்களின் இரண்டு தலைமுறையினர் தோன்றியுள்ளனர். போர், சுதந்திரம், புரட்சி முதலிய நிகழ்ச்சிகள் முதல் தலைமுறையின் கற்பனையைப் பெரிதும் பாதித்திருந்தன. இரண்டாம் தலைமுறை இதையெல்லாம் கேட்டு அறிந்து கொண்டது. அது துன்பமும் இன்பமும் கலந்த சுதந்திரப் போராட்ட உணர்வை நேரடியாக அனுபவிக்கவில்லை. மொத்தத்தில் இந்த எழுத்தாளர்களின் குழு ஒன்று உண்டு. இங்கே இடம் இல்லாததால் எல்லோரையும் பற்றிக் கூறவேண்டும் என்ற ஆர்வத்தை நான் அடக்கிக் கொள்கிறேன். ஒரு முக்கியமான சொந்தக் காரணத்தால் நான் என் நாவல்களைப் பற்றியும் சொல்லப் போவதில்லை.

நாவாலாசிரியர்களின் கவனத்தை மனிதாபிமானம் கவரத் தொடங்கியபோது, கதைக்கான பொருளைத் தேடும் முயற்சியில் (தனிப்பட்ட சுபாவம், நம்பிக்கை, அனுபவம் முதலியவற்றின் அடிப் படையில்) வாழ்க்கையில் அதுவரை கவனிப்பாரற்றுக் கிடந்த பகு திகள் முதலிடம் பெறத் தொடங்கின. ஆனால் எல்லா எழுத்தாளர் களும் தங்களுடைய படைப்புக்கு உண்மையான வாழ்வையேஆதார மாகக் கொண்டார்கள் என்று கூறுவதிற்கில்லை. பல நாவல்களில் காதலுணர்ச்சிக்கு முதலிடம் கிடைத்திருந்தது. ஜோகேஷ்தாஸின் நாவலான '**டாவர் ஆரு நாயீ**' (மேகம் அகன்று விட்டது, 1955) யில் அசாமியத் தேயிலைத் தோட்டத்தில வேலை பார்க்கும் ஒரு நாணயமான மனிதரின் பண்புப் போராட்டம் பற்றிய கதை, உலக யுத்தத்தால் நேரிடையாக ஏற்பட்டிருந்த உயர் பண்புகளின் அழிவின் அடிப்படையில் சித்திரிக்கப் பட்டுள்ளது. ரசுை பருவா (பீனை பருவா அல்லது டாக்டர் பிரிசிகுமார் பருவா) வின் '**சேஉஜி பாநததர் காஹினீ**' என்ற நாவலில் (பசுமையான இலைகளின் கதை, 1959). ஒரு தேயிலைத் தோட்டத்தின் கூட்டு வாழ்க்கை முறையிலுள்ள உணர்ச்சி மிக்க ஆண்—பெண் உறவுகளும் எதிர் மாறான கலாசாரமும் உள்ளம் கவரும்படி சித்திரிக்கப் பட்டுள்ளன. புகழ் பெற்ற சிறு கதை ஆசிரியரான சையத் அப்துல் மாலிக் சுதந்திரத்திற்குப் பிறகு நாவல் எழுதத் தொடங்கினர். அவர் ஒரு தனி நடையையும் ஒரு இன்ப உணர்வினையும் தன் நாவல்களில் புகுத்தியிருப்பது அவர் நாவல்களைப் பார்த்தால் நன்கு தெரிய வரும். '**சூரஜ் முக்கீர் ஸ்வப்ன**' (1950) என்ற நாவல் முஸ்லிம் கிராம

வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகிறது. உண்மையான கிராமியப் பண்புகள் நிறைந்த நாவலுக்குத் தேவையான எல்லாச் சிறப்புகளையும் இந்த நாவலில் காணலாம். **'அதோரி ஆத்மார் காஹினீ'** என்ற நாவலில் சமூகக் கொடுமைகளால் துயருறும் தலைவி இறுதியில் இன்பம் பெறுகிருள். இந்நாவலில் உயிருள்ள சம்பாஷணையும் எதிர்மாருன கதையும் பிணைக்கப் பட்டுள்ளது. கேருதாஸின் நாவலான **'ஸான்ஜுயீ கேதீ'** (கானல் நீர்) யில் படித்தவளும் வீட்டை விட்டு வெளியேற்றப் பட்டவளுமான ஒரு பெண்ணின் மன வேதனையைக் காணலாம். பிரபுல்லதத்த கோஸ்வாமியின் நாவலான **'கேசா பாத்தர் காப்னீ'** (நடுங்கும் இதழ்கள், 1950) யில் ஆதிவாசி வாடகைக் காரர்களுடன் இருந்துகொண்டு இன எதிர்ப்பையும் சிற்றின்ப சுகத்தையும் ஒன்ருக அனுபவிக்கும் படித்த வீட்டு முதலாளி மகனின் மன வேதனை சித்திரிக்கப் பட்டுள்ளது. ராதிகா மோஹன் கோஸ்வாமியின் நாவல்களான **'சாகனேயா'** (சுழல், 1954). **'பாமர்லீ'** (சூருவளி, 1958) என்ற படைப்புகளில் மேம்போக்கான நவீன நாகரிகமும், வாழ்க்கையை அது பாதித்திருக்கும் தன்மையும் சுட்டிக் காட்டப் பட்டிருக்கின்றன. ஹோமென் பர்கோஹாயீ ஆன்ம வாழ்வோடு பாலுணர்ச்சியை ஒரு ரகசியம்போல் காட்டுகிருர். அவருடைய நூலான **'தாந்திரிக்'** (1967) கில் அவருடைய இந்தப் போக்கைக் காணலாம். தனது முதற் படைப்பான **'சுபாலா'**வில் பர்கோஹாயீ ஒரு தாசியின் கதையை வேதனை உணர்வோடு சித்திரித்திருக்கிருர். நபகாந்த் பருவாவின் கிராமிய நாவலான **''கபிலிபரியா சாது''** வில் (கபிலிபரியாவின் கதை, 1954) உணர்ச்சி ததும்பும் ஒரு கிராமிய மொழியப் பெண்ணுை ரூபாயியின் உள்ளந்தொடும் கதையைக் காணலாம். அந்தப் பெண்ணின் தந்தை, தாய் யாரென்று தெரியவில்லை. அவளுடைய வளர்ப்புத் தந்தை அவளை வெள்ளத்தால் அழிந்து போன ஒரு இடத்திலிருந்து எடுத்து வந்தார். ஆசிரியர் கபாலியிடம் மனிதனுக்கு எட்டாத குணங்களைச் சித்திரித்துள்ளார். சந்திர பிரசாத் சைகியாவின் நாவலான **'ஏ தின்'** (ஒரு நாள், 1961) கருத்து செறிந்த நவீனப் படைப்பாகும். அது தேசீயச் சுதந்திரம், முன்னேற்றம் என்ற பண்புகள் நிறைந்த ஒரு நாவலாகும்.

தற்பொழுதுள்ள அசாமிய நாவலாசிரியர்கள் ஒரு பகுதியைச் சேர்ந்த வாழ்க்கையைச் சித்திரிக்க முயல்கிருர்கள் என்று நாம் முன்னரே குறிப்பிட்டு உள்ளோம். பத்ம பார்கதகியின் **'மனர் தபன்'** (மனக் கண்ணுடி), பசுபதி பாரத்வாஜின் **'உரந்த் மேங் தார் கர்'**

(பறக்கும் முதில்களின் நிழல்), நிருபமா **பர்கோஹாயீயின் ' சேயீ நதீ நிரபதி '** (இடையறுது ஓடும் ஆறு), ஓர் இளம் ஆசிரியரின் **' ஏயீ பதுமனீ '** ஒரு ஆதி வாசி இளைஞனை லும்மேர் **தாயியின் ' பிருதிபீர் ஹாஹிங் '** (பூமியின் எக்களிப்பு) முதலியவற்றில் இதனை நன்கு காணலாம். ' ஏயீ பதுமனீ ' தொழில் வளர்ச்சியால் பாதிக்கப்பட்ட கிராமிய வாழ்க்கையைச் சித்திரிக்கிறது. பெண் எழுத்தாளர்கள் தோன்றியிருப்பதும் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி. நிருபமா **பர்கோ** ஹாயினைத் தவிர **' ஆகாஷ் பந்த்தீ '** யின் ஆசிரியையான நீலிமா தத்தும், **' உத்தராயன் '** என்ற படைப்பின் ஆசிரியையான ப்ரவீணு சைகியாவும் சிறந்த எழுத்தாளர்களாவார்கள். மஹம்மத் பியார், நிரோத் சௌதரி, ஹிதேஸ்ப **தேகா**, குமார் கிஷோர் முதலிய சிறந்த புகழ் வாய்ந்த எழுத்தாளர்கள் பலர் இருக்கிறார்கள். ஏழ்மை, காதலுணர்ச்சி, பாலுணர்வு முதலிய பொருள்களைக் கொண்டு பல பொருளற்ற வியாபார முயற்சிகள் செய்யப் பட்டுள்ளன. ஆனால் இவற்றில் பல கலை வரிசையில் இடம் பெறக் கூடியவை அல்ல.

3

நாவலிலக்கியத்தில் லக்ஷ்மீ நந்தன் **போரா** இப்பொழுது சிறிது காலமாகத்தான் இடம் பெற்றுள்ளார். அவருடைய படைப்புகளில் வெவ்வேறு தன்மைகளைக் காணலாம். சில நாவல்களில் பாலுணர்ச்சியைப் பெரிதும் காண்கிறோம். அவருடைய நாவல்களையெல்லாம் கலைப்படைப்புகள் என்று கருத முடியாது. ' கங்கா சில் நீர் பாகீ ' (கங்கைப் பருந்தின் சிறகுகள், 1965) என்ற இந்த நாவலில் காணப்படும் நவீன நாகரிகத்தால் பாதிக்கப்பட்ட கிராமியக் காட்சி, அவருடைய ஆரம்ப காலத்துச் சிறுகதைகளை நினைவூட்டுவதாக இருக்கிறது. அசாமிய நாவல் தோன்றியதிலிருந்து ஆசிரியர்கள் பெண்களுடைய உணர்வுகளைப் பலவாருகச் சித்திரித்திருக்கிறார்கள். அந்தப் போக்கை இந்த நாவலிலும் காணலாம். வாசந்தியின் பாத்திரப் படைப்பு இயற்கையாக அமைந்துள்ளது. அவளுடைய துன்பநிலை சூழ்நிலைக்குத் தக்கவாறு ஏற்பட்டிருந்தும் மனிதப் போக்கையும் காரணமாகக் கொண்டுள்ளது. ஆண் படைப்புகளில் தனஞ்சயன் மற்ற படைப்புகளில் வருபவர்கள் போலத்தான் இருக்கிறான்; குறிப்பாக, ' கபிலிபரியா சாது ' வில் வரும் ரூபாயியை நினைவு படுத்துகிறான். **போக்ராம்**, மதுரா, இவர்களுடைய பாத்திரப்

படைப்பில் மட்டும் ஏதோ குறையிருப்பதாக எனக்குத் தோன்று கிறது. முக்கியமாக அவன் வேசி வீட்டிற்குப் போகும் பொழுதும் திருட்டுத்தனமாகக் கஞ்சாவைக் கொண்டு வருவதிலும், வெளியே அனுப்புவதிலும் அவன் ஈடுபடும்பொழுதும் இந்தக் குறை தென்படு கிறது. மதுரா எதிர்பாராத விதமாகத் தீய நிகழ்ச்சியில் அகப் பட்டுக் கொள்வது எனக்குக் கதைப் போக்கிற்குத் தேவையான தென்று படவில்லை. மாறாக வெளிக்காரணங்களால் தூண்டுவிக்கப் பட்ட ஒரு நிகழ்ச்சி என்றுதான் எனக்குப் படுகிறது. ஆசிரியர் தம் ஊரை நினைத்துக் கொண்டு சோணுப் ஆற்றங்கரை வாழ்க்கை சுதந்திரத்திற்குப் பிறகு காணப்படும் தேர்தல் அரசியல், முன்னேற்ற வேலைகள், நவீன வளர்ச்சி முதலியன பற்றிக் கூறும் பகுதி இந் நாவலில் உள்ளத்தைத் தொடும் பகுதியாகும். இவை உண்மை நிலையின் ஒரு பகுதியேயாயினும், தத்ரூபமாகச் சித்தரிக்கப் பட்டுள்ளன.

இந்தச் சுருக்கமான கண்ணோட்டத்தினால் போராவின் நாவல்கள் அவருடைய பிரதேசத்தில் வேர் பாய்ந்துள்ள வட்டார நாவல்கள் என்பதும், அசாமிய நாவல்களுக்கே உரிய நடையின் பிரதிநிதிகள் என்பதும் தெரியவரும். இது பலவற்றில் ஒன்றாகும். அசாமிய மொழி தெரியாதவர்கள் கூட இதைப் படித்து அசாமிய கிராமிய வாழ்வைப் பற்றி ஓரளவு தெரிந்து கொள்ள இயலும்.

—பீரேந்திரகுமார் பட்டாசார்ய

கார்குலி
கௌஹாத்தி-4

# ஒன்று

அந்த மனிதன் முந்தாநாள் கூட வாசந்தியின் வீட்டிற்கு வந்திருந்தான். அவன் இதுவரை அவர்களது வீட்டிற்கு மூன்று முறை வந்திருக்கிறான் என்பது வாசந்திக்கு நினைவு வந்தது. ஆனால் அவனைப் பற்றி அவளுக்கு ஒன்றுமே தெரியாமலிருந்தது. அவன் யாராக இருக்கக்கூடும்; தாயிடம் கேட்கலாமா? அதுவும் முடியாது. இவள் இதைப்பற்றி அவளிடம் கேட்கமுடியாது. தாய் திட்டுவாள். அவனைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கான அவளுடைய ஆர்வத்தைக் கண்டு "என்ன, அவனைப்பற்றி இவ்வளவுக் கேட்கிறாயே! அவனை உனக்குப் பிடித்துவிட்டதா?" என்று தாய் கேட்டாலும் கேட்டுவிடலாம். ஆமாம், அவளுக்குக் கட்டாயம் சந்தேகம் ஏற்படத்தான் செய்யும். அந்த மனிதன்—இல்லை—அந்த இளைஞன் எங்கிருந்துதான் வருகிறானோ? ராயடீங்க்யாவிலிருந்து வருகிறானோ? அவன் பாப்சிலாவைச் சேர்ந்தவனாகவும் இருக்கலாம். அல்லது ஜூல்மயீ கிராமத்து பாதுலாபாயின் வீட்டைச் சேர்ந்தவனோ? கல்பியாவிலுள்ள முங்கத் சாடோலாவின் மகனாகவும் இருக்கலாம். அவன் எந்த ஊரைச் சேர்ந்தவனோ? ஆனால் நமது சோனுய் ஆற்றின் இந்தக் கரையைச் சேர்ந்தவனில்லை. அவள் சோனுய் ஆற்றின் வடக்குக் கரையிலுள்ள பல கிராமங்களை ஞாபகப் படுத்திக்கொண்டாள். ஜூல்மயீ, பாப்சிலா, ராயடீங்க்யா, டேவடா, கூஞ்சீ, சாபுக்தரா, கஜாம்வா-இன்னும் எத்தனையோ கிராமங்கள் இருக்கின்றன. அவர்களுடைய வீட்டிற்கு இதற்கு முன்னும் பலபேர் வந்திருக்கிறார்கள்; இன்னும் பலபேர் வரவும் கூடும். அவளுடைய அண்ணன் ஒரு வியாபாரி. ஆகையால் அவனுக்குப் பலவிதமானவர்களோடு பழக்கம் உண்டு. அவன் ஜமைபைத்அலி முன்ஷியிடம் எவ்வளவு அன்புடன் பழகுகிறானோ அதுபோலவே கூஞ்சியைச் சேர்ந்த பலூகா கலிதாவிடமும் பெரிதும் மரியாதையுடன் நடந்து கொள்கிறான். அவனுக்கு யாரிடம் எத்தனை அன்பு என்று

சொல்லுவது மிகவும் சிரமமானதாகும். வியாபாரியின் பேச்சுவார்த்தையிலிருந்து இதைக்கண்டு பிடித்துவிட முடியாது. இந்த இளைஞனிடமும் போக்ராம் பெரிதும் அன்பு காட்டுகிறான் என்பதை வாசந்தி உணர்ந்தாள்.

அந்த மனிதனுடைய பெயர், விலாசம் ஒன்றுமே தெரியாமலிருந்தும் அவனைப்பற்றி அவள் ஏன் இவ்வளவு யோசித்துக்கொண்டிருக்கிறாள் என்பதை நினைத்ததும் அவளுக்கு வெட்கமாக இருந்தது. எதிர்பாராதவிதமாக அவளுடைய உள்ளம் கவலையில் ஆழ்ந்துவிட்டது. நெசவு செய்யப்பட்ட சவுக்கத்தில் எஞ்சியிருக்கும் பூவேலையை எப்பொழுது செய்து முடிப்பது? பாப்சிலாவிலுள்ள ருகோணி சித்தி வீட்டில் நடக்கும் பஜனைக்கு ஒரு நாள் முன்னதாகப் போவதா, அல்லது இரண்டு நாள் முன்னதாகப் போவதா என்றெல்லாம் அவள் காலையிலேயே சிந்தித்திருக்கவேண்டும். அவளோ தன் உள்ளத்தின் அடித்தளத்தில் அந்த இளைஞனையே தேடிக்கொண் டிருந்தாள். நீர் வெள்ளத்தில் படகின் துடுப்பைப் பிடிப்பது எவ்வளவு கஷ்டமோ அது போலவே உள்ளத்தைக் கட்டி வைப்பதும் மிகவும் சிரமமானதாகும்.

காச்மாரீ குளத்தின் ஆழத்தை அளவிட முடியாததுபோல் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களுக்கும் கரை காண முடியாது என்று யாரோ சொல்ல அவள் கேட்டிருந்தாள். ஊரும் பேரும் தெரியாத ஒரு ஆடவனிடம் தோன்றிய இந்த எதிர் பாராத கவர்ச்சி இளமை நிரம்பிய அவளுடைய உள்ளத்தைச் சஞ்சலப்படுத்தி விட்டது. அவளுடைய உள்ளத்தில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அவளுடைய இயல்பான உள்ளம் வேறு எதைப் பற்றியுமே நினைக்க மறுத்துவிட்டது. தினசரி வீட்டைப் பெருக்குவது, மின்சார வேகத்தில் வீட்டு வேலைகளைச் செய்வது, வேகமாகக் காலால் தறியை மிதித்து தறியிலே ஒரு கிளர்ச்சியை உண்டாக்குவது, உரலிலே இரண்டு வேளை நெல் குத்தி அக்கம் பக்கத்தவர்களுக்கெல்லாம் வீட்டிலே வாளிப்பான உடற்கட்டு பொருந்திய குறுகுறுப்பான ஒரு வாலிபப் பெண் இருப்பதைத் தெரிவித்துக்கொள்வது இதெல்லாம் அவளுடைய தினசரி வேலைகளாக இருந்தன. ஆனால் இன்று ஏனோ அவளுடைய உடலில் உலகத்திலுள்ள சோம்பலெல்லாம் ஒன்று சேர்ந்து குடிகொண்டுவிட்டது போலிருந்தது. தறியில் நூல் முடிச்சு ஆடிக்கொண் டிருந்தது. தறியை மிதித்துப் பழகிய அவளுடைய கால்கள் ஏனோ இன்று அசைய மறுத்தன.

ஞாயிறு உதித்து வெகு நேரமாகிவிட்டது. வெயில் உடலில் பட்டுக்கொண் டிருந்தது. இன்று எத்தனையோ வேலைகள் அப்படியே கிடந்தன. நெல் குத்தியாக வேண்டும். அன்னங்களை வெளியே போகவிட்டு அவைகளின் இருக்கையைச் சுத்தம் செய்தாக வேண்டும். மேடையை மெழுக வேண்டும். வீட்டிலுள்ள மற்றவர் களெல்லோரும் அவரவர்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். அண்ணன் மகன் தேவகனும், மகள் சிகூணியும் முற்றத்தில் விளை யாடிக்கொண் டிருந்தார்கள். அவர்கள் கையை விரித்துக் கொண்டு சுற்றிச்சுற்றிவந்து விழுந்துகொண் டிருந்தார்கள். அண்ணன் தராசையும் படிக்கல்லையும் சைக்கிளில் கட்டிக்கொண்டு காலையிலேயே டல்புரியா கிராமத்திற்குப் போய்விட்டான். அண்ணி பின்புறத்தில் கயிற்றில் துணிகளைக் காயப் போட்டுக் கொண்டிருந்தாள். கிழத்தாய் முற்றத்தில் உட்கார்ந்துகொண்டு 'பால் பால், பால் பால், பால் நாச்சே மதனகோபால்' என்று முணுமுணுத்துக்கொண் டிருந்தாள். ஆனால் அவள் மட்டும் நெல் கிடங்குக்கு எதிரிலே ஒரு பெரிய கட்டைமேல் உட்கார்ந்திருந்தாள். அவள் தன் கால் கட்டைவிரலால் மண்ணைக் கிளறிக் கொண்டிருந் தாள். அப்பொழுது அந்த வீட்டு வழியாக யாரோ ஒரு கிழவன் போயிருக்க வேண்டும். தேவகனும் சிகூணியும் துஷ்டக் குழந்தை களாக இருந்தார்கள். அவர்கள் சுற்றிச் சுற்றி விளையாடுவதை விட்டுவிட்டு 'மூங்கில் குச்சி, இலந்தைச் சக்கை, எங்கிருந்து வந்தது இந்தக் கோபக்காரக் கிழம்' என்று கூச்சல் போட்டுக் கொண்டிருந் தார்கள். அத்துடன் அண்ணியும் 'உங்கள் வாய் நீண்டு கொண்டே போகிறது. வழியிலே போகிறவர்களை யெல்லாம் தொந்தரவு செய் வதற்கு உங்களுக்குப் பலன் கிடைத்தே தீரும்' என்று கத்திக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அண்ணி அவளருகில் வந்தாள். ஒரு முறை அவளைத் தலையிலிருந்து கால்வரை உற்று நோக்கினாள். நிலத்தைத் தொட்டுக்கொண் டிருந்த புடவைத் தலைப்பை இடுப்பில் செருகிக்கொண்டு "என்ன வாசந்தி! இடித்த பிள்ளையார் மாதிரி உட்கார்ந்திருக்கிறே! வெயில் தலைக்கு மேலே ஏறிவிட்டது. இன்னும் எத்தனை வேலை அப்படியே கிடக்கிறது தெரியுமா?" என்று பட்டும் படாதுபோல் சொன்னாள்.

வாசந்தி எழுந்து நின்றாள். அவளுக்கு வெட்கமாக இருந்தது. அண்ணி அவள் நிலையைப் புரிந்து கொண்டுவிட்டாளோ என்னவோ? வாசந்தி வேலையையெல்லாம் விட்டுவிட்டு இது போல்

உட்கார்ந்திருந்து அண்ணி பார்த்ததே இல்லை. தவறை மறைப்பதற்காக வாசந்தி அண்ணியிடம், "இன்னைக்கிக் காலையிலிருந்தே உடம்பு சரியில்லை. தலைவேறு கனத்துக்கொண் டிருக்குது" என்று கூறி வைத்தாள்.

அண்ணி நேரம் பார்த்து "அப்படியா? இது மனோவியாதி என்று நான் நினைத்துக்கொண்டுதான் இருந்தேன். இந்தக் காலத்து வாலிபப் பெண்களுக்கு மனோவியாதிதான் அதிகமாக வருகிறது. ஆமாம், இது வாலிபத்தின் குற்றம்தான்" என்று கேலியாகக் கூறினாள்.

"கேலி ஏன் பண்ணணும் அண்ணி? நான் ஒண்ணு சொன்னா நீ ஒண்ணு நினைச்சுக்கிறே!"

"நீ என்ன எனக்குச் சொல்லப்போறே!"

"உனக்கு என்ன தெரியும்?"

"நீ ஒரு நல்ல பொண்ணு. நாங்களெல்லாம் முட்டாள்கள்தான். இதைத்தவிர வேறு என்ன எனக்குத் தெரியும்?"

இவ்வாறு சொல்லிக்கொண்டே அண்ணி சிரித்துவிட்டாள். ஆனால் வாசந்தியால் சிரிக்கமுடியவில்லை. அவளுடைய உள்ளத்தில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது.

"அண்ணி, தேவகனின் இரண்டு துணிகள் துவைக்க இருக்கிறதல்லவா?"

"அது கிடக்கட்டும். இன்று உனக்கு விடுமுறை கொடுத்தாகிவிட்டது. பிறர் வீட்டுக்குப் போனப்புறம் இது போல கவலையில்லாமல் உட்கார்ந்து யோசிக்க நேரம் எங்கே கிடைக்கப் போவுது?"

"அண்ணி! உனக்கு இன்று என்ன வந்துவிட்டது?"

"இப்படிப் பாசாங்கு பண்ணுவதால் என்ன பிரயோசனம்? முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கலாமா?" என்று சொல்லிக்கொண்டே அவளுடைய பதிலை எதிர்ப்பார்க்காமலேயே அண்ணி வீட்டிற்குள் போய்விட்டாள். "பூல் ஆச்டே பூலீ, கதம் ஆச்சே ஹாலீ, கீய ஆயிதேவ் சிந்த்தா கரா ராம் நாறே புலீ" என்ற திருமணப் பாட்டின் இரண்டு வரிகளை அண்ணி பாடுவது அவள் காதில் விழுந்தது.

அண்ணி உள்ளே போய் அவளைக் கேலி பண்ணுவதற்காகத்தான் அந்தத் திருமணப் பாட்டைப் பாடுகிறாள் என்பதை அவள் புரிந்துக் கொண்டாள். இன்று அவள் உள்ளத்தில் அண்ணியின் பால் ஒரு சிறப்பான அன்பு நெகிழ்ந்தது. இந்த அண்ணியிடம்தான் எவ்வளவு அன்பும் மகிழ்ச்சியும் குடிகொண்டிருக்கிறது! அவளிடம் துன்பம் என்ற சொல்லுக்கே இடமில்லாமலல்லவா இருக்கிறது! ஆமாம்,

அவள் ஏன் துன்பப்படப் போகிறாள்? **போக்ராம்** அவள்மீது எவ்வளவு அன்பைச் சொறிகிறான்? ஆனால் அண்ணி மற்றவர்களின் உள்ளத்தை எவ்வளவு விரைவில் புரிந்து கொள்ளுகிறாள் என்பது வாசந்திக்கு இன்றுதான் தெரிய வந்தது.

அவர்களுடைய வீட்டின் பின்புறத்தில் ஒரு பெரிய தோப்பு ஒன்று இருந்தது. அந்தத் தோப்பில் ஐம்பது பாக்கு மரங்கள் இருக்கும். இரண்டு நாவல்பழ மரங்களும் உண்டு. பாப்சிலாவிலிருந்து கொண்டு வந்து நட்ட இரண்டு தென்னை மரங்களில் தேங்காய்கள் காய்த்திருந்தன. அங்கேயிருந்த மூன்று பப்ளிமாஸ் மரங்களில் ஒன்றில் மரங்கொல்லிக்கொடி ஒன்று சுற்றிக்கொள்ளத் தொடங்கியிருந்தது. அந்தத் தோப்பு மிகவும் சுத்தமாக இருந்தது. அங்கே உள்ள தரையிலே ஊதிவிட்டு சாப்பாடே சாப்பிடலாம்; அவ்வளவு சுத்தமாக இருந்தது தரை. உள்ளம் வாடும்பொழுதெல்லாம் வாசந்தி அந்தத் தோப்பில்தான் வந்து உட்காருவது வழக்கம். அங்கே அவள் ஒரு புல்வெட்டும் கருவியைக்கொண்டு உருளைக்கிழங்கு, இஞ்சி, மஞ்சள் முதலிய செடிகளுக் கருகிலேயுள்ள புல்லை வெட்டுவது வழக்கம். இன்றும் அவள் பின்புறத்திலுள்ள அந்தத் தோப்பிற்குள் வந்தாள். அவளைப் பார்த்ததும் ஒரு அணில் தலையை அசைத்துக்கொண்டு அம்பைப்போல வேகமாகப் பாக்குமரத்தின் உச்சியில் ஏறிக்கொண்டது. போலீஸ்காரனின் தொப்பியைப் போன்ற தலையைக் கொண்ட ஒரு பறவை 'டேக்கேரா' மரத்தின்மேல் சிறிதுநேரம் கத்திவிட்டு இப்பொழுது ஓய்ந்துவிட்டது. கண்மாமாவின் தோப்பிலுள்ள மூங்கில் மரக்கூட்டத்தைக் கவனித்த பொழுது "ஜஹான்மால்"[1] ஒன்று ஒரு மூங்கில் மரத்திலிருந்து மற்றொரு மரத்தின் பக்கம் ஊர்ந்துகொண் டிருப்பது அவள் கண்களில் பட்டது. ஒருவேளை இவைகளெல்லாம் அவளுடைய உள்ளப்போக்கை உணர்ந்து கொண்டு விட்டனவோ என்று வாசந்தி எண்ணினாள். பறவைகளும் மிருகங்களும் எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளக்கூடிய திறமை கொண்டவை. ஆகையால் அவை அவளுடைய உள்ளத்தைப் புரிந்துகொண்டுதான் அவளுக்கு வரவேற்பு அளிக்கின்றன என்றால் இதில் வியப்பு ஏன் ஏற்படவேண்டும்! ஆனால் அவள் இதையெல்லாம் ஏன் எண்ணிக் கொண்டிருக்கிறாள்? மனிதர்கள் இவைகளையெல்லாம் பற்றி நினைப்பதுண்டா என்ன? அவள் என்ன பைத்தியமாகி விட்டாளா? இதெல்லாம் பற்றி நினைப்பது அறியாமையே யாகும்.

1. மரத்தில் ஏறும் ஒரு சிறுத்தை அதன் உடலில் அசாமின், 'ஜோஹா' அரிசியின் மணம் கமழும்.

ஆனால் சோனாய் பரியா கிராமத்துப் பெண் இப்படியே நினைத்துக் கொண்டுதான் இருந்தாள். சோனாய் ஆற்றின் அருகிலுள்ள மரங்கள், செடிகள், பறவைகள், மிருகங்கள், பரந்த உள்ளங்கவரும் இயற்கை இவையெல்லாம் அவளுடைய உள்ளத்திற்கு அருகிலே இருப்பதாக அவளுக்கு ஒரு உணர்ச்சி. இவைகளெல்லாம் இயற்கையோடு ஒன்று பட்டவையாகும். ஆதலால்தான் குயிலும் தாழையும் உள்ளத்து உணர்வுகளையெல்லாம் வெளியிடுகின்றன. சோனாய் ஆற்றின் ஒளி நிரம்பிய நீர்ப் பெருக்கில் வாழ்க்கை நாதத்தைப் பெறுகிறது. அவள் சோனாய் ஆற்றை விட்டுப் பிரியமாட்டாள். அந்த ஆற்றிலிருந்துதானே அவள் வாழ்க்கையின் உபதேசத்தைப் பெறுகிறாள். சோனாய் ஆறு அவளுடன் பேசுவதாகவும், ஆடுவதாகவும், சிரிப்பதாகவும், அழுவதாகவும் அவளுக்குத் தோன்றுகிறது.

தோப்பின் ஓரத்தில் முப்பது அடி நீளமான நிலத்தில் மூங்கில் மரங்கள் இருக்கின்றன. இரண்டு இடத்தில் மட்டுமே உயர்ந்த மூங்கில் மரங்கள் இருக்கின்றன. மற்ற மரங்கள் எல்லாம் சிறிய மரங்களே. அவைகளுக்கு இடையிலே உள்ள பாதை வழியாக சோனாய் ஆற்றங்கரையில் இறங்கலாம். வீட்டின் பின் புறத்திலுள்ள முற்றத்திலிருந்து சோனாய் ஆற்றைப் பார்க்கலாம். அங்கேயிருந்து இரண்டே வினாடியில் சோனாய் ஆற்றை அடைந்து விடலாம். ஆதலால் தண்ணீர் தேவைப்படும்பொழுதெல்லாம் அண்ணிக்கும் வாசந்திக்கும் தண்ணீர் எடுத்து வருவதில் எந்த விதமான கஷ்டமும் தோன்றுவதில்லை. எந்த ஆடை அணிந்திருந்தாலும் அந்த வழியாகப் போகலாம். சோனாய் ஆற்றிற்குப் போவதற்கு மற்றவர்களுடைய வீட்டைக் கடந்தோ அல்லது பொதுப் பாதை வழியாகவோ போக வேண்டிய தேவை கிடையாது. அவர்கள் வீட்டுப் பின்புறமே சோனாய் ஆறு ஓடுகிறது. ஹாதீசுங்க் கிராமத்து மக்களுக்கு அவர்கள் வீட்டுப் பின்புறத்துக் கிணறு எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டதே வாசந்திக்கு சோனாய் ஆற்றங்கரை. அந்தக் கரைக்கு ‘ டனுவாகரை ’ என்ற ஒரு பெயரும் உண்டு. அவர்களுடைய ஒரு பெரிய தாத்தாவின் பெயர் டனுவா கலிதாவாக இருந்ததாம். அவர் மீன் பிடிப்பதில் ஒரு பெரிய நிபுணர். அவரைப்போல் வலைவீசி மீன் பிடிப்பவர் அந்த வட்டாரத்திலேயே யாரும் தோன்றியதில்லை என்று சொல்லுகிறார்கள். அந்தக் கரையில்தான் அவர் வலை வீசிப் பிடித்த ஒரு முழம் நீண்டதும் பெருத்ததுமான மீனை அவர் உயிரோடு கட்டி வைப்பது வழக்கமாம்! இது போன்ற எத்தனையோ மீன்களை அவர்

வைத்து வந்தார். அவர் பெரும் புகழ் பெற்றவராக இருந்தார். அவர் பெயரால்தான் அந்தக் கரை அழைக்கப்படுகிறது.

வாசந்தி நீராடுவதற்காக ஆற்றங்கரையை அடைந்தாள். அக்கரையில் எந்த கிராமம் இருக்கக் கூடும் என்று அவள் கண்ணுக் கெட்டிய மட்டும் பார்க்க முயற்சித்தாள். இது கோல்பியா; அது சாயுக்தரா; கண்களுக்கு நேராக இருப்பது பாப்சிலா. அவள் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து சோணய்க்கு அக்கரையில் ஏறக் குறைய நாலு 'பேஊ' தூரம் (தண்ணீரில் படகிலேறி ஒரு முறை துடுப்பு வீசினால் எவ்வளவு தூரம் போகமுடிகிறதோ அது 'பேஊ' என்று கூறப்படுகிறது.) கிழக்குப் பக்கமாக இருக்கும் கரையிலிருந்துதான் அந்த இளைஞன் ஆற்றைக் கடக்கிறான். பெரும்பாலும் அவன் சைக்கிளை எடுத்துக்கொண்டுதான் ஆற்றைக் கடக்கிறான். ஆனால் அவன் எங்கிருந்து வருகிறானோ? பாப்சிலா, கோல்பியா, கூஞ்சி, கோஹரெர்வா ஆடி முதலிய கிராமங்களில் எந்த கிராமத்தைச் சேர்ந்தவன் அவன்? அவன் பெயர் என்ன? அவன் வீட்டில் யார்யார் இருக்கிறார்கள்? அவன் திருமணம் ஆனவனா, இல்லையா? அவளுக்கு அவனைத் தெரியாது. ஒருநாள் அவன் அவளுடைய அண்ணனைத் தேடிக்கொண்டு வந்தான். அவன் சைக்கிளை மூங்கில் கதவில் அண்டக் கொடுத்துவிட்டு வேகமாக வீட்டின் கூடத்துப்பக்கம் வந்தான். அவளுக்கு இன்று அந்த நிகழ்ச்சி நன்றாக நினைவிற்கு வந்தது. வேட்டியைக் கச்சம் போட்டுக் கட்டியிருந்தான். கொக்கைப் போல வெள்ளையான சட்டையும் அணிந்திருந்தான். வாசந்தியின் அண்ணனைப்போல அவன் மார்பின் மேற்புறத்திலுள்ள பித்தானும் திறந்திருந்தது; சட்டைக் கைகளை அவனும் மேல் பக்கம் மடித்திருந்தான். அண்ணனின் முகத்தைப் போல் அவன் முகத்தில் அரும்புத் தாடியைக் காண வில்லை. அவனது முகம் வழவழப்பாக இருந்தது. மாநிறமான அழகிய முகத்தில் கரும் மீசை காணப்பட்டது. முகம் சிவப்பாக இருந்தது. நல்ல உயரம். குரலும் நல்ல மிடுக்காக இருந்தது. ஆண் மகனின் குரல் அப்படித்தான் இருக்கவேண்டும். அவனுடைய மிடுக்கான குரலில் 'ககனு'வின் (மூங்கிலாலான ஒரு சிறிய கிராமிய வாத்தியம்) ஒரு தனி ஸ்வரம் ஒலித்தது. அப்படிப்பட்ட குரலுள்ள ஆடவர்களுக்குத் தம்மீது பெருத்த நம்பிக்கை இருக்கும்; மற்றவர்களும் அப்படிப்பட்டவர்கள் மேல் நம்பிக்கை கொள்ளவேண்டும் என்று தோன்றுகிறது. அப்படிப்பட்ட குரலைக் கேட்டால் எந்தப் பெண்ணின் இதயம்தான் துடிக்காது?

அவன் வீட்டுவாயிற்படியில் காலை வைத்ததும் "வீட்டில் யார் இருக்கிருங்க? போக்ராம் இல்லையா!" என்று கேட்டான். அருகிலுள்ள அறையி லிருந்துகொண்டு வாசந்தி, "இல்லை, ஏன் கேட்கிறீர்கள்" என்று விடை யளித்தாள்.

"அப்படியென்ருல் நீயே ஒரு விஷயத்தைக் கேட்டுக்கொள்"

வாசந்தி கூடத்திற்குள் வந்தாள். "நீதான் வாசந்தியா! போக்ராம் தினசரி வாசந்தியைப் பற்றியே பேசுவார். நான் ஏதோ சின்னப்பெண்ணுக இருக்கும் என்று நினைத்துக்கொண் டிருந்தேன். ஆனல் நீயோ வீட்டையே அழகுபடுத்தக்கூடிய ஒரு பெரிய பெண்ணுக அல்லவா இருக்கிருய்!"

"உட்காருங்கள்"

"இல்லை, உட்கார முடியாது. வேலை ஏராளமாக இருக்கிறது. ஒரு செய்தியைச் சொல்லிட்டுப்போக வந்தேன். பாப்சிலாவிலிருந்து சாகீராம் தன்னிடத்தில் ஒரு வண்டி நெல் இருப்பதாகவும், நாளைக்குள் அதை நிறுத்து எடுத்துக்கொண்டு போகச் சொன்னதாகவும் நீ உன் அண்ணனிடம் சொல்லு."

"நல்லது, சொல்லிவிடுகிறேன்." அந்த இளைஞன் வந்தாற் போலவே வேகமாகப் போய்விட்டான். அவனுடன் பேசிக் கொண்டிருந்த அந்தக் குறுகிய நேரத்தில் அவள் அவனுடைய முகத்தையே பார்த்துக்கொண் டிருந்துவிட்டாள். பெயரைக் கேட்க வேண்டும் என்ற நினைவு கூட அவளுக்கு இல்லாமல் போய்விட்டது. கூடத்துப் பக்கம் அவள் வந்ததை அண்ணியும் கவனித்திருந்தாள். ஆனல் அவள் அண்ணியிடம் அவன் யார் என்று கேட்கவில்லை. அண்ணி பெரிய குறும்புக்காரி. அவளிடம் கேட்டால் விடை கொடுப்பதற்கு முன்னுலேயே "நன்ருய் கேட்டியே! உனக்கு அவனைப் பிடித்துவிட்டதா?' என்று கேட்டுவிடுவாள்.

அவன் மறுபடியும் ஒரு முறை வந்திருந்தான். ஆனல் அன்று அவன் அண்ணனிடமே பேசிக்கொண் டிருந்தான். வாசந்தி அவர்களுக்குத் தேனிர் கொடுத்துவிட்டு வந்துவிட்டாள். ஆனல் அன்று அவளுடைய உள்ளத்தில் ஒரு இன்பமான வேதனை தோன்றிற்று. அவன் பேசிக்கொண்டே இரண்டு தடவை மெதுவாக அவளைப் பார்த்தான். ஒரு தடவை அவனுடைய அழகிய கண்களின் ஓரப் பார்வை வாசந்தியின் மார்பகத்தில் வந்து பட்டது. அப்பொழுது வாசந்தியிடம் உலகத்தின் வெட்கமெல்லாம் வந்து குடி புகுந்து கொண்டது. கவனக் குறைவினுல் அவள் வாயிற்படியில் தடுக்கி

விழுந்தாள். அதனால் அவளுக்கு இன்னும் அதிகமாக வெட்கம் ஏற்பட்டது.

சோனைப் ஆற்றில் முழங்கால் வரை இறங்கிக் கைகளால் தண்ணீரை மேலே தெளித்துக்கொண்டு உடல் முழுவதும் நனைந்த வாறே வாசந்தி இதையெல்லாம் நினைவு கூர்ந்துகொண் டிருந்தாள். நனைந்த உடலை வெயிலில் காயவைத்துக்கொண் டிருந்தாள். அவள் நீரில் முழுகிக் குளிப்பதையும் மறந்துவிட்டாள். அவன் கடைசி முறையாக முந்தாநாள் வந்திருந்ததைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள்.

அவள் கூடத்தில் பெருக்கிக்கொண் டிருந்தாள். அப்பொழுது அவன் அங்கே வந்து சேர்ந்தான் இம்முறை அவள் மிகவும் இயற் கையான முறையில் அவனை உட்காரச் சொன்னாள். அவன் ஒரு 'மோடா'வில் உட்கார்ந்து கொண்டான். விளக்குமாற்றைச் சுவ ரோடு ஒட்டியவாறு வைத்துவிட்டு அவளே அவனிடம் "அண்ணன் வீட்டிலே இல்லை. பூல்குடி கடை தெருவுக்குப் போயிருக்கிறார்" என்று கூறினாள். அண்ணி வீட்டிலில்லாததால் தானாகவே பேசும் தைரியம் அவளுக்கு வந்தது. மத்தியானம் பதோமண்டலின் வீட்டில் மூன்று ஆடுகள் வெட்டி விருந்து கொடுக்கப்படுவதாக இருந் தது. அண்ணி காய்கறி வெட்டுவதற்கு உதவியாக அங்கே போயி ருந்தாள். தேவகனும் சிகூணியும் மட்டுமே முற்றத்தில் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

"அப்படியென்றால் நீயே ஒரு விஷயத்தை அவரிடம் சொல்லிவிடு. அவர் நாளை பட்டணத்திற்குப் போவதாக என்னிடம் சொல்லியிருந் தார். இந்தக் காகிதத்தை உன்னிடம் கொடுக்கிறேன். இதில் சில மருந்துகளின் பெயர்கள் இருக்கின்றன. அதற்கான காசும் இதோ இருக்கிறது. அவரிடம் இந்த மருந்துகளை வாங்கி வரச் சொன்னதாகச் சொல்லிவிடு. நான் நாளை மறுநாளைக்குள் வந்து மருந்துகளை வாங்கிக்கொண்டு போகிறேன்."

இவ்வாறு சொல்லிக்கொண்டே அவன் ஒரு காகிதத்தையும் ஒரு ஐந்து ரூபாய் நோட்டையும் அருகிலிருந்த ஒரு சிறிய பலகைமேல் வைத்து விட்டான் வாசந்தி எல்லாவற்றையும் தன் கையில் எடுத் கொண்டாள். சில வினாடிகள் இருவரும் மௌனமாக இருந்தார்கள். இவ்வாறு பேசாமல் உட்கார்ந் திருப்பது நன்றாக இல்லை என்று வாசந்தி நினைத்தாள். கூடத்தில் நிலவிய அமைதியான சூழ்நிலையில் அவளுடைய பெருமூச்சு தணிந்துவிட்டது. இளைஞன் கெட்டிக் காரன்தான். கடைசியில் அவனே பொருத்த தன்னம்பிக்கையுடன்

இனிமையான குரலில், "வாசந்தி, வீட்டில் யாராவது வந்தால் நீ அவனை எதிரியென்று நினைக்கிறாயா ?" என்று பேசிவிட்டு உரக்கச் சிரிக்க முயற்சி செய்தான். அமைதியான அந்தக் கூடத்தில் எதிர் பாராமல் சிரிப்பின் ஒலி பரவிற்று. வாசந்தியின் உள்ளம் தெளிவு பெற்றது. அவள் தன் சிவந்த இதழ்களைச் சிறிது வளைத்துக் கொண்டாள். அந்தச் சிரிப்பு அவளுடைய வாழ்க்கையில் முதன் முறையாக அன்புணர்ச்சியைத் தோற்றுவித்தது போல் அவளுக்குத் தோன்றிற்று. அவனுடைய சிரிப்பு குற்றமற்றதாக இருந்தது. முன் பனிக் காலத்து சோனுய் ஆற்று நீரைப்போல் தூய்மையானதாக இருந்தது. ஆனால் அவனுடைய முதற் சிரிப்பு எவ்வளவு சிக்கலான தாகவும் பொருளடங்கியதாகவும் இருந்தது ! அதில் ஏதோ அறியாப் பருவத்து அன்புச் செங்குழம்பு பூசப்பட்டது போலிருந்தது.

"நீங்கள் உட்காருங்கள். நான் சிறிது தேனீர் சுடவைத்துக் கொண்டு வருகிறேன்." "தேனீர் வேண்டாம். அழகான பெண் இப்படிச் சிரமம் எடுத்துக் கொள்ளலாமா ? தேநீருக்குப் பதிலாக சிறிது நேரம் பேசிக்கொண் டிருக்கலாமே ! நான் வீட்டிலிருந்து வரும் போதே நன்றாகச் சாப்பிட்டுவிட்டு தான் வந்திருக்கிறேன். தேனீர் தயாரிக்கும் நேரத்தில் உன்னைப் பார்த்துக்கொண் டிருந்தாலே சந்தோஷமாக இருக்குமே !"

ஓர் ஆடவன் தன் அழகைப் புகழ்ந்து பேசுவதைக் கேட்டு வாசந்தி வெட்கத்தால் வதங்கி விட்டாள். அவள் தன் கால் கட்டை விரலால் தரையைக் கீறிக்கொண் டிருந்தாள். சிறிது நேரத்திற்குப் பிறகு "வெற்றிலை பாக்காவது போட்டுக்கொள்ளுங்களேன் !" என்று அவள் கேட்டாள்.

"நான் போட்டுக்கொள்ளாவிட்டால் உனக்கு வருத்தம் ஏற்படு மானால் போட்டுக்கொண்டு விடுகிறேன்" என்று அவன் சம்மதம் தெரிவித்தான்.

முகத்தில் புன்முறுவலுடன் கையிலிருந்த வெற்றிலைப் பெட்டியைக் கீழே வைத்துக்கொண்டே அவள், "இதுவரை நீங்கள் மூன்று முறை வந்துவிட்டீர்கள் ; ஆனால் உங்கள் பெயரை நான் தெரிந்துகொள்ள வில்லையே" என்று கூறினாள்.

"அப்படியானால் நீ வேறு யாரிடமும் கேட்கவேயில்லையா ? அதாவது உனக்கு என்னைப் பற்றிய எந்தவிதமான ஆர்வமும் இல்லை" என்று அவன் கூறினான்.

"ஒவ்வொருவரிடமும் எவ்வாறு கேட்கமுடியும்" என்று வாசந்தி பதிலளித்தாள்.

இந்தத் தடவை அவன் சிரித்துக்கொண்டே "ஓகோ! புரிந்தது. அதாவது உனக்கு எல்லோரையும் விட அதிக ஆர்வம் இருந்தது, ஆனால் உனக்கு வெட்கமாயிருந்தது" என்று கூறினான்.

அவளும் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் சோனைப் ஆற்று வெள்ளத்தின் கலகல ஒலியும் தடைப்பட்டு விட்டதுபோல் தோன்றிற்று.

"என் பெயர் கந்தேலா என்று நினைத்துக் கொள்ளேன்!" (கந்தேலா என்றால் துர்நாற்றமுள்ளவன் என்று பொருளாகும்.)

"இப்படிப்பட்ட ஒரு மனிதரின் பெயர் கந்தேலாவாக எப்படி இருக்க முடியும்?"

"அப்படியென்றால் என் பெயர் ராஜ்குமார் என்று வைத்துக் கொள்ளேன்!"

"நான் சரியான பெயரைக் கேட்கிறேன். இப்படிப் பொய்யான பெயரைச் சொல்வதில் உங்களுக்கு என்னதான் வேடிக்கையோ?"

"வேடிக்கை செய்யும் வாய்ப்பு வேறு எப்பொழுது கிடைக்கப் போகிறது? என்னுடைய பெயர் அர்ஜுன் என்று வைத்துக் கொள்ளேன். அர்ஜுன் குறி தவறாதவனல்லவா?"

'இந்த மனிதருக்கு என்னைச் சீண்டுவதற்கு நல்ல நேரம் கிடைத்து விட்டது!' என்று அவள் எண்ணினாள். அவன் இன்னும் அதிகமாகவே வாயாட ஆரம்பித்து விட்டான். நாடகத்து நடிகன் போல் அவன் சொல்லத் தொடங்கினான், "அர்ஜுன், பால்குனி, சவ்ய சாசீ தனஞ்சயன், கீர்த்தி, விபத்சு, ஸ்வேதவாஹன், விஜயன் இந்த எட்டுப் பெயர்களிலிருந்து ஒரு பெயரை நீயே கண்டுபிடி. உனக்கு நான் கொடுக்கும் ஒரு புதிர் இது."

இவ்வாறு சொல்லிக்கொண்டு அவன் வீட்டிற்கு வெளியே வந்து விட்டான். வாசந்தி முற்றத்தில் இருந்துகொண்டே "அப்படியானால் உங்கள் பெயர் விஜயனா அல்லது தனஞ்சயனா?" என்று உரக்கக் கூறினாள்.

"என் பெயர் சவ்யசாசியாக ஏன் இருக்கக் கூடாது? அதற்கு என்ன சான்று?" என்று அவன் விடையளித்தான். அவன் அவள் பக்கம் வந்து, "இந்த மூன்று பெயர்களில் உனக்கு எது பிடித்தது? என்று கேட்டான்.

"பிடிக்கிறது, பிடிக்காமலிருக்கிறது என்பது இல்லை. எல்லோரும் உங்களை எந்தப் பெயரால் அறிகிறார்களோ அந்தப் பெயர்தான் வேண்டும். சவ்யசாசீ என்ற பெயரை நான் கேட்டதே இல்லையே!"

"எல்லோரும் என்னை எந்தப் பெயரைக் கொண்டும் அறிந்து கொள்ளத் தேவையில்லை. என்னை அறிந்தவர்கள் பெயரை அறியா விட்டாலும் புரிந்து கொள்ளுவார்கள். ஆகையால் நீ இவை களிலிருந்து ஒரு பெயரை நினைத்துக் கொள். என் பெயர் தனஞ்சயன் என்று வைத்துக் கொள்ளேன்!"

"இருக்க முடியாது"

"அப்படியானால் விஜயன்!"

"இருக்கலாம்."

"ஆனால் உண்மையில் என் பெயர் தனஞ்சயன் தான்."

"நான் இனியும் உங்கள் பெயரைக் கேட்க மாட்டேன். நீங்கள் எந்தப் பெயரைச் சொன்னாலும் அதில் சந்தேகம்தான் தோன்றும்."

குளித்து விட்டுக் கூந்தலை வாரிக்கொண் டிருந்தபொழுது வாசந்தி இதையெல்லாம் எண்ணிக்கொண் டிருந்தாள். அவன் நாளை மறுநாள் வருவதாகச் சொல்லியிருந்தான். அந்த நாளை மறு நாள் என்றது இன்றுதானே.

அவள் அண்ணியின் படுக்கையறையில் மெல்ல நுழைந்தாள். மிகவும் கவனமாக அறையை நன்கு பார்வையிட்டாள். ஆனால் ஒன்றும் கிடைக்கவில்லை. கடைசியில் படுக்கைக்குக் கீழே ஒரு பொட்டலம் காணப்பட்டது. அவள் அவசரமாக பொட்டலத்தைத் திறந்து பார்த்தாள், அதில் சில மருந்து பாட்டில்கள் இருந்தன. பாட்டில்கள் ஒரே விதமாக இருந்தன. அப்படிப்பட்ட பாட்டில்கள் ஹோமியோபதி மருத்துவர்கள் தான் வாங்குவது வழக்கம். சில பாட்டில்கள்மேல் போல் சேடிலா 30 என்று எழுதியிருந்தது. சிலவற்றின்மேல் நக்ஸ்வைமிகா என்றும் ஒரு நம்பரும் எழுதி யிருந்தது. அவள் அந்தப் பொட்டலத்தை முன்பு இருந்தது போலவே கட்டி வைத்துவிட்டாள். அவளுடைய ஆர்வத்தின் ஒரு பகுதி நிறைவேறிவிட்டது. பட்டணத்திலிருந்து வாங்கிவருமாறு அண்ணனிடம் சொல்லியிருந்த மருந்துகள் இவைதாம் என்று அவளுக்கு நினைவிற்கு வந்தது.

அப்படியென்றால் அவள் உள்ளத்தைக் கவர்ந்த முதலாவதான இந்த மனிதர் ஒரு ஹோமியோபதி டாக்டர், ஆனால் அன்று அவர் கையில் மருத்துவப் பை ஏன் இல்லை என்று நினைத்துப் பார்த்தாள். ஆனால் உடனே அவர் அவ்வாறான பையைக் கையில் வைத்துக் கொள்வது வழக்கமில்லாம லிருந்தாலும் இருக்கலாம் என்றும் சைக்கிளில் இருந்த காக்கிநிறப் பையில் தன்னுடைய மருத்துவப் பையை வைத்திருந்திருக்கலாம் என்றும் அவள் எண்ணினாள்.

இன்று தன்னை அறியாமலேயே வாசந்தியின் உள்ளம் துள்ளத் தொடங்கிற்று. சோனும் ஆற்றிலிருந்து வரும் குளிர்ந்த காற்றுகூட அவளுடைய உடலுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்க முடியவில்லை. ஒரு புரியாத உள்ளக் கிளர்ச்சி அவளுடைய இரத்த ஓட்டத்தின் வேகத்தை அதிகரிக்கச் செய்துவிட்டது. அந்தக் குளிரிலும் அவளுடைய உடல் காய்ச்சலைப்போல் வியர்க்கத் தொடங்கிற்று. நடுப்பகலில் அவளால் வயிறு நிரம்பச் சாப்பிடக்கூட முடியவில்லை. ஓரிரண்டு பிடி சாப்பிட்டுவிட்டு அவள் கைகளைக் கழுவிக்கொண்டாள். ஏறக்குறைய அரைமணி நேரத்திற்குப் பிறகு பசிக்கத் தொடங்கியபொழுதுதான் சாப்பிடாமலேயே தான் எழுந்துவிட்டதும், அதனால்தான் வயிற்றில் ஒன்றுமில்லை என்பதும் அவளுடைய நினைவிற்கு வந்தது.

மாலை நேரமாகிவிட்டது. சிறிது நேரத்தில் அவர் வந்துவிடுவார். இன்று வருவதாகச் சொல்லியிருப்பதால் கட்டாயம் வருவார். ஆண் பிள்ளை சொல் மாறமாட்டான். இவ்வாறு மருத்துவம் பார்ப்பவரின் சொல்லுக்கு மதிப்பு அதிகமாகவே உண்டு. ஞாயிறு மறைவதற்கு அதிகமானால் இரண்டு மணிநேரம் இருக்கும். வீட்டிற்கு எதிரிலே உள்ள பாக்குமரத்தின் நிழல் மிகவும் நீண்டதாகக் காணப்பட்டது.

அவளுக்கு நல்ல ஆடை அணிந்து கொள்ள ஆசை ஏற்பட்டது. ஆனால் அணிந்து கொள்ளவில்லை. அவ்வாறு அணிந்துகொண்டால் மற்றவர்களின் பார்வை பட்டுவிடுமே! அவர்கள் எங்கே போகிறாய் என்று கேட்பார்களே! அவளோ எங்கும் போகப் போவதில்லை அவர் எங்கேயாவது அந்த நேரத்தில் வந்துவிட்டால்! ஆகையால் அவள் தினசரி அணிந்துக் கொள்ளும் துணிகளிலிருந்து நல்லதாக ஒன்றை எடுத்து அணிந்து கொண்டாள். சரிகை வேலைப்பாடு அமைந்த மஞ்சள் நிற ரவிக்கை இன்றுதான் அவளுக்குப் பிடித்திருந்தது. முகத்தில் சிறிது 'ஹிமானி ஸ்னோ' பூசிக்கொண்டாள். அதற்குமேல் பவுடர் போட்டுக் கொண்டாள். கண்ணாடியில் பார்த்த பொழுது முகத்தின் உருவத்திலும் நிறத்திலும் மிகுந்த வேறுபாடு ஏற்பட்டிருப்பதாகத் தெரியவந்தது. தன்னுடைய முக அழகைப் பார்த்து வாசந்திக்கே வியப்பாக இருந்தது. கண்ணாடிக் கெதிரில் நின்றுகொண்டு அவள் இரண்டு மூன்று முறை வெவ்வேறு முகபாவங்களில் தன்னைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு தானே மகிழ்ந்து கொண்டாள்.

அண்ணி சீப்பைத் தேடிக்கொண்டு அந்த அறைக்குள் வந்து விட்டாள். அவள் தன் முகத்தை இவ்வளவு கவனமாக அலங்கரித்

துக்கொள்வதைப் பார்த்து அண்ணி, 'எங்கேயாவது போகப் போகிருயா?' என்று கேட்டாள். அவள் தயங்காமல், 'இல்லையே! முகம் கொஞ்சம் வரண்டதுபோல் இருண்டது; ஆதலால் சிறிது 'ஹிமானி ஸ்னே' பூசிக் கொண்டேன் ' என்று விடையளித்தாள்.

"எங்கேயாவது போகவேண்டுமானுல் சொல்லு, நானும் வருகிறேன். பலநாளாக ரஜிதா கூப்பிட்டுக் கொண்டே யிருக்கிருள்.

"இல்லை, நான் எங்கேயும் போகவில்லை; எனக்கு உடம்பு சரியாக இல்லை."

"ஆமாம், அதுதான் சாதத்தை எறிந்ததிலிருந்தே தெரிந்து விட்டதே! வயிறு சரியாக இல்லையா?"

"அப்படியொன்றுமில்லை. பசியேயில்லை. அவ்வளவுதான். ஆமாம் அண்ணி, உன்னிடம் ஒரு விஷயம் கேட்க மறந்தே போய்விட்டேன். படுக்கைக்கடியில் இருக்கிற பொட்டலத்தில் என்ன இருக்கிறது?"

அது நம்முடையதில்லை. தனஞ்சயன் உன் அண்ணனிடம் பட்டணத்திலிருந்து மருந்து வாங்கி வரும்படி சொல்லியிருந்தார். பொட்டலத்தில் அந்த மருந்துதான் இருக்கிறது."

"அப்படியா? ஆனுல் தனஞ்சயனுடைய வீடு எங்கே இருக்கிறது?"

"பாப்சிலா கிராமத்தில் இருக்கிறது.

அவள் பேச்சுவாக்கில் எத்தனையோ விஷயங்களைத் தெரிந்துக் கொண்டுவிட்டாள். அப்படியானுல் அவன் பெயர் தனஞ்சயன் தான். அவனுடைய வீடும் அவள் நினைத்த இடத்தில்தான் இருக்கிறது. அவன் பல பெயர்களைச் சொல்லி அவளைப் பிரமையில் அவ்வளவு ஆழ்த்தியிருக்கக் கூடாது.

அதே நேரம் அண்ணன் எங்கிருந்தோ வீட்டிற்குத் திரும்பி வந்தான். உள்ளே வந்ததும் கூடத்திற்கு இரண்டு கோப்பை தேனீர் அனுப்பும்படி கூறினுன். இதை கேட்டதும் தனஞ்சயன் வந்திருப்பது வாசந்திக்கு உறுதியாகத் தெரிந்துவிட்டது. ஓரிரண்டு முறை எட்டிப் பார்த்து அவள் தனஞ்சயன் வந்திருப்பதை உறுதிப் படுத்திக் கொண்டாள். அண்ணியின் கட்டளைப்படி அவள் அடுப்பு மூட்டினுள். தண்ணீர் கொதிக்கும்வரை அவர்கள் இருவர் பேசுவதைக் கேட்டால் என்ன என்று தோன்றிற்று. தனஞ்சயன் அண்ணனிடம் என்னதான் பேசுவார்! என்று எண்ணியவளாய் அவள் நிலைப்படிக் கருகில் நின்றுகொண்டு கேட்கத் தொடங்கினுள்.

தனஞ்சயன் பேசுவது வாசந்தியின் காதில் விழுந்தது. "இதற்கு அடிப்படைக் காரணம் கடன் கொடுக்கும் லேவாதேவிக்காரன் ஒரு

பித்தலாட்டக்காரன். குடியானவனுக்கு விவசாயத்திலிருந்து என்ன கிடைக்கிறது? லாபத்தையெல்லாம் அவன் எடுத்துக்கொண்டு விடுகிறான். நியாயமான விலைக்கு தானியங்களை விற்கும் வாய்ப்பு குடியானவனுக்குக் கிடைப்பதில்லை.''

போக்ராமின் குரலும் அவள் காதில் விழுந்தது, ''ஆனால் இந்த மக்களும் இப்படித்தானே இருக்கிறார்கள். இவர்கள் லேவாதேவிக் காரனை நன்மை செய்பவனாகக் கருதுகிறார்கள். ஆனால் அவனோ மூட்டைப்பூச்சியைப்போல் ரத்தத்தை உறிஞ்சி விடுகிறான். இவர்களுக்கு அது புரிவதே இல்லை.''

மறுபடியும் தனஞ்சயனின் குரல் கேட்கிறது, ''அதனால்தான் இந்தத் தடவை பாப்சிலாவில் ஒரு கூட்டுறவுச் சங்கம் அமைத்து விட வேண்டும் என்று நினைத்துக்கொண் டிருக்கிறேன். காரணம் என்ன வென்றால், மக்கள் இப்பொழுதே விழித்துக் கொள்ளவில்லை யென்றால்.........''

அதே நேரம் அண்ணி வாசந்தியைக் குரலிட்டுக் கூப்பிட்டாள். அவள் உடனே சமையலறைக்குள் போனாள். ''தண்ணீர் கொதித்துக் கொண்டிருக்கிறது. நீயே வெளியே போய், தேநீரைக் கொடுத்து விட்டு வா. நான் கட்டிக்கொண்டிருக்கும் துணி அழுக்காக இருக் கிறது'' என்று அண்ணி கூறினாள்.

தேநீர் கொடுக்கும்பொழுது வாசந்தி தனஞ்சயன் பக்கம் பார்க்க முடியவில்லை. அண்ணனுக் கெதிரில் அவனைப் பார்ப்பதில் அவளுக்கு வெட்கமாக இருந்தது. அவனும் அவளிடம் ஒன்றும் கேட்கவில்லை. ஆனாலும் நாள் முழுவதும் அவள் அலங்காரம் செய்து கொண்டு அவனை எதிர்பார்த்திருந்தது வீண் போகவில்லை என்றே அவள் கருதினாள்.

# இரண்டு

வாசந்தியின் தாய் சுஜலா மிகவும் வயது முதிர்ந்தவளாகி விட்டாள். அவளுடைய உடல் கூனிவிட்டது. தலை முடி நரைத்து விட்டது. கபம், வாயு என்று ஏதாவதொரு வியாதி பன்னிரண்டு மாதங்களும் வந்துகொண்டே யிருந்தது. கிழவியால் வருஷக் கணக்குப்படி தன் வயதைக் கூற முடியவில்லை. 'போன தடவை பெரிய பூகம்பம் வந்ததே அதுதான் எனக்கு நினைவிலிருக்கிறது'

என்று மட்டுமே அவளால் சொல்ல முடிந்தது. அதைக்கொண்டு அவளுடைய வயது நான்கு இருபதையும் ஒரு ஐந்தையும் கடந்து அதாவது எண்பத்தைந்து ஆண்டுகளைவிட அதிகமாக இருக்கும் என்று ஊகிக்க முடிந்தது. மருந்துகளைப் பார்த்தால் கிழவி " ஏன் செத்த அன்னத்திற்குப் பாய் விரிக்கிறீர்கள் ? பற்கள் போய்விட்டன, நகங்கள் போய்விட்டன, உடலில் சுருக்கம் விழுந்துவிட்டது. ஒவ்வொன்ருக இவையெல்லாம் யமதூதன் வீட்டிற்குப் போவதற் கான அடையாளங்களாகும். நானும் போவதற்கு இன்னும் எத்தனை நாட்கள்தான் மிஞ்சியிருக்கிறதோ !" என்று சொல்வது வழக்கம். ஆனுல் மகனும் மருமகளும் கிழவியின் வார்த்தைகளுக்கு மதிப்பு கொடுப்பதேயில்லை. நோய்வாய்பட்டு விட்டால் உடனே மருத்துவத் திற்கு ஏற்பாடு செய்து வந்தார்கள். கிழவியும் எல்லோரிடமும் நன்றி உணர்வோடு இருந்தாள். கிழமாகவோ ஆகிவிட்டோம். ஓரிரண்டு ஆண்டுகளில் போய்விடுவோம். இவர்களெல்லோரும் இப்பொழுது பெரியவர்களாக ஆகிவிட்டார்கள். கிழவி உயிரோடு இல்லா விட்டாலும் குடும்பம் நடந்து கொண்டுதான் இருக்கும் என்று அவள் எண்ணினுள். ஆகையால் அவள் உரத்த குரலில் முனகாமலிருந்த வரையில் குடும்பத்தவர்களுக்கு அவளுடைய வியாதியைப் பற்றித் தெரியாம லிருந்தது. கிழவி பேசுவதும் கிடையாது. ஆனுல் பேசா விட்டால் என்ன ? வாசந்தியும் அவளுடைய அண்ணி தருலதாவும் கிழவியிடம் மிகவும் அன்பாக இருந்தார்கள். சிறிது நோய்வாய்ப் பட்டாலும் அவர்கள் இருவரும் கவனம் செலுத்தத் தொடங்கி விடுவார்கள். இன்று ஏறக்குறைய ஒரு மாதமாகவே அதாவது ஐப்பசி மாதம் துவங்கியதிலிருந்தே கிழவி சுஜலா நடக்கும்பொழுது இடறி விழுந்துகொண் டிருந்தாள். அவள் ஒரு நாள் தடியை ஊன்றியவளாய் வெற்றிலையைத் தேடிக்கொண்டு கணபாயின் வீட்டிற்குப் போய்க்கொண் டிருந்தாள். ஆனுல் கணபாயின் வீட்டை அடைவதற்குள் தவருக மணிபுரியாவின் வீட்டிற் கருகிலுள்ள குப்பை மேட்டில் ஏறிவிட்டாள். மணிபுரியாவின் காளை மாடு மிகவும் முரடானதாகவும் அதன் கொம்பு மிகவும் கூர்மை யானதாகவும் இருந்தது. அதன் வாலை யாரும் தொட்டுவிட முடியாது. கலப்பையைச் செலுத்துபவனைத் தவிர அது வேறு யாருக்கும் கவலைப்படுவதில்லை. அது யாரையும் கொம்பால் முட்டி விடுவது வழக்கமாக இருந்தது. அது அந்த நேரத்தில் குப்பை மேட்டிற்கருகில் பூசனிக் கொடி இலைகளைத் தின்றுகொண் டிருந்தது. கிழவியை அருகில் வரக்கண்டு அது அவள் மீது பாய்ந்துவிட்டது. கொம்பால் முட்டி அவளைக் கீழே தள்ளிவிட்டது. மணி

புரியாவின் மகன் லசங்க் பார்க்காமல் இருந்திருந்தால் மாடு கிழவியை நசுக்கி இருக்கும்.

அன்றைக்குப் பிறகிலிருந்து மகனும் மருமகளும் சுஜலா வெளியே போவதைத் தடுத்து விட்டார்கள். ஆனாலும் மற்றொரு நிகழ்ச்சி நடந்து விட்டது. தென்னை மரத்தடியில் கிழவி குளிப்பதற்காக ஒரு வாளித் தண்ணீர் வைப்பது வழக்கம் கிழவி தன் கைகளால் தடவிப் பார்த்து வாளியைக் கண்டுபிடித்துக்கொள்வது வழக்கம். சில சமயம் தண்ணீருக் கருகில் வைத்திருக்கும் பாத்திரம் கிடைக்காமல் போனால் கைகளாலேயே தண்ணீரை மேலே ஊற்றிக்கொண்டு குளிப்பது வழக்கமாக இருந்தது. இரண்டு நாட்களுக்குப் பிறகு மற்றொரு சம்பவம் நடந்துவிட்டது. கிழவி வீட்டிற்குப் பின்னால் வெளியே உலாவப் போயிருந்தாள். அரை மணி நேரம்வரை அவள் திரும்பாதது கண்டு தருலதாவுக்கும் வாசந்திக்கும் கவலையாகப்போய் விட்டது. வீட்டிலுள்ள அறைகளிலெல்லாம் தேடியும் அவள் கிடைக்காமல் போனபிறகு இருவரும் தோட்டத்தை அடைந்தார்கள். அங்கே மூங்கில் மரங்களுக்கு மேற்குப்பக்கமாக இருந்த மண் மேட்டிற்குள் இருந்த நான்கு முழ ஆழப்பள்ளத்தில் கிழவி விழுந்து கிடந்ததைப் பார்த்தார்கள்.

இப்பொழுது எல்லோருக்கும் கிழவிக்குக் கண் தெரியவில்லை என்பதில் முழு நம்பிக்கை உண்டாகிவிட்டது. ஆனால் போக் ராமுவுக்கு இதுபற்றி ஒன்றும் தெரியாது. அவர் வியாபார சம்பந்தமாகச் சுற்றிக்கொண்டே இருந்தார். பறவைகள் தங்கள் கூட்டில் இருக்கும் நேரம்தான் அவர் வீட்டில் இருந்துவந்தார். வாசந்திக்குத் தன் தாயின்மீது கோபம் உண்டாயிற்று. கண் தெரியவில்லை என்பதைத் தாய் முன்பே வீட்டிலுள்ளவர்களுக்குச் சொல்லியிருக்கவேண்டும். எந்த வியாதிக்கும் வைத்தியம் இருக்கும் பொழுது கண் தெரியாமலிருப்பதற்கு வைத்தியம் ஏன் செய்ய முடியாது ? தாய் எங்கேயாவது விழுந்து இறந்துவிட்டால் அவர்கள் மீதுதானே அந்தப்பழி வந்து சேரும்.

ஆனால் வாசந்தி தாயிடம் தன் கோபத்தைக் காட்டவில்லை. அவள் அன்புடன் கேட்டாள், "அம்மா! உன் கண்களில் வலியுண் டாகிறதா, அல்லது அரிப்பு ஏற்படுகிறதா ? அருகிலிருப்பது கூட கண்களுக்குத் தெரிவதில்லையா ?"

தாய் மகளின் முதுகைக் கையால் தடவிக்கொண்டே பதிலளித் தாள், "ஆமாம்மா ! பல நாட்களாக அருகிலிருக்கும் பொருள்கள் தெரிவதில்லை. ஆனால் இதைக் கண்வியாதி என்று கூறுவது சரி

யில்லை. வயதாகிவிட்டது ; கண்களில் பூ விழுந்துவிட்டது. அவ்வளவுதான். இது ஒன்றும் புதிய விஷயமில்லை. பற்கள் போய் விட்டன. கண்கள் போய் விட்டன. இது ஒவ்வொன்றும் யமதூதனுடைய வீட்டிற்குப் போவதற்கு அடையாளமாகும். பிறவியும் சாவும் விதிப்படிதான் நடக்கும். டாக்டரும் வைத்தியரும் நம்மைப் போன்ற மனிதர்கள்தானே !''

வாசந்திக்குத் தாயின் வார்த்தைகளைக் கேட்டு மிகவும் வருத்தம் ஏற்பட்டது. இதுதான் வாழ்க்கையா? ஆனாலும் மனிதனுக்குத் தான் எத்தனை கர்வம்! அவள் தாயின் முகத்தை ஒருமுறை பார்த்தாள். தாயின் துன்பம் நிறைந்த முகம் அவளுடைய வாழ்க்கையின் முழுச் சரித்திரத்தைக் கூறுவதுபோல் இருந்தது. அவளுடைய தாய் உயிருடன் இருந்தால் அதிகப்படி இன்னும் ஐந்து ஆண்டுகள் இருப்பாள். ஆனால் இந்த ஐந்து ஆண்டுகளும் அவள் பூமியின் ஒளியையும் சோனுய் ஆற்றங்கரையிலுள்ள இயற்கை அழகையும் பார்க்காமல், அவள் எந்த நம்பிக்கையுடனும் உற்சாகத்துடனும் உயிர் வாழமுடியும்? சோனுய் ஆற்றின் நீர்ப்பரப்பில் ஒளி வீசும் ஞாயிற்றின் கதிர்கள் எவ்வளவு அழகாகக் காட்சியளிக்கின்றன என்றுகூடத் தாய்க்குத் தெரியமுடியாது. நானே இந்தத் தாயின் வயிற்றில் பிறந்ததால்தானே பூமியின் ஒளியைப் பார்க்க முடிந்தது. கடைசியில் அவள் தாயின் கண்கள் சரியாகாதவரையில் அவளை இறந்ததுபோலக் கருதவேண்டியது என்று எண்ணியவளாய், அவ்வாறு நேரக்கூடாது; நேரவிடமுடியாது என்று முடிவு செய்தாள். அன்று மூன்று நாட்களாகிவிட்டன. அண்ணன் வீட்டிற்கு வரவில்லை. அவன் தர்கியால் கிராமத்திற்குப் போயிருக்கிறன். அங்கே ஒரு பெரிய திருவிழா நடந்துகொண்டிருந்தது. ஏராளமான மக்கள் அங்கே கூடியிருந்தார்கள். கடைகள் முதலியன போடப்பட்டிருந்தன. போக்ராமும் அங்கே பனியன், சட்டை, பிளவுஸ், உள்பாவாடை, போர்வை முதலிய ரெடிமேட் துணிகளை விற்கப் போயிருந்தார். வாசந்தி அண்ணியிடம் தாயைப் பற்றிய தன் கருத்தைத் தெரிவித்தாள். தருலதாவும் அதை ஆமோதித்தாள்.

மத்தியானம் வாசந்தி தாயின் உடலை ஈரத்துணியால் துடைத்துக்கொண்டே ''அம்மா, அண்ணன் வந்தபிறகு உன்னை ஒரு நாள் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு போகும்படி சொல்லலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். அங்கேயுள்ள டாக்டர் உன் கண்களில் விழுந்திருக்கும் பூவை எடுத்துவிட்டால் உனக்கு மறுபடி

யும் முன்போலவே கண்கள் தெரிய ஆரம்பித்துவிடும்,'' என்று கூறினாள்.

தாய் சுஜலாவுக்குச் சிறிது நேரம்வரை மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. ''உண்மையாகவா? உனக்கு எப்படித் தெரியும்?'' என்று அவள் கேட்டாள்.

''போன புரட்டாசி மாதம் சித்தி வீட்டிற்குப் போயிருந்தபோது தெரிய வந்தது. அங்கே யோகேஸ் மண்டல் என்ற ஒரு கணக்கர் இருக்கிறார். அவருடைய தாயின் கண்களிலும் இதே வியாதிதான் வந்திருந்தது. அவள் பட்டணத்திற்குப் போய்ப் பூவை எடுக்கும் படிப் பண்ணினாள். அதற்குப் பிறகு கிழவிக்குக் கண் தெரிய ஆரம்பித்துவிட்டது. ஆனால் பூவை எடுத்தபிறகு மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ளவேண்டி யிருக்கிறது.''

தாய், தான் கூறியதைக் கவனமாகக் கேட்கவில்லை என்பதை வாசந்தி கவனித்தாள். அவளுக்கு மறுபடியும் வருத்தம் ஏற்பட்டு விட்டது போல் தோன்றிற்று. தலையை மேலே தூக்கிக்கொண்டு அவள் கவலையில் ஆழ்ந்துவிட்டாள். அவ்வாறே சிறிது நேரம் இருந்தபிறகு அவள் பெருமூச்சு விட்டுக்கொண்டே சொல்லத் தொடங்கினாள், ''கண்களுக்குப் பார்வை கிடைப்பது நல்லதுதான். ஆனால் வாசந்தி, என் பேரில் ஆணை; அண்ணனிடம் இதைப் பற்றி நீ ஒன்றும் சொல்லக்கூடாது. அவனுக்கு வருத்தமாக இருக்கும். அவன் இந்த மாதம் எவ்வளவு கஷ்டப்படுகிறான்; வெயிலில் சுற்றிச்சுற்றி அவன் உடம்பு எத்தனை கறுத்துக் கிடக்கிறது என்பதை நீ பார்த்துக்கொண்டுதானே இருக்கிறாய். இந்த நேரத்தில் அவனுக்கு என்னால் ஏன் கஷ்டம் வரவேண்டும்!''

''ஆனால் நான் சொல்லாமல் எப்படி இருக்கமுடியும்?''

''நானோ கிழவியாகிவிட்டேன். ஞாபகசக்தியும் மழுங்கிவிட்டது. என்னால் உங்களுக்குக் கஷ்டம் ஏற்பட்டால் நான் எப்படி உயிருடன் இருப்பேன்? இந்த இரண்டு மாதங்கள் என் கண்வியாதியைப் பற்றி போக்ராமிடம் ஒன்றும் சொல்லக்கூடாது என்று நான் தரு விடமும் கூறியிருக்கிறேன். நீ சொன்னாயானால் எனக்கு சாவைப் போல வருத்தம் ஏற்படும்.''

'' அண்ணன்தான் பட்டணத்துக்கு அடிக்கடி போகிறாரே. உன்னையும் வண்டியில் கூட்டிக்கொண்டு போவதில் என்ன கஷ்டம் ஏற்படப் போகிறது ?''

''ஆனால் பட்டணத்திற்குப் போவதாலேயே எல்லாம் சரியாகி விடுமா? எவ்வளவு செலவு ஆகும்! நம்மையெல்லாம் காப்பாற்று

வதற்கு அவன் எவ்வளவு கஷ்டப்படுகிருன் என்பதை நீ பார்த்துக் கொண்டுதானே இருக்கிருய்! என்ன செய்வதென்றே தோன்ற வில்லை.''

சில நாட்கள் வரையில் இதுபற்றி அண்ணனிடம் சொல்லாம லிருப்பதாக வாசந்தி தாய்க்கு வாக்குக் கொடுத்தாள். ஆனால் அவளுடைய உள்ளத்தில் வருத்தம் ஏற்பட்டது. தாயைப்பற்றி ஒரு விஷயத்தில் அவளுக்கு வியப்புத் தோன்றிற்று. அவள் கிழவியாகி விட்டாள். கண்களால் பார்க்க முடியவில்லை. பேசாமல் நாட்களைக் கழித்துக்கொண் டிருந்தாள். அவளுடைய உடலும் கஷ்டப்படுகிறது. ஆனால் உள்ளத்தில் எந்த விதமான வருத்தமும் இல்லை. தான் கிழவியானது பற்றிக் கூட அவளுக்கு வருத்தமாக இல்லை. அவள் தன் கணவன் இறந்த வருத்தத்தையும் அமைதி யுடனும் மௌனத்துடனும் சகித்துக் கொண் டிருந்தாள். ஆகையால் வாசந்தி தன் தாயின் இளமைப் பருவத்திலிருந்து இதுவரை கழிந்த வாழ்க்கையைப் பற்றி அறிய விரும்பினாள்.

அறிவிலும் அனுபவத்திலும் குறுகிய தன் வாழ்க்கையில் வாசந்தி பல சிக்கலான பிரச்சினைகளை அனுபவித்துக்கொண் டிருந்தாள். வாழ்க்கையைப் பற்றிய அவளுடைய ஆர்வம் வளர்ந்து கொண் டிருந்தது.

இரவில் தூங்கும்பொழுது அவள் தாயிடம் பலவிதமான கேள்விகள் கேட்பாள். தாய் விரைவில் அவளுடைய கருத்துக்களைப் புரிந்து கொண்டுவிடுவாள். வாசந்திக்கு இதைக் கண்டு மிகவும் வியப்பாக இருந்தது. இப்பொழுது உள்ள தன் நிலைமையைப் பற்றித் தனக்குச் சிறிதும் வருத்தமே கிடையாது என்று தாய் அவளிடம் கூறினாள். தன் வாழ்க்கையில் தாய்க்கு எவ்வளவோ இன்பம் கிடைத்திருந்தது. அவள் பரிபூர்ணமான வாழ்க்கையை அடைந் திருந்தாள். ஆகையால் அவளுக்கு இப்பொழுது எந்தவிதமான வருத்தமும் கிடையாது. கடந்த வாழ்க்கையில் எந்தவிதமான இன்பமும் அடையாதவன் தன் கடந்த காலத்தை நினைக்கும் பொழுது அவனுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியும் துன்ப மயமாக ஆகிவிடும்.

இதையெல்லாம் தாய் மிகவும் இயல்பான முறையில் சொன்னாள். வாழ்க்கையைப் பற்றிய அவளுடைய உணர்வில் எந்தவிதமான செயற்கைத் தன்மையும் காணப்படவில்லை என்பதை வாசந்தி நன்றாக உணர்ந்தாள். இந்த நிலைதான் அவளுக்கு வாழும் நம்பிக் கையைக் கொடுத்திருந்தது.

உயர்வு தாழ்வுடன் ஓடிக்கொண்டிருக்கும் வாழ்க்கையில் கலக்கத்தை உண்டாக்கிவிடும் பல நிகழ்ச்சிகள் நடக்கின்றன. வாழ்க்கையில் புதுப்புதுத் திருப்பங்கள் தோன்றுகின்றன. ஆனால் காலம் அவற்றை மறந்துவிடுகிறது. காலம் இளமை உணர்வை மன்னிப்பதே கிடையாது. தொன்று தொட்டு ஓடிக்கொண்டிருக்கும் சோணுய் ஆறு வாசந்திக்கு ஒவ்வொரு நாளும் இதையே கூறிக் கொண்டிருந்தது. சோணுய் எழுதாத மொழியில் தன் சலசலப்பின் வழியே எத்தனையோ விஷயங்களைக்கூறி வாசந்தியின் உள்ளத்தை மகிழ்வித்து வந்தது. அவள் அதையெல்லாம் கற்பனையால் புரிந்து கொண்டுவிடுவாள். அவளுக்கு அன்பு, வாழும் வாழ்க்கை, வாழ்வின் அழியும் தன்மை பற்றியெல்லாம் நன்ருகத் தெரியும். இந்த சோணுய் ஆற்றின் இதயத்தில் எத்தனை பேர்களுடைய அன்பு வளர்ந்துள்ளதோ ? இதன் ஒளி நிரம்பிய அலைகளில் எத்தனை பேர்களுடைய அன்பு அடக்கமாகி விட்டதோ ? இன்னும் எத்தனை பேருடைய அன்பு இதன் நீரோட்டத்தில் துளிர்க்கப்போகிறதோ ? அவள் சோணுயின் அமைதியான இயற்கையழகில் இயற்கையான புது அழகோடு தனஞ்சயனைக் கண்டாள். அவளுடைய உள்ளத்தில் புத்துணர்வு துளிர்த்தது. தான் வாலிபத்தை அடைந்து விட்டதை அவள் புரிந்துகொண்டாள். தன்னை ஒருவனிடம் அர்ப்பணம் செய்து அவனை உள்ளத்தால் ஏற்றுக்கொள்ளும் நேரம் வந்துவிட்டதை அவள் அறிந்தாள். தனஞ்சயன் மறுபடியும் அவளுடைய வீட்டிற்கு வர மாட்டானு? இந்தப் பத்து நாட்களும் அவன் பாப்சிலாவிலேயே இல்லையோ என்னவோ ? அப்படியே அவன் வந்தாலும் தனிமையிலே சந்திக்க வாய்ப்புக் கிடைக்காதா ? என்றெல்லாம் அவள் எண்ணிஞள். சோணுய்பரியாவைச் சேர்ந்த மாட்டிடையன் குழல் ஊதினுன். உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அதன் நாதத்தால் டனுவா ஆற்றங்கரை உயிர் பெற்று விளங்கிற்று. குடத்தில் தண்ணீர் எடுக்கும்பொழுது அவளுடைய உள்ளத்தில் திடீரென ஒரு எண்ணம் உதித்தது. தனஞ்சயன் ஒரு நாள் எதிர்பாராமல் முதல் நாளைப்போல் வருவதாகவும், தன்னிடம் அன்பாகப் பேசுவதாகவும் அவள் ஆதாரமே இல்லாமல் எண்ணத் தொடங்கிஞள்.

தாயின் இரண்டு கண்களும் இதுவரை குணமாகியிருக்கலாம். ஆனால் அவள் தாயின் கட்டளைப்படி போக்ராமிடம் ஒன்றும் சொல்லாமலிருந்தாள். போக்ராமிடம் சொல்ல அவளுக்கு வாய்ப்பும் கிடைக்கவில்லை. அவன் இப்பொழுதெல்லாம் பகல் முழுவதும் வீட்டில் இருப்பதே இல்லை. திங்கட்கிழமை காலையிலேயே பத்து

மைல் தூரம் சைக்கிளில் பட்டணத்திற்குப் போய்விடுவான்; சைக்கிளுக்குப் பின்னால் பெருத்த சுமையைச் சுமந்துகொண்டு இரவில் வீடு திரும்புவான். பட்டணத்திலிருந்து வாங்கிவந்த சாமான்களை அவன் யாரையும் தொட விடுவதில்லை. அவனுடைய வியாபாரப் பொருள்களெல்லாம் மூட்டையில் இருக்கும். சட்டை, குறைந்த விலையுள்ள வேஷ்டி, ஒன்றிரண்டு நூல் முடிச்சு, சிறு குழந்தைகளுக்கான ஃபிராக் முதலியன. சின்ன 'காடா'த்துணி பீஸ், அது இல்லையென்றால் சில மலிவான கம்பளித்துணிகள், இவையெல்லாவற்றையும் செவ்வாய்க்கிழமை காலையிலேயே சைக்கிளில் வைத்துக்கொண்டு ஜாஜோரி சந்தைக்குப் போவான். அங்கிருந்து மாலையான பிறகுதான் வீடு திரும்புவான். புதன்கிழமையும் அவன் அதே வேலைக்காகப் பட்டணத்திற்குப் போய்விட்டு மாலையில்தான் வீடு திரும்புவான். முதல் நாள் கொண்டு வந்த சாமான்களை அவன் வியாழக்கிழமையன்று தலங்க் கடைத்தெருவில் கொண்டுபோய் விற்றுவிட்டு இரைக்க இரைக்க வீடு திரும்பும்பொழுது ஞாயிறு மறைந்துகொண்டிருக்கும். வெள்ளிக்கிழமையன்று அவன் மறுபடியும் பட்டணத்திற்குச் செல்வான். சனிக்கிழமையன்று புல்குடி சந்தைக்குப் போய் சாமான்களை விற்பனை செய்வான். புல்குடியில் மிகப் பெரிய சந்தை நடப்பது வழக்கம். ஆகையால் அவன் பகல் முழுவதும் அங்கேயே இருந்துவிட்டு சனிக்கிழமையன்று மாலை, நேரம் கழிந்த பிறகே வீடு வந்து சேருவது வழக்கம். அவனுக்குத் தான் எத்தனை கஷ்டங்கள்! ஏதோ அவனாக இருப்பதால் இவ்வளவு கஷ்டங்களைச் சகித்துக்கொண்டிருக்கிறான். ஆனால் இவ்வளவு கஷ்டப்படவில்லையென்றால் வேறு வழி ஏதும் இல்லையே! வீட்டிலிருக்கும் இவ்வளவு பேர்களை எப்படிக் காப்பாற்றுவது? விவசாயத்திற்கான நிலமோ இரண்டு ஏக்கர்தான் இருக்கிறது. ஒரு வாணலி நிறைய உள்ள காய்கறியில் ஒரு சின்ன மிளகாயைப் போலத்தானே அது! இவ்வாறு வியாபாரம் செய்யவில்லையென்றால் வீடு திவாலாகப் போகவேண்டியதுதான். அவன் சாப்பிடுவதற்கும் தூங்குவதற்கும் ஒரு குறிப்பிட்ட நேரம் கிடையாது. பகலிலும் சாதம் சாப்பிட நேரம் கிடைப்பதில்லை. விடியற்காலையில் பசி எடுப்பதற்கு முன்னரே அவன் சாதம் சாப்பிடவேண்டியிருக்கிறது. உண்மையில் பசி எடுக்கும்பொழுதோ அவன் கடைத்தெருவில் இருக்கிறான். வேளை தவறிச் சாப்பிடுவதால் அவனுக்குப் பித்தம் ஏற்பட்டுவிடுகிறது. ஆகையால் எப்பொழுதும் சட்டைப்பையில் சோடா பாட்டிலை வைத்துக்கொண்டே அலைகிறான். அண்ணன்

படும் கஷ்டத்தைப் பார்த்து வாசந்திக்கு அவன்மீது மிகவும் கருணை ஏற்பட்டது. அவர்களையெல்லாம் காப்பாற்றுவதற்குத் தான் அண்ணன் எவ்வளவு துன்பங்களை எடுத்துக்கொண்டு முயற்சி செய்கிறான்!" "இந்தச் சில மாதங்கள் அவனுக்குப் பெரிதும் துன்பமான நாட்கள். என்னைப்பற்றிச் சொன்னால் அவன் கஷ்டம் இன்னும் அதிகமாகி விடும்" என்று தாய் சரியாகத் தான் சொன்னாள். இவ்வளவு கஷ்டப்பட்டாலும் பணக்கஷ்டத்தை அவனால் தீர்க்க முடிகிறதா? லாபப் பணத்தை வைத்துக்கொண்டு அப்படியும் இப்படியுமாக வீட்டை நடத்திக் கொண்டிருந்தான்.

ஆனால் வாசந்தி தாயைப்பற்றி அண்ணனிடம் சொல்ல நேரத்தை எதிர்பார்த்திருந்தாள். ஆனால் சொல்வதற்கு நேரமே கிடைக்கவில்லை. அவன் களைத்துப்போய் வீடு திரும்பும்பொழுது சொல்வதற்கு அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. சில சமயம் அவன் கோபத்துடன் காணப்பட்டான். ஒருவேளை அப்பொழுது வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டிருக்கலாம். வீட்டில் இருக்கும் சிறிது நேரத்திலும் தன்னுடைய சிறிய நோட்டில் ஏதாவது எழுதியவாறே மிகவும் கவனத்துடன் கணக்கு போட்டுக் கொண்டே இருப்பான். அந்த நேரத்தில் அவனைக் கூப்பிடுவதற்கே பயமாக இருந்தது.

ஆனால் போக்ராமின் பார்வை குறையவில்லை. வீட்டில் சிறிது நேரமே தங்கினாலும் அவன் தாயைக் கவனிக்காமல் இல்லை. தாய் ஒரு நாள் மேட்டிற்கருகிலுள்ள பள்ளத்தில் விழுந்தது அவனுக்குத் தெரியாது. ஆனால் தாயின் கண்பார்வை முன்பு போல் இல்லை என்பதைத் தன் நுட்பமான வியாபார அறிவால் அவன் அறிந்து கொண்டுதான் இருந்தான். ஆதலால் வாசந்தியும் தருலதாவும் இந்த விஷயத்தை மறைத்துப் பதினைந்து நாட்கள் கூட ஆகவில்லை, அதற்குள் அவனே இதைப் புரிந்து கொண்டு விட்டான். சாப்பாடு சாப்பிடும்பொழுது அவன் கோபத்துடன் வாசந்தியிடமும் தருலதா விடமும் "அம்மாதான் என்னிடம் சொல்லுவதில்லை. வைத்தியம் செய்வது என்றால் எனக்குக் கஷ்டமாக இருக்கும் என்று அவள் கருதுகிறாள். ஆனால் நீங்கள் என்னிடம் ஏன் சொல்லவில்லை?" என்று கேட்டான்.

தருலதா பேசாமல் இருந்தாள். வாசந்தி இருவருடைய குற்றத்தை யும் தன் மீது ஏற்றுக் கொண்டாள். கடைசியில் போக்ராம் கூறி னான், "இரண்டு நாட்களுக்குப் பிறகு அம்மாவை மாட்டு வண்டியில் அழைத்துக்கொண்டு போகலாம். இது கம்பளம் விற்கும் நேரம் இல்லை. ஆகையால் வண்டியின் சக்கரங்களைக் கழற்றி வைத்து

விட்டேன். வண்டியில் உட்காரும் வைக்கோலும் கெட்டுப் போய் விட்டது. ஆகையால் லதரின் வண்டியையும் வண்டிக்காரனையும் ஏற்பாடு செய்திருக்கிறேன். எனக்கோ ஆஸ்பத்திரி, டாக்டர், இதெல்லாம் பற்றி ஒன்றும் தெரியாது. ஆதலால் தனஞ்சயனும் நம்முடன் வருவான். அவனும் வருவதாக வாக்குக் கொடுத்திருக் கிருன்.''

வெள்ளை மாட்டுவண்டியில் வைக்கோலைப் பரப்பி உட்காரும் இடம் சமமாக்கப்பட்டது. பாயை விரித்து ஒரு தலையணையும் வைத்தாகி விட்டது. கிழவி வண்டியில் ஏறிக் கொண்டாள். முதலில் போகமாட்டேன் என்று அவள் பிடிவாதம் பிடித்தாள். மிகவும் மன்ருடிக் கேட்டுக்கொண்ட பிறகுதான் கிழவியை அழைத்துக் கொண்டு அவர்கள் பட்டணத்திற்குப் போகக் கிளம்பினுர்கள்.

தனஞ்சயன் ஹோமியோபதி வைத்தியம் செய்த போதிலும் பட்டணத்தில் பலபேரை அவனுக்கு நன்ருகத் தெரியும். அவனுக்குப் பல டாக்டர்களைத் தெரியும். அவன் அரசாங்க ஆஸ்பத்திரியில் கிழவியைக் காட்டினுன். கிழவியின் கண்களில் விழுந்திருந்த பூக்களை வெட்டியெடுத்த நாளன்று டாக்டர் அவளை வீட்டிற்கு போக அனுமதிக்கவில்லை. ஆகையால் வண்டியில் போக்ராம் தனி யாகவே வீட்டிற்கு வந்தான். ஏனென்ருல் அவன் பட்டணத்திலேயே மூன்று நான்கு நாட்கள் இருந்தால் வியாபாரத்தில் பெருத்த நஷ்டம் ஏற்பட்டு விடும். அவன் வியாழக்கிழமையும் சனிக்கிழமையும் சந்தைக்குப் போகவில்லையென்ருல் வாரம் முழுவதும் குடும்பம் நடத்துவது கஷ்டமாகி விடும். போக்ராம் வேண்டிக்கொண்டதால் தனஞ்சயனே கிழவியுடன் இருந்துவிட்டான்.

கண்களிலிருந்து பூக்களை எடுத்த பிறகு மூன்று நாட்கள் வரையில் கண்கள் கட்டப்பட் டிருந்தன. நான்கு நாட்களுக்குப் பிறகு வீட் டிற்குப் போக அனுமதி கிடைத்து விட்டது. வாசந்தியின் உள்ளத் தில் பல எண்ண அலைகள் மோதின. தனசஞ்சயனும் பல வேலை களுள்ள மனிதன். அப்படியிருந்தும் அவன் அவளுடைய தாயுடன் நான்கு நாட்கள் பட்டணத்தில் தங்கியிருந்தான். அவன் பிறருக்கு உதவிசெய்வதிலேயே மகிழ்ச்சியடைகிருன் என்பதுதான் அதற்குக் காரணமா? அவன் உண்மையிலேயே இவ்வளவு சுயநல மற்றவனுக இருந்தால் அவன் ஒரு மனிதனல்ல, தெய்வமேதான். ஆனுல் அவளுடைய உள்ளம் இவ்வாறு கருத மறுத்தது. ஒருவேளை தனஞ்சயன் இந்த நேரத்தில் அண்ணனையும் அம்மாவையும் தன் வசப்படுத்திக்கொண்டு அவளைச் சந்திக்க வழிவகுத்துக்கொண்டும்

இருக்கலாம். அவளுடைய உள்ளத்தில் இந்த எண்ணம் தோன்றி யதும் பலவிதமான எண்ணங்கள் அலையாகத் தோன்றி வெகுதூரம் வரை பறக்கும் பஞ்சுபோல் பரவிவிட்டன. அவள் தனிமையில் உள்ளத்தோடு உரையாடிக்கொண்டே மெய்ம்மறந்து போனாள். அவள் ஒரு புரியாத கிளர்ச்சியை உணர்ந்தாள். வீட்டிற்கு வந்த பிறகு கிழத்தாய் இரண்டு நாட்கள் வரை, பேசாமல் இருந்தாள். சில நாட்களுக்குப் பிறகு கண்களில் போடப்பட்ட கட்டு அவிழ்க்கப் பட்டது. கிழவியின் கண்களுக்கு எல்லாம் தெரிய ஆரம்பித்தது. போக்ராமும் தனஞ்சயனும் கிழவிக்குப் பார்வையை அளித்தார்கள்.

கிழவியைப் பட்டணத்திற்கு அழைத்துப்போகும் நாளன்று தனஞ் சயன் வேறு விதமான வேலைகளில் முனைந்திருந்தான். வாசந்தி தேநீர் கொடுக்கும்பொழுது அவன் முகத்தை நேராகப் பார்த்துப் புன்முறுவல் செய்தாள். அவ்வளவுதான். ஆனால் அவன் பதிலுக்கு அவளையும் விட அதிகமாகவே பொருள் நிறைந்த புன்முறுவலால் அவளுடைய புன்முறுவலுக்கு வரவேற்பளித்தான். ஒரு அழகிய பெண்ணுக்குத் தன்னுடைய அழகைப் பற்றி ஒரு இயற்கையான நம்பிக்கை ஏற்படுவது உண்டு. அதனால் அவள் பலவாறான எண் ணத்தால் தனஞ்சயனின் இயற்கையான சிறப்புகளை விட்டுவிட்டு கர்வத்துடன் எண்ணலானாள். 'கிழவிக்காகத் தனஞ்சயன் இவ்வளவு பாடுபடுவானேன்! வெறும் கிழவியின் ஆற்றாத நிலையைக் கண்டுதான் தனஞ்சயனுக்கு இவ்வளவு அன்பும் தாராள மனமும் ஏற்பட்டதோ! இதற்கெல்லாம் முக்கியமான காரணம் வாசந்தியின் கிழத்தாய்தான் போலத் தோன்றுகிறது!'

கிழவி பட்டணத்திலிருந்து திரும்பிய நாளன்று தனஞ்சயனும் வந்திருந்தான். கிழவியால் பட்டணத்தில் அவனுக்கு எவ்வளவு கஷ்டம் ஏற்பட்டது என்று அவன் விரிவாக போக்ராமுக்குக் கூறினான். வாசந்தி அப்பொழுது அங்கேதான் நின்று கொண்டிருந் தாள். அவள் வியப்புடன் அவன் சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள். அவன் பேசும்விதமும் கவர்ச்சியாக இருந் தது. அவன் எவ்வளவு அழகாகப் பேசுகிறான்! அவன் குரலும் கம்பீரமாக இருந்தது. அவனும் மிகவும் கெட்டிக்காரனாக இருந்தான். அவனுடைய பேச்சிலிருந்து வாசந்திக்கு பட்டணத்தில் அவனுக்கு எவ்வளவு புகழ் இருக்கிறது என்பது தெரியவந்தது.

அன்று மாலையில்தான் அவர்கள் வீடு வந்து சேர்ந்தார்கள். ஆகையால் தனஞ்சயனை இரவுச் சாப்பாடு சாப்பிடுவதற்காகத் தங்கும்படி செய்துவிட்டார்கள். வாசந்தியும் அவனுக்கு வெளியறை யில் படுக்கை விரித்துப் போட்டாள்.

அன்று தனஞ்சயன்தான் அவளைக் கூப்பிட்டுப் பேசத் தொடங்கினான். "வாசந்தி! நான் இதுவரையில் உன் வீட்டிற்கு ஐந்து முறை வந்திருக்கிறேன். ஆனால் நீ இதுவரை என்னிடம் எதையும் கேட்கவே இல்லையே! நான் ஏதாவது கேட்டாலும் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு பதிலளிக்கிறாய்! நான் அழையாத வீட்டிற்குள் நுழையும் விருந்தாளியா?" என்று அவன் கேட்டான்,

வாசந்தி பதிலளிக்காமல் அவனுடைய முகத்தைப் பார்த்தவாறே சிரித்துக்கொண் டிருந்தாள். சிரிக்கும்பொழுது அவளுடைய இரு கன்னங்களிலும் இரண்டு அழகிய குழிகள் விழுந்தன. அவை மனத்தைக் கவரக்கூடியனவாக இருந்தன. ஒரு வாலிபப் பெண்ணின் இயற்கையான அறிவுடன், அவன் குறையாக இவ்வாறு சொல்லவில்லை; அவன் அவளிடம் பேசுவதற்கு வழி தேடிக் கொண்டிருந்தான்; அவன் அவளது உள்ளக் கருத்தை வெளியே வரவழைக்க விரும்பிக்கொண் டிருந்தான்; அல்லது இவ்வாறு பேசித் தன்மீது அவளுக்கு ஆசையை உண்டாக்க விரும்பிக்கொண் டிருந்தான் என்றெல்லாம் அவள் புரிந்து கொண்டாள். ஏனென்றால் வாலிபப் பெண்ணிடம் வந்தவுடன் எந்த ஆடவனும் சக்தி வாய்ந்த ஓனாயாக ஆகிவிடுவான். கம்பீரமான ஆண் மகன் கூட இப்படிப்பட்ட நேரத்தில் மழைக்கால மயிலைப்போல ஆடத்தொடங்கி விடுவான். இந்த நேரத்தில் ஆடவனின் கடுமையான உள்ளமும் சஞ்சலப்பட்டுத்தான் போகும்.

வாசந்தி அவனுக்குப் பதிலளிக்கவில்லை. ஆனாலும் அவனுடன் பேசவேண்டுமென்ற ஆசையை அவளால் அடக்க முடியவில்லை. "மற்றவர்களுக்காகக் கஷ்டப்படுவதில் உங்களுக்கு என்ன ஆனந்தம் உண்டாகிறது?" என்று அவள் கேட்டாள். அதற்குப் பிறகு அவளுடைய வாயிலிருந்து எதிர்பாராமல் "நீங்கள் எவ்வளவு நல்லவர்!" என்ற வார்த்தைகள் வெளிவந்தன. அவன் மிகவும் கவனத்துடன் அவளுடைய வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தான். அவளுக்கு விடையளிப்பதற்காக சிறிது நேரம் யோசனை செய்துகொண் டிருப்பதுபோல் தோன்றினான். தனஞ்சயன் மெதுவாகச் சொல்ல ஆரம்பித்தான், "கேள் வாசந்தி! மனிதன் எல்லாக் காரியங்களும் எப்பொழுதும் தன் நன்மைக்காகவே செய்வதில்லை. இப்பொழுது மனிதன் தன்னுடைய சுயநலத்தை மறைத்துக் கொண்டு பிறருக்கு உதவி புரியக் கற்றுக் கொண்டுவிட்டான்."

அந்த நேரத்தில் உள்ளேயிருந்து அண்ணன் கூப்பிடுவது காதில் விழுந்தது. வாசந்தியை அவன் கூப்பிட்டான். அவள் உடனே

அண்ணன் இருந்த இடத்திற்குப் போனாள். அண்ணன் அவளிடம், "என் அறையிலுள்ள கொடியில் ஒரு வேட்டி தொங்கிக்கொண்டிருக்கிறது. தம்பிக்கு உடை மாற்றிக் கொள்வதற்கு அதை எடுத்துக் கொடு," என்று கூறினான். அண்ணி அப்பொழுது சமையலறையில் உணவு தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தாள். வாசந்தி வேட்டியை வைப்பதற்காகத் தனஞ்சயன் இருக்குமிடத்திற்குப் போனபொழுது அவன் அவளுக்கு மிகவும் அருகில் நின்றுகொண்டு மெதுவாக, "வாசந்தி, பகல் நேரத்தில் நேரம் கிடைக்கும்பொழுது நீ எதைப் பற்றியுமே நினைப்பதில்லையா?" என்று கேட்டான். வாசந்தி விடையளிக்காமல் இருந்தாள். அவள் இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு வெகு நேரம் வரையில் அசையாமல் நின்றுகொண்டிருந்தாள். "நீ நல்ல பெண். அதனால்தான் நான் கேட்டதற்கு நேரடியாகப் பதிலளிக்க முடியாமல் இருக்கிறாய். நான் இதை நன்றாக உணருகிறேன். ஒரு விதத்தில் எனக்கு பதில் கிடைத்தும் விட்டது." என்று அவன் இனிய குரலில் பேசினான்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட பிறகு வாசந்தியால் அவனருகில் நின்றுகொண்டிருக்கமுடியவில்லை. அவளுடைய உள்ளம் வேகமாக அடித்துக் கொண்டிருந்தது.

கொஞ்சம் கொஞ்சமாகத் தனஞ்சயனின் எதிரில் போவதில் ஏற்பட்டிருந்த வாசந்தியின் கூச்சம் மறைந்துவிட்டது. வீட்டிலுள்ளவர்களெல்லோரும் அவனைப் பலவாறாகப் புகழ்ந்து கொண்டிருந்ததே அதற்குக் காரணமாக இருந்தது.

"இவன் எந்தப் பிறவியிலோ என் மகனாக இருந்திருக்கவேண்டும். எனக்கு ஒரே மகன்தான் என்று முதலில் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் இனிமேல் தனஞ்சயனும் என் மகன்தான்" என்று அம்மா கூறினாள். "தனஞ்சயனைப் போன்ற ஒரு இளைஞனைக் காண்பது மிகவும் அரிதாகும். அவனைப்போல் நானும் தாராள மனப்பான்மை யுள்ளவனாக இருந்திருப்பேனேயானால் இவ்வளவு மனிதர்களுடைய பழக்கம் கிடைப்பதே பெரும் பாக்கியமாக இருந்திருக்கும்" என்று அண்ணன் கூறினான்.

வாசந்தி இதையெல்லாம் கேட்டுப் பூரித்துப் போனாள். தனஞ்சயனிடம் அவளுக்குப் பெரும் நெருக்கமான உணர்வு ஏற்பட்டது. வாலிபப் பருவம் அடைந்து ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு திடீரென்று அவள் தன் உள்ளத்திலும் உணர்வுகளிலும் ஒரு மாறுதலைக் கண்டு ஆசைக்கும் வேதனைக்கும் இடையில் அடிக்கடி திடுக்கிட்டு வரலானாள்.

# மூன்று

பாப்சிலாவிலுள்ள எல்லோருமே தனஞ்சயனிடம் மிகவும் அன்பு காட்டினார்கள். தனஞ்சயன் எப்படிப்பட்டவன் என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் அவன் எந்த ஊரைச் சேர்ந்தவன்; எங்கிருந்து வந்து அந்த ஊரில் தங்கியிருக்கிறான் என்பது யாருக்குமே தெரியாது. ஆனாலும் பாப்சிலா மக்கள் அவனைத் தங்கள் கிராமத்தைச் சேர்ந்தவனாகவே கருதினார்கள்.

1950ஆம் ஆண்டில் பூகம்பம் ஏற்பட்டபொழுது அவன் எங்கிருந்தோ அங்கே வந்து சேர்ந்தான். அவனிடத்தில் நல்ல குணங்கள் பல இருந்தன. அவன் எல்லோரிடமும் மிக இனிமையாகப் பேசுவான். ஆபத்தில் அவனுடைய அறிவுரைதான் பயன்பட்டு வந்தது. அந்த ஊரில் அவன் ஹோமியோபதி மருத்துவனாகவும் இருந்தான். மக்களுக்கு உண்மையான டாக்டர்களைவிட அவன்மீது அதிக நம்பிக்கை இருந்தது. நோயாளியின் முகத்தைப் பார்த்து அவன் நோயைப்பற்றிப் புரிந்துகொண்டு விடுவான். அவன் வந்த பிறகு கிராமத்தில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டிருந்தன. அவன் இல்லாமலிருந்தால் நடுநிலைப்பள்ளி இவ்வளவு விரைவில் தோன்றியிருக்க முடியாது. பாப்சிலாவிலிருந்து போர்போரி வரையில் போடப்பட்டிருக்கும் சாலைக்கு அவன்தான் எல்லோருடைய கையெழுத்துக்களையும் சேகரித்து அரசாங்கத்துடன் பலவாறாகப் போராடியிருந்தான். அதைப்பற்றிக் கேட்டாலே வியப்பாக இருக்கிறது. பாப்சிலாவில் கால்நடை மருத்துவசாலை தோற்றுவிப்பதற்காக அவன் செய்த முயற்சிகளை யாராலும் மறுக்கமுடியாது. இப்பொழுது அவன் ஒரு கூட்டுறவுச் சங்கம் துவக்குவதற்குப் பொதுமக்களின் கருத்தைத் திரட்டிக்கொண்டிருக்கிறான். அவன் முயற்சி செய்யாமலிருந்தால் அரசாங்கத்தின் சார்பில் குடியானவர்களுக்கு இவ்வளவு நல்ல உரம், விதைகள் முதலியன கிடைத்திருக்க முடியாது.

1950ஆம் ஆண்டில் ஏதோ ஒரு மாதத்தில் தனஞ்சயன் எதிர்பாராமல் பாப்சிலாவை வந்தடைந்தான். தான் வடக்கு ஆசாமைச் சேர்ந்த ஒரு நகரத்திலிருந்து வருவதாகவும், அரசாங்க வேலையைவிட்டு விட்டு வேலை தேடிக்கொண்டு வந்திருப்பதாகவும், மெட்ரிக் தேறியிருப்பதாகவும், தனக்கு ஹோமியோபதி மருத்துவ

மும் தெரியும் என்றும் அவன் கிராமத்திலுள்ள பலரிடம் மிகுந்த தாழ்மையுடன் கூறினான். கிராமத்து மக்கள் பள்ளிக்கூடத்திற் கருகில் குப்பை கொட்டும் இடத்தில் அவனுக்கு ஒரு வீட்டைக் கட்டிக் கொடுத்தார்கள்.

அதற்குப் பிறகு அவனுடைய நடத்தையைக் கண்டு கிராமத்து மக்கள் வியப்படைந்தார்கள். அவன் ஹோமியோபதி மருத்துவம் பார்த்தும் சம்பாதிக்கத் தொடங்கினான். ஹோமியோபதி மருந்தின் விலையும் மிகவும் குறைவாகவே இருந்தது. சோறாய் பரியாவைச் சேர்ந்த ஏழை மக்களிடம் இதை விட விலை உயர்ந்த மருந்து வாங்க வசதி இல்லை. அது மட்டுமல்லாது; குழந்தைகளுக்கும் நோயாளிப் பெண்களுக்கும் ஹோமியோபதி மருந்துதான் சிறந்த மருந்தாகும். ஆனால் தனஞ்சயன் ஹோமியோபதி மருத்துவம் மட்டும் பார்த்து வந்தான் என்று கருதுவது தவறாகும். மருந்து கொடுக்கும்பொழுதும் பத்தியம் கூறும்பொழுதும் அவன் மருத்துவ முறையைப் பற்றியோ சாதி-குலத்தைப்பற்றியோ கவலைப்படுவதில்லை. அவன் அடிப் படையாக ஹோமியோபதி மருத்துவம் பார்த்தாலும் மலேரியா காய்ச் சலுக்குக் குனைன் கொடுப்பான்; இருமலுக்கு ச்யவனப்பிராசம் கொடுப் பான்; நோயாளி பலவீனமாக இருந்தால் ஆங்கில வைத்திய மிக்சர் கொடுப்பான். மொத்தத்தில் ஆஸ்பத்திரியே இல்லாமலும் டாக்டரே இல்லாமலும் சேற்றிலும் நீரிலும் மூழ்கியிருந்த அந்த ஊருக்குத் தனஞ்சயன் ஒருவன்தான் வைத்தியன். அவன்தான் வழியற்றவர் களுக்கு வழியைக் காட்டுபவன்.

மக்கள் அவனுக்கு வீடு கட்டிக்கொடுத்திருந்த இடத்தை அவன் அழகாக ஆக்கிக்கொண்டான். அந்த நிலப்பகுதி துலாராம் சைகி யாவைச் சேர்ந்ததாக இருந்தது. அவன் பணம் கொடுத்து அதை விலைக்கு வாங்கிக்கொண்டு தன் பெயரில் தவணைப்பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டான். அந்த இடத்தில் அவன் நான்கு அறைகளைக் கொண்ட ஒரு வீட்டைக் கட்டிக் கொண்டான். ஓர் அறையில் நோயாளிகளைப் பரிசோதனை செய்ய ஏற்பாடுகளைச் செய்துகொண் டான். சிறிது சிறிதாக அவன் ஸ்டெதாஸ்கோப், பீரோ, சைக்கிள் முதலியன வாங்கிக்கொண்டான். இந்த ஆண்டில் நடுநிலைப்பள்ளி யின் ஆசிரியராக ஆகவேண்டும் என்று மக்கள் அவனை வேண்டிக் கொண்டார்கள், அவன் மிகவும் தாழ்மையுடன் "ஒரே கையால் இரண்டு மீன்களைப் பிடிக்க முடியாது" எனக் கூறி அவர்களுடைய வேண்டுகோளை ஏற்க மறுத்துவிட்டான்.

இதுவரையில் அவன் மக்களுக்குத் தொண்டு புரிந்து வந்தான். அவன் தனிமையில் மருத்துவ நூல்களைப் படித்துவந்தான். நோயாளிகளுக்காகத் தான் துன்புறுவதில் அவனுக்குப் பெரிதும் மகிழ்ச்சி கிட்டிற்று. கடந்த நாட்களில் நடந்த துன்பம் நிறைந்த நிகழ்ச்சிகள் நினைவில் தோன்றி இனிமேல் அவனைத் துன்புறுத்தாது. அவனுடைய வாழ்க்கைக்கு ஒரு வழி கிடைத்துவிட்டது. அவனுக்கு வாழ்வின் பொருள் கிட்டி விட்டது. நேற்று வாசந்தியைச் சந்தித்துவிட்டுத் திரும்பிய பிறகு வாழ்க்கை வாழ்வதற்கான ஓர் ஆழ்ந்த பொருளை அவன் புரிந்து கொண்டான். ஆயினும் அவனுடைய உள்ளத்தில் பெரும் போராட்டம் தோன்றிற்று. முன் போல் மகிழ்ச்சி, உள்ளத்து உணர்வுகள், உண்மை முதலியவற்றைப் பற்றற்று ஏற்கும் அவனுடைய திறன் எதிர்பாராமல் குலைந்துவிட்டது. தனிமையில் பலவகையான இன்ப உணர்வுகள் அவனுடைய உள்ளத்தில் தோன்றின. நம்பிக்கையும் ஆர்வமும் வளர்ந்தன. அவன் மனத்தைத் தேற்ற முயன்றான். அவனுடைய மனத்தில் பல கேள்விகள் தோன்றின. இயற்கையான இன்பம் எங்கே கிடைக்கும்? சங்கர் குரு, ''ஹரிபக்தியிலும், தன்னை ஹரியின் தாசனாகக் கருதித் தன்னையே அவனுக்கு அர்ப்பணம் செய்வதிலும் இன்பம் கிடைக்கும்'' என்று கூறியிருந்தார், சுவாமிஜி, 'மக்களுக்குத்தொண்டு புரிவதிலும் தரித்திர நாராயணனை ஆராதிப்பதிலும் கிட்டும்' என்று கூறினார். அதை நினைத்து அவனது உள்ளத்தில் வேதனை தோன்றிற்று. மேலே படிக்கும் வாய்ப்புக் கிட்டியிருந்தால்-இப்பொழுதாவது நூல்களைப் படிக்கும் வசதி கிடைக்குமானால் எத்தனையோ கேள்விகளுக்குத் தனக்கு விடை கிடைக்குமே என்று கருதினான். அந்த விடை முழு விடையாக இல்லாமலிருந்தாலும் இருக்கலாம்! வாழ்க்கை எனும் கண்ணாமூச்சி விளையாட்டில் எதற்குமே உறுதியான விடையொன்று கிடைக்கவே முடியாதுதான்! ஆனாலும் அவன் மக்களுக்குத் தொண்டு புரிவதில் இன்பத்தைக் கண்டான். அந்த இன்பம் பரந்த தாக இருந்தது. துன்ப உணர்வுகளால் அவனுடைய இன்ப உணர்ச்சி பெரிதும் வளர்ந்தது.

இன்று அவன் நேற்றைய நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து பலவாறான யோசனைகளில் ஆழ்ந்திருந்தான். வாசந்தியிடம் தன் உள்ளக் கருத்தை வெளிப்படுத்தி, தான் எந்தத் தவறும் செய்துவிடவில்லையே என்ற கவலை தோன்றிற்று. தவறு செய்யவில்லை என்று முடிவாக எண்ணினான். அவள்தான் எத்தனை அழகாக விடை அளித்தாள்! அந்த விடை அளிப்பதற்காக அவள் நாட்களை எண்ணிக்கொண் டிருந்தாளோ என்னவோ?

தன்னைப் புரிந்துகொள்ள அவன் முன்பு நடந்த பல நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து கொண்டான். இரண்டு சிறிய நிகழ்ச்சிகள்தான் அவை. ஆனால் பொருள் செறிந்தவையாகும். பாப்சிலாவைச் சேர்ந்த சருகன் என்பவனுக்குப் பெருத்த காய்ச்சல் நோய் கண்டிருந்தது. பதினான்கு நாட்களுக்குப் பிறகு நோய் பெருகிவிட்டது. அவன் அன்று நோயாளியின் அருகில் இருந்தான். முன்னிரவில் நோயாளி அரற்றிக் கொண்டிருந்தான். ஆனால் இரண்டு வாய் மருந்து கொடுத்ததும் அவன் தூங்கி விட்டான். அவனுடைய மனைவி கவலை குறைந்து பக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் ஒரு வாலிபப் பெண். மெய்ம்மறந்து தூங்கிக்கொண்டிருந்ததால் அவளுடைய உடலிலிருந்த துணி கலைந்து விட்டது. விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் அவளுடைய வாளிப்பான துடையும், பாதி மறைந்திருந்த மார்பகமும் அவனுடைய உள்ளத்தைச் சஞ்சலப் படுத்திற்று. அமைதியைக் குலைக்கும் சிற்றின்ப உணர்ச்சி அவனுடைய உள்ளத்தை அனலாக எரித்தது. தான் இந்த நேரத்தில் விளக்கை அணைத்துவிட்டு அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டால் அவள் தன்னுடைய ஆசையைத் தீர்த்து விடுவாள் என்று அவன் எண்ணினான். இந்த எண்ணம் அவனது உள்ளத்தில் சிறிதுசிறிதாக வளரலாயிற்று. சோனுய் ஆற்றின் வடக்குக் கரையை மையமாகக் கொண்டு வளர்ந்து வரும் தன் எதிர்காலத்தையும் அப்பொழுதிருந்த தன் புகழையும் அவன் மறந்து போனான். ஆனால் எதிர்பாராமல் ஏதோ ஒரு புரியாத சக்தி அவனது எண்ணத்திற்குத் தடை போட்டது. அவள் ஒரு அனாதைப் பெண்; வேறு வழியின்றி அவள் அவனுக்குத் தன் உடலை அர்ப்பணம் செய்து விடுவாள். இவ்வாறு செய்யும்பொழுது சருகன் பிழைக்கவேண்டும் என்றே அவள் எண்ணுவாள். சருகன் குணமான பிறகு வாழ்நாள் முழுவதும் அவள் உள்ளத்தில் தனஞ்சயன்பால் வெறுப்பே வளர்ந்திருக்கும். ஒரு பெண்ணின் வெறுப்பு தன் வாழ்வு முழுவதையும் பாழையமாக ஆக்கிவிடும் என்று அவன் எண்ணினான். அது ஒரு பண்புப் பிரச்சினையாக இருந்தது. தனது புகழைப் பயன்படுத்திக் கொண்டு கீழ்த்தரமான செயலைச் செய்யக்கூடாது என எண்ணியவனாய் அவன் உள்ள உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டு மெதுவாக நோயாளியை விட்டு அப்பால் சென்றுவிட்டான். அவன் மறுநாள் கிராமத்துப் பெரியவரான சிரீதர் பாயனிடம் சென்றான். பாயனின் வயது கிட்டத்தட்ட எண்பது இருக்கும். கிராமத்துச் சச்சரவுகளையெல்லாம் அவர்தான் தீர்த்துவைப்பது வழக்கம். அவர் நல்ல

அறிஞர். அவன், பாயனிடம் "ஐயா! நான் சில மாதங்கள் இந்த வேலைகளைவிட்டு அகன்று இருக்கலாம் என்று எண்ணுகிறேன். ஏனென்றால் எனக்கு என் மீதே நம்பிக்கை இல்லாமல் போய்க் கொண்டிருக்கிறது." என்று கூறினன். பாயன் வியப்புடன், இவ்வாறு கூறுவதற்குக் காரணம் என்னவென்று கேட்டார். அவன் உணர்ச்சி வயப்பட்டவனாய் கூறலானான். "மக்கள் எனக்கு இவ்வளவு அன்பை அளித்துத் தவறு செய்து விட்டார்கள். என்னைத் தெய்வத்திற்குச் சமமாகக் கருதிக்கொண்டு இன்னும் தவறு செய்து கொண்டிருக்கிறார்கள். என்னதான் இருந்தாலும் மனிதன் மனிதன் தானே! மனிதன் தெய்வமாக முடியாது." தன் உள்ளத்திலும் ஒரு விஷப்பாம்பு மறைந்திருக்கிறது என்று அவன் சொல்லத்தான் விரும்பினான். ஆனால் அவனால் அதைச் சொல்ல முடியவில்லை. அவன் என்ன சொல்ல விரும்பினான் என்பதைப் பாயனால் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனாலும் அவர் பல நல்ல வார்த்தைகள் சொல்லி அவனுடைய வருத்தத்தைச் சிறிது குறையும்படிச் செய்தார்.

வாசந்தியிடம் தன் உள்ளத்தில் மறைந்திருக்கும் ஆசையை வெளியிட்டு, தான் எந்தத் தவறும் செய்துவிடவில்லை என்று அவன் எண்ணினான். மனிதன் வாழ்வதற்கு ஏதாவது வேண்டியதுதானே! சிறிது சிற்றின்பம் கலந்த விசித்திரமான அன்பு தேவைதான். வாசந்தியும் அவனைக் காதலிக்கிறாள். அவளுடைய கண்கள் இதனைத் தெரிவிக்கின்றன. அவளுடைய முகம் இதனை வெளியிடு கிறது. உடலசைவு ஒவ்வொன்றும் இதைக் குறிப்பிடுகிறது. அது மட்டுமல்லல; அவன்தான் அவளை ஏற்றுக்கொண்டு குடும்பம் நடத்தப் போகிறானே!

நடுப்பகல் நேரத்தில் அவன் சோனாய் ஆற்றைக் கடந்து தெற்குக் கரையை அடைந்தான். அவன் சைக்கிள் எடுத்துக்கொண்டு போகவில்லை. வாசந்தியின் வீட்டிற்குப் போவதற்கு அவனுக்கு நாணமாக இருந்தது. முன்பு போக்ராமின் வீட்டிற்குப் போனதற்கும் இப்பொழுது போவதற்கும் பெரும் வேற்றுமை காணப் பட்டது. இப்பொழுது அவனுடைய வீட்டிற்குப் போனால் சுவரி லுள்ள ஒவ்வொரு துளையும் கண்ணும் காதும் போல் தன்னையே கவனிப்பதாகத் தோன்றும் என்று அவன் நினைத்தான். சோனாய் ஆற்றின் கரையோரமாக நடந்துகொண்டே அவன் டனுவா கட்டத்தை அடைந்தான். எதிர்பாராமல் அவன் திடுக்கிட்டான். அவன் அதை எதிர்பார்க்கவில்லை. ஆற்றங்கரையின் அருகில் வாழை மரங்களின் நிழலடியில் கன்னத்தில் கையை வைத்துக்

கொண்டு எதையோ நினைத்தவளாய் வாசந்தி உட்கார்ந் திருந்தாள். அவன், 'வாசந்தி' என்று குரலிட்டு அழைத்தான். அவள் திடுக்கிட்டு எழுந்து நின்றாள். 'அடே! நீங்களா?' என்று திடுக்கிட்டுக் கேட்டாள்.

தனஞ்சயன் கட்டளையிடும் குரலில் 'உட்கார்' என்று கூறினான். அவள் உட்கார்ந்துக் கொண்டாள். அவன் பேசத் தொடங்கினான். "உன்னிடம் சில விஷயங்கள் சொல்லவேண்டும் என்று நினைத்துக் கொண்டுதான் வந்திருக்கிறேன். அவற்றைச் சொல்லாவிட்டால் எனக்கு அமைதி கிடைக்காது. நான் ஒரு தனிக்கட்டை. ஆனால் உன்னிடத்தில் வருத்தத்தை தெரிவிப்பதால் எனக்கு அமைதி கிடைக்கும். இது மிகவும் வியக்கத்தக்க விஷயம்தான்." இவ்வாறு சொல்லிக்கொண்டு அவனும் உட்கார்ந்து கொண்டான். நடுப் பகல் நேரத்தில் சோனாய் ஆற்றங்கரை மிகவும் வெறிச்சென்று இருந்தது. தொலைவிலிருந்து ஆற்றுப் பறவையின் குரல் மிதந்து வந்து அங்குள்ள அமைதியை மிகைப்படுத்தியது. மிக அருகில் மீன் கொத்திப் பறவை கத்திக்கொண் டிருந்தது. மெல்ல வீசும் காற்றில் கூட அக் கரையிலுள்ள உயர்ந்த புல் அசைந்துகொண் டிருந்தது. மேற்குக் கரைக் கோடியில் இரண்டு மூன்று படகுகள் கீறலைப் போல் மறைந்துகொண் டிருந்தன. இளைஞன், இளம்பெண் இருவருடைய இளம் உள்ளங்களும் நடுங்கிக் கொண்டிருந்தன. அவர்கள் தங்கள் எண்ணங்களிலே மூழ்கியிருந்தார்கள். "வாசந்தி! நான் யார் என்று உனக்கு இன்னும் தெரியாதே?" என்று தனஞ்சயன் கேட்டான். 'இன்னும் தெரிந்து கொள்ளவேண்டியது தேவையா?' என்று வாசந்தி கூறினாள். அவன் மிக அமைதியுடன் தன் துன்பக் கதையை அவளிடம் கூறித் தன் உள்ளச் சுமையைக் குறைத்துக் கொண்டான்.

"வாசந்தி, இவ்வாறு சமுதாயத்திற்கு நான் தொண்டு புரிவது உள்ள உணர்வுகளை மறக்க வைப்பதற்கான முயற்சிதான் என்பதை நீ அறிய மாட்டாய்!"

"அது எப்படி முடியும்?"

"நான் உண்மையாகக் கூறுகிறேன். பல நாட்களுக்குப் பிறகு உண்மை பேசுவதால் மனச்சுமை குறைந்ததாகத் தோன்றுகிறது. கிராமத்தார்களிடம் நான் எதைச்சொன்னாலும் அவர்கள் நம்பிவிடு கிறார்கள். சோனாய் பரியாவிலுள்ள மக்கள் அப்பாவிகள். ஆதலால்தான் இந்த இடம் எனக்கு என் பிறந்த இடம் போல் தோன்றுகிறது. நான் ஏன் என் குடும்பத்தை விட்டு விட்டுத்

தொலைவில் வந்திருக்கிறேன்? என் குடும்பத்தில் யார் யார் இருக்கிறார்கள் என்று அவர்கள் என்னிடம் கேட்கவேயில்லை.''

''உம், சொல்லுங்கள்.''

''நான் என்னுடைய வாழ்க்கையைப்பற்றி யெல்லாம் உன்னிடம் கூறுகிறேன். அப்பொழுது உனக்கு என்மீது ஒரு வேளை இரக்கம் ஏற்படலாம். அதைக்கேட்ட பிறகு உன்னால் என்னை மறக்கவும் முடியாது.''

''அப்படி ஏன் கூறுகிறீர்கள்? எனக்கு மட்டும் வருத்தமாக இல்லையா?

''உன்னுடைய இந்தச் சொல் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது வாசந்தி! மிகவும் பிடித்திருக்கிறது.''

வாசந்தியின் இரண்டு கண்களும் கண்ணீரால் நனைந்துவிட்டன. தனஞ்சயனின் குரலில் ஒரு நடுக்கம் தோன்றிற்று. அவன் குரல் அமைதியற்றும் கெஞ்சுவது போலும் தென்பட்டது.

வாசந்தி அவனுடைய மார்பில் சாய்ந்து கொண்டாள். அவன் நடுநடுவில் அவளுடைய மெல்லிய விரல்களைத் தொட்டுக்கொண்டும் அவளுடைய மென்மையான தலை முடியைத் தடவிக்கொண்டும் தன்னுடைய கடந்த கால வாழ்க்கைக் கதையைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

அவனுடைய குடும்பம் லக்கீம்புரைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் இருக்கிறது. அவனுடைய தந்தை அவனுடைய குழந்தைப் பருவத்திலேயே இறந்து விட்டார். பெரியப்பாவின் வீட்டில் இருந்து கொண்டு தாய் அவனையும் அவனுடைய தங்கையையும் வளர்த்து வந்தாள். ஏழ்மையிலும் மற்றவர்களின் வீடுகளில் வேலை செய்து தாய் அவனை உயர்நிலைப் பள்ளிக்கூடத்தில் இரண்டு மூன்று வகுப்புகள் வரைப் படிக்க வைத்தாள். ஆனால் தாயும் அதிக நாட்கள் உயிருடன் இருக்கவில்லை. பெரியப்பா நல்ல மனிதராக இல்லை. கொஞ்சம் கொஞ்சமாக அவருக்கு அவனையும் அவன் தங்கையையும் பிடிக்காமற்போக ஆரம்பித்தது. அவர் அடிக்கடி திட்ட ஆரம்பித்தார். அவன் பள்ளிக்குப் போவதை விட்டுவிட்டு இடையனாக மாற வேண்டி வந்தது தங்கையும் வேலைக்காரியைப் போல் நாட்களைக் கழிக்கத் தொடங்கினாள். வருத்தத்தினால் அவர்கள் எத்தனை நாட்கள் சாப்பாடு கூட சாப்பிட முடியாமல் இருந்தார்கள் என்பது யாருக்குமே தெரியாது. எத்தனையோ இரவுகளை அவர்கள் அழுது கொண்டே கழித்தார்கள் ! ஆனால் யாருடைய உள்ளமும் அதனால் இரக்கம் கொள்ளவில்லை. பெரியப்பாவோ தன் குழந்தைகளை ஆடம்

பரமாக வளர்த்து வந்தார். அவர்களுடைய உணவும் உடையும் தனஞ்சயன், அவன் தங்கை இவர்களுடைய உணவு-உடையி லிருந்து வேறுபட்டிருந்தன. பெரியவனுக ஆன பிறகு அவன் இதை யெல்லாம் புரிந்துகொண்டான். ஒரு நாள் அவன் மயானத்தில் தாயை எரித்த இடத்தில் போய் கதறி அழுது தன் உள்ளத்து வேதனையை யெல்லாம் கொட்டித் தீர்த்தான். மயானத்தின் பயங்கர மான சூழ்நிலை அவனுடைய துன்பத்தை இன்னும் அதிகமாக வளர்த்து விட்டது. ஆனல், தெய்வம் அவனிடத்தில் கருணை கொள்ளவில்லை. இறந்துபோன தாயின் ஆத்மா அவனுக்கு ஆசி யளித்திருந்தாலும் அதன் பலன் அவனுக்கு உடனே கிட்டவில்லை. தங்கை மன்தராவின் மீது பெரியம்மாவின் கொடுமை நாளுக்குநாள் வளர்ந்து கொண்டே போயிற்று. ஒருநாள் அவன் வீட்டிற்கு வந்த பொழுது அவனுல் தன் தங்கையின் துன்பத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஒரு நாள் அவன் மெதுவாக மன்தரா விடம் கூறினுன், "நான் ஒரு நாள் இவர்களுக்குச் செய்து காண்பித்து விடுகிறேன். இந்த வீட்டை விட்டே போய்விடுகிறேன். இவர்கள் என்னை வீட்டில் இருக்கும்படி சொல்ல மாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். எங்கேயாவது போய் வேலை பார்த்து உனக்கு முறையாகப் பணம் அனுப்புகிறேன். நீ இவர்களுடைய பயமுறுத்தல் களுக்கெல்லாம் பணியாமல் சந்தோஷமாக இரு. நான் சிறிது நல்ல நிலைக்கு வந்ததும் உன்னை அழைத்துப் போகிறேன். ஒரு நாள் பயமில்லாமல் வந்து என்னுடைய சொத்தை இவர்களிடம் கேட் கிறேன். கொடுக்கவில்லை யென்ருல் வழக்குப் போட்டுவிடுகிறேன்." மன்தராவும் அவன் சொல்வதை ஏற்றுக் கொண்டாள்.

அவன் வீட்டைவிட்டுப் போய் விட்டான். அவன் முதலில் டிப்ருகட்டில் ஒரு தேநீர் கடையில் இருந்துக் கொண்டு வேலை தேடத் தொடங்கினுன். இவ்வாறு இரண்டு மாதங்கள் கழிந்தும் ஒரு பயனும் கிட்டவில்லை. ஆயினும் அவனது மனத்திண்மை வளர்ந்துகொண்டே யிருந்தது. இருபது ரூபாயுடன் அவன் மறுபடியும் வீட்டிற்குத் திரும்பி வந்தான். அவன் உள்ளம் மறுபடியும் தேநீர்க் கடையில் வேலை பார்ப்பதை விரும்பவில்லை. அவனைப் பார்த்துப் பெரியப்பா எந்த விதமான அனுதாபமும் காட்டவில்லை. ஆனல் மனைவியை மட்டும் கூப்பிட்டு அவர், "இவன் எங்கே போவான்? இவனுடைய திறமையைப்பற்றி எனக்குத் தெரியாதா? இப்பொழுது இவன் தந்தையின் நிலத்தில் பங்கு கேட்க வந்திருக்கிருன் என்று நினைக் கிறேன்" என்று கூறினுர். அவனுக்குச் சம வயதினனை பெரியப்

பாவின் மகன் நரேனும் அவனைப் பார்த்து முகத்தைத் திருப்பிக் கொண்டான். ஆனால் மன்தரா மட்டும் அவனைப் பிடித்துக்கொண்டு கதறி அழுதாள். ஆனால் அவன் மௌனமாகவே இருந்தான். அவன் உள்ளம் இன்னும் கடுமையாக ஆகிவிட்டது. மன்தராவின் கையில் பதினைந்து ரூபாய்களைக் கொடுத்து அவன், "மன், இதைக் கொண்டு ஒரு ஜோடி நல்ல துணி எடுத்துக்கொள்" என்று சொல்லி விட்டு அவளுடைய பதிலைக் கேட்காமலேயே ஐந்து ரூபாய்களை மட்டும் எடுத்துக்கொண்டு ஈரமற்ற இந்த உலகில் வாழ்க்கைப் போராட்டத்தை எதிர் நோக்கிக் கிளம்பிவிட்டான். இந்த முறை அவன் டிப்ருகட் போகவில்லை. மரான் என்ற இடத்திற்கு பஸ் டிக்கட் வாங்கிக் கொண்டான். பஸ் கண்டக்டர் அவனுக்குப் பழக்கப் பட்டவன். அவன் வேலை செய்துகொண் டிருந்த தேநீர்க் கடைக்கு அந்தக் கண்டக்டர் அடிக்கடி வருவது வழக்கம். கோஆங்கில் பஸ் நின்றபொழுது அவன் தனஞ்சயனிடம் 'நீ எங்கே போகிறாய்?' என்று கேட்டான். அந்தக் கண்டக்டர் மற்றவர்களின் துன்பத்தைப் புரிந்து கொள்ளக்கூடியவன். தனஞ்சயனைப் பார்த்ததுமே இவன் ஒரு அனாதை என்பதை அவன் புரிந்து கொண்டுவிட்டான். மிகவும் அனுதாபத்துடன் அவன் போக வேண்டிய இடத்தைப் பற்றிக் கேட்டான். தனஞ்சயனும் மிகவும் சுருக்கமாக தனது துன்பக் கதையைத் தெரிவித்தான். கண்டக்டரும் சிறு பையன்தான். வயது இருபது-இருபத்தொன்றுக்குமேல் இருக்காது. கண்டக்டருக் கருகிலிருந்த இடத்தில்தான் அவனுக்கு உட்கார இடம் கிடைத் திருந்தது. வழியில் ஓடும் வண்டியில் அவன் தனஞ்சயனிடம் "நீ எது வரையில் படித்திருக்கிறாய்?" என்று கேட்டான். அவனும் "எட்டாவது வகுப்பில் நான்கு மாதங்கள் படித்திருக்கிறேன்" என்று பதிலளித்தான். கண்டக்டர் அவனுக்கு ஆறுதல் அளித்தவாறு கூறினான், "கவலைப்படாதே, நான் உனக்கு ஒரு வேலை ஏற்பாடு செய்து தருகிறேன். நானும் உன்னைப் போல ஒரு அனாதைதான், நான் இந்த வேலையை வெறும் வயிற்றிற்காக மட்டுமல்ல, வருங் காலத்திற்காகவும் செய்கிறேன். நான் டிரான்ஸ்போர்ட் அலுவல கத்தில் சொல்லித் தினசரி நான்கு மணிக்கு முன்னால் டிப்ருகட் திரும்பி வந்துவிடும்படி ஏற்பாடு செய்துகொண் டிருக்கிறேன். நான் இரவுக் கல்லூரியில் படிக்கிறேன். இந்த ஆண்டு நான் இண்டர்-ஆர்ட்ஸ் தேர்வு எழுதப் போகிறேன்." இதைக் கேட்டதும் தனஞ் சயன் வாயடைத்துப்போனான். கண்டக்டராக இருந்துகொண்டு இரவுக் கல்லூரியில் படிக்கும் இந்த இளைஞனின் உள்ளம் பெரிதும்

திண்மை வாய்ந்தததுதான்! கண்டக்டர் மறுபடியும் சொல்லத் தொடங்கினுன், "இம்மாதிரி கஷ்டங்கள் வரத்தான் செய்யும். ஆனுல் நம்மைப் போன்றவர்கள் எத்தனை துன்பங்கள் வந்தாலும் மன உறுதியுடன் இருக்கவேண்டும் என்பதைத் தெரிந்து கொள். இல்லையானுல் நமக்கு எந்த வழியும் கிடையாது. தாழ்ந்த நிலையிலிருந்துதான் எல்லோரும் பெரியவர்களாக ஆகிருர்கள்."

அவனுடைய இந்தச் சொற்கள் தனஞ்சயனுக்குப் பெரிதும் ஆறுதலளித்தது. கண்டக்டர் உண்மையிலேயே அன்று அவனை ஒரு வேலையில் அமர்த்திவிட்டான்.

தேயிலைத் தோட்டவேலையிலிருந்து விடுதலை பெற்ற ஒரு டாக்டர் ஒரு புதிய மருத்துவசாலை திறந்திருந்தார். அங்கே சில மருந்துகள் இருந்தன. அவருக்கு உதவியாக ஒரு பையன் தேவையாக இருந்தது. ஆனுல் ஒரு கம்பவுண்டர் வைத்துக்கொள்ள அவரிடம் பணவசதி இல்லாமலிருந்தது. ஆங்கிலம் தெரிந்த ஒரு பையன் கிடைத்தால் போதும். கற்றுக் கொடுத்தால் மருந்து கலந்து கொடுக்கக்கூடியவனுகவும், அவர் இல்லாதபோது தானே வாடிக்கைக்காரர்களுக்கு மருந்து விற்கக்கூடியவனுகவும் இருந்தால் போதும். ஆகையால் கண்டக்டர் தனஞ்சயனைத் தனக்குப் பழக்கமான அந்த டாக்டரிடம் அழைத்துச்சென்றதும் டாக்டர் பெரிதும் சந்தோஷப்பட்டார். மாதம் இருபது ரூபாய் சம்பளத்தில் மருத்துவசாலையில் தனஞ்சயனுக்கு வேலை கிடைத்து விட்டது. அங்கே இருக்கும்பொழுது அவன் மருத்துவத்தைப் பற்றிய பல விஷயங்களைக் கற்றுக்கொண்டு விட்டான். மருத்துவசாலையில் இருக்கும்பொழுது அவன், ஹோமியோபதி வைத்தியத்தைப் பலர் விரும்புகிருர்கள், அது மட்டுமல்லாது சில நோய்களுக்கு ஹோமியோபதி வைத்தியம் மிகவும் சிறந்தது, மரானுக்கு மேற்குப் பக்கத்தில் இருக்கும் ஹோமியோபதி டாக்டரின் தொழில் மிகவும் நன்ருக நடக்கிறது என்பதையெல்லாம் புரிந்து கொண்டான். தனஞ்சயனும் ஹோமியோபதி வைத்தியக் கலையைக் கற்றுக்கொள்ள ஆசைப்பட்டான். அந்தக் கலையைக் கற்றுக் கொள்வதும் எளிமையாக இருந்தது. புத்தகங்களும் வங்காளியிலோ, அசாமிய மொழியிலோ எழுதப்பட்டிருந்தன. மரானில் இருந்துகொண்டு அவன் இரண்டு மூன்று புத்தகங்களையும் படித்து விட்டான். அவன் ஒரு பெரிய புத்தகத்தை விலைக்கு வாங்கிக் கொண்டான்.

மரானில் இருப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. இவ்வாறு வாழ்வதால் முன்னேற்றத்திற்கான பாதை கிடைக்காது என்றும் அவன்

கருதினன். ஓரிரண்டு பேரிடம் சொல்லி அவன் ஒரு சிறிய கிராமத்துப் பள்ளியில் ஆசிரியர் வேலையில் அமர்ந்துகொண்டான். ஆசிரியராக வேலை பார்த்தால் பள்ளிக்கூடத்தில் படிக்காமலே கூட மெட்ரிக் தேர்வில் உட்காரலாம் என்ற சட்டம் இருந்ததே அதற்குக் காரணம். அங்கே இருந்துகொண்டுதான் அவன் மெட்ரிக் தேறினன். அவனுடைய எண்ணம் மேலும் தாவிற்று. அவன் கண்டக்டரைப் போல் கல்லூரியில் படிக்கவேண்டுமென்று கருதினன். அதனல் அவன் புதிதாகத் திறக்கப்பட்ட ஓர் அலுவலகத்தில் (கணக்கீட்டு அலுவலகம்) குமாஸ்தாவாக வேலை பார்க்கத் தொடங்கினன். ஆகஸ்ட் மாதத்தில் கல்லூரியில் சேரலாம் என்று எண்ணியிருந்தான். அது 1950 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம். எதிர்பாராமல் பூகம்பம் ஏற்பட்டு எத்தனையோ பேர் மடிந்தனர்; கணக்கற்ற பசுக்களும் எருமைகளும் பிரம்மபுத்ரா நதியில் மூழ்கிப்போயின. எத்தனையோ பேர் அதில் அனுதையாகிப் போனர்கள்.

இவ்வாறு சொல்லிவிட்டுத் தனஞ்சயன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். வாசந்தி அவனது மார்பிலிருந்து தன் தலையை அகற்றி, கன்னங்களில் கையை வைத்துக் கொண்டு கவனத்துடன் அவன் கூறுவதைக் கேட்டுக்கொண் டிருந்ததை அப்பொழுதுதான் அவன் கவனித்தான்.

"அப்படியா?" என்று எதிர்பாராமல் அவள் கூறினள். அவளுக்கே தன் குரலைக்கேட்டு வியப்பு ஏற்பட்டது.

அவன் மெதுவாக "உனக்குக் கஷ்டமாக இருக்கிறதா வாசந்தி?" என்று கேட்டான்.

"என் ஆணை, மேலே சொல்லுங்கள்."

"என்னுடைய துன்பக் கதையைக்கேட்டு வருத்தப்படமாட்டாயே?"

"வருத்தபட்டால்தான் என்ன? நானும் நீங்கள் சொல்வதைக் கேட்கவில்லையென்ருல் —— ?"

"ஆமாம், கேள். கேட்டுவிட்டு என் தங்கைக்காகக் கொஞ்சம் அழு."

"உங்கள் தங்கைக்காகவா? அவள் பூகம்பத்தில் இறந்து விட்டாளா?"

"இறக்கவில்லை. இறந்திருந்தால் நல்லதாக இருந்திருக்கும். பூகம்பத்தின் கோரத்தைப் பார்த்து என் உள்ளம் அவளை நினைத்துத் துடிக்கத் தொடங்கிற்று. மன்தரா என்ன ஆகியிருப்பாள் என்று எண்ணலானேன். வீட்டிற்குப்போய் பார்த்தால் எங்கள் வீட்டு

அஸ்திவாரமே ஆற்றில் மிதந்துகொண் டிருந்தது. எங்கள் நிலம் பிரம்மபுத்ரா நதியில் மூழ்கிவிட்டது. வயல் நிலத்திலும் காய்ந்த மணல் பரவிக் கிடந்தது. அங்கே இனிமேல் விவசாயமே செய்ய முடியாது. வயலில் பிரம்மபுத்ராவின் தண்ணீர் நிரம்பிக்கிடந்தது. இதுதான் பிரம்மபுத்ராவின் புகழ்.''

'' உங்கள் வீட்டில் யாரையும் பார்க்க முடியவில்லையா ?''

''யார் எங்கே போனார்கள் என்று யாராலும் சொல்ல முடியவில்லை. ஏறக்குறைய ஒரு மாதத்திற்குப் பிறகு, பெரியப்பா தன் குடும்பத்துடன் சிவசாகரிலுள்ள தன் மாமனார் வீட்டிற்குப் போய்விட்டார் என்றும், அவர் அங்கேயே ஒரு தேயிலைத் தோட்டத்தில் வேலை பார்க்கிறார் என்றும் செய்தி கிடைத்தது.''

''மன்தரா ?''

இதைக் கேட்டதும் தனஞ்சயன் கலங்கிவிட்டான். இரண்டு முறை அவன் பெருமூச்சு விட்டு, தன்னைத் தேற்றிக்கொள்ள முயன்ற வாறே கூறினான், '' என்ன சொல்லட்டும் ! இதெல்லாம் என் தவறு தான். இரண்டு மாதத்திற்கு முன்பு ஏராளமான பணத்தை வாங்கிக் கொண்டு பெரியப்பா அவளை ஒரு கிழவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டார் என்று கேள்விப்பட்டேன். அவளுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. எனக்குச் செய்தி அனுப்பவோ அவளுக்கு வழி தெரியவில்லை அவளைப் பலவந்தமாக மணப்பந்தலில் உட்கார வைத்ததாக மக்கள் சொல்லுகிறார்கள் .''

வாசந்தி பெருமூச் செறிந்தாள். அவளுடைய கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் விழுந்ததை தனஞ்சயன் கவனித் தான். அவன் அவளுடைய தோள்களை உலுக்கி நாடக பாணியில் கேட்டான், '' நீயே சொல்லு வாசந்தி ! இதையெல்லாம் கேள்வி யுற்ற பிறகும் நான் எவ்வாறு மன உறுதியுடன் பட்டணத்திற்கு வந்து மறுபடியும் வேலை பார்க்க முடியும் ? மன்தரா ஒருத்திதான் எனக்கு ஆதரவாக இருந்தாள். அவளது நிலையே இவ்வாறு ஆன பிறகு நான் எதற்காகக் கஷ்டப்படவேண்டும் ! பெரிய மனிதனாக ஆனாலும் அதனால் என்ன பயன் ஏற்பட்டு விடப்போகிறது ! ''

தனஞ்சயன் வாசந்தியின் தோளிலிருந்து தன் கையை எடுத்துக் கொண்டான். அதற்குப் பிறகு அவன் தனக்குத் தானே பேசிக் கொண்டான், ''அன்று நான் பிரம்மபுத்ரா நதி பரப்பியிருந்த மண லில் உட்கார்ந்துகொண்டு மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந் தேன். சிவ்சாகரிலோ, லக்கீம் பூரிலோ இருந்தால் மன்தராவைச் சந்திக்க நேரும். அவளை நான் பார்க்கவேண்டும் என்ற ஆசையைத்

தவிர்க்க முடியாது. அப்படியே சந்தித்தாலும் நான் அவளுக்கு என்ன சொல்லி ஆறுதல் அளிப்பேன்! அவள் ஒரு கிழவனின் மனைவியாக இருப்பதைப் பார்த்து எவ்வாறு என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியும்? ''

அவன் மறுபடியும் மௌனமாகிவிட்டான். ஏதோ சிந்தனையில் அவன் உட்கார்ந்திருந்தான். வாசந்தி அவனருகில் நின்றுகொண்டு அவனுடைய தலைமுடியைத் தடவிக்கொண்டிருந்தாள். அவன் மறுபடியும் மிக மெதுவான குரலில் கூறத் தொடங்கினான், ''நன்றாக யோசித்துப் பார்த்தபிறகு நான் இங்கே வந்து விட்டேன். இது நான் மறைந்து வாழும் வாழ்க்கையாகும். இங்கே இருப்பதால் நான் பெரியப்பாவின் வார்த்தைகளையும் கேட்கமாட்டேன். மன்தராவும் என்னைத் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. இங்கே இருப்பதால் நான் என்னை மறக்கவும் முடியும் என்று நினைக்கிறேன்.''

வாசந்தியின் இரு உதடுகளும் துடிக்கத் தொடங்கின. அவள் ஏதோ கேட்கவேண்டுமென்று துடித்தாள். ஆனால் வார்த்தை வாய்க்குள்ளேயே இருந்துவிட்டது. "நீங்கள் எத்தனையோ இடங்களில் இருந்திருக்கிறீர்கள்; அந்த இடங்களை விட்டும் இருக்கிறீர்கள்! மறுபடியும் இந்த சோனாய் ஆற்றங்கரையையும் விட்டுவிட்டுப் போய் விட்டால்...?" என்று அவள் கேட்க விரும்பினாள்.

ஆனால் அவளால் கேட்க முடியவில்லை. அவன் சோனாய் ஆற்றங் கரை கிராமத்தை விட்டுவிட்டுப் போகமாட்டான் என்று அவள் எண்ணினாள். தனஞ்சயனால் வாசந்தியை விட்டுவிட்டுப் போகமுடியாது என்பதே அதற்குக் காரணம். தனஞ்சயனுக்கு ஒரு சந்தேகம் தோன்றிற்று. அவன் இவ்வளவெல்லாம் சொல்லிவிட்டான். ஆனால் தன் சாதியைப் பற்றி மட்டும் சொல்லவில்லையே! அவன் தானாகவே சொல்லத் தொடங்கினான், ''இவ்வளவெல்லாம் கூறினேன். ஆனால் என் குலத்தைப் பற்றிக் கூறவேயில்லையே! வாசந்தி! என் சாதி என்ன தெரியுமா?''

வாசந்தியின் உள்ளம் எதிர்பாராமல் நடுங்க ஆரம்பித்தது. அவள் எதிர்பார்க்காத ஒரு சாதியின் பெயரை அவன் கூறிவிடக் கூடாதே என்று அவள் அஞ்சினாள். அவன் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவனாக இருந்தால்! அவள் உள்ளத்தில் கலக்கமும் குழப்பமும் ஏற்பட்டது. தனஞ்சயன் வெறுப்புடன் சொல்ல ஆரம்பித்தான், '' சாதியில் நான் பிராமணன். நேரத்தில் பூணூல் போட்டுக்கொண்டு நாங்கள் இரண்டாவது முறை பிராமணர்களாக ஆக வேண்டியிருக்கிறது. பிராமணன் தாழ்ந்த சாதிக்காரனைத் தொட்டுவிட்டால் குளிக்க

வேண்டும் என்று சிறு வயதிலிருந்தே கேள்விப்பட்டு வருகிறேன்.''

வாசந்தி இரண்டு கண்களையும் மூடிக்கொண்டாள். சிறு தொலை விலிருந்து அண்ணன் போக்ராம் கூப்பிடும் குரலைக் கேட்டு அவள் தன் நினைவிற்கு வந்தாள். இருவரும் உடனே பிரிந்து இரண்டு திசைகளில் போய் விட்டார்கள்.

## நான்கு

நேற்றைய நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்கும்போது வாசந்திக்குச் சில சமயம் மயிர்க்கூச்சல் ஏற்பட்டது. ஆயினும் அவளுக்கு ஒரு விஷயத்தில் வருத்தமாக இருந்தது. தான் ஏதாவது தவறு செய்து விட்டோமா என்று அவள் அடிக்கடி எண்ணிக்கொண் டிருந்தாள். ஆண்டவன் அருளால் தனஞ்சயனுடன் தனிமையில் பேச அவளுக்கு வாய்ப்புக் கிடைத்தது. ஆனால் முதல் நாளே தன் கையை அவர் தீண்ட அனுமதிக்க வேண்டுமா? இதனால் தனஞ்சயன் தன்னை எளிமையில் கிடைத்துவிடும் பெண்ணாகக் கருதி விட்டானா? அவன் தலை முடியைக் கோதிக்கொண் டிருந்தது சரிதானா? என்று எண்ணினாள்.

வாசந்தி பலவாறாகத் தனக்குத்தானே ஆறுதலளிக்க முயற்சி செய்தாள். தான் எந்தத் தவறும் செய்யவில்லை. தன்னைப்பற்றிக் கூற அவனுக்குத் தன்னிடமிருந்துதான் பலம் கிடைத்தது. இரண் டொரு வார்த்தைகள் பேசிவிட்டு அவன் தன் விரல்களைப் பார்த்துக் கொண் டிருந்தான். அப்பொழுது அவளுடைய விரல்கள் தான் அவனுக்கு ஆறுதலளிக்கக்கூடும் என்று அவனுக்குத் தோன்றியது போல் தென்பட்டது. அவன் இரண்டு கைகளாலும் அவளுடைய விரல்களைத் தடவிக்கொண் டிருந்தான். அப்பொழுதுதான் அவன் தன் உள்ளத்து வருத்தத்தை யெல்லாம் சொல்ல முடிந்தது. அவனு டைய துன்பம் நிறைந்த உள்ளம் அவளைத் தொட்டுத் தன் அனாதை நிலையிலிருந்து விடுதலை பெற விரும்பிற்று போலும். அவள் தன் கைகளை அவனுடைய கைகளில் கொடுத்துவிட்டு அவனைப் பார்த்துக்கொண்டே அவனுடைய விரல்கள் உண்மையிலேயே அழகாக இருக்கின்றன என்று எண்ணத் தொடங்கினாள். ஒரு ஆடவன் முதன் முறையாகத் தொடும்பொழுது அவளுடைய உள்ளம் நடுங்கிற்று; மனம் சஞ்சலப்படத் தொடங்கிற்று. அவளு

டைய உடலில் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது என்பதை அவள் அப்பொழுதுதான் உணர்ந்தாள். அவள் தன்னை மறந்து உட்கார்ந் திருந்தாள். தனஞ்சயனின் முகம்தான் எவ்வளவு அழகு! ஒன்று மறியாத குழந்தை முகம்! அந்த முகத்தில்தான் குழந்தையைப் போன்ற எவ்வளவு தூய்மை காணப்பட்டது? அவன் தங்கையைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தபொழுது அவனுடைய கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன; அவனுடைய இரு கண்களும் ஒரு பயங்கரமான வெறுப்புடன் விரிந்துகொண்டும் குறுகிக் கொண்டும் இருந்தன. அவனது குரலும் தடைப்பட்டுக்கொண் டிருந்தது. தனிமையில் அவன் இதையெல்லாம் நினைத்துக் கண்ணீர் வடித்துக் கொண்டிருப்பான் எனறு வாசந்தி எண்ணினுள். வாசந்தியின் உள்ளத்தில் அந்த அப்பாவியின் மீது பெரிதும் கருணை தோன்றிற்று. அவன் அழுது விடுவான் போல் தோன்றிற்று. அதனுல்தான் அறியாமலே அவளுடைய கை அவனுடைய தலைப்பக்கம் சென்றது. மிக்க அன்புடன் அவள் அவனுடைய தலை முடியைக் கோதத் தொடங்கினுள். அவள் ஒரு கொட்டாவி விட்டாள். அப்பொழுதும் அவன் அவளுடைய கையைப் பிடித்துகொண்டே யிருந்தான். அவனுடைய பிடியில்தான் எவ்வளவு வேதனை! எவ்வளவு உறுதி! எவ்வளவு கவலை! அவனுடைய உணர்ச்சியை அவளால் மறக்க முடியவில்லை.

இப்பொழுது அவள் அவனைத் தொடவிட்டதில் தான் எந்தத் தவறும் செய்து விடவில்லை என்று மிகவும் உறுதியாக எண்ண லானுள். ஆயினும் தான் ஒரு பெரிய தவறு செய்து விட்டதாக அவளுக்குத் தோன்றிற்று. அவள் அவனைத் தொட்டபொழுதே அவள் அவன் காலைத்தொட்டு வணங்கி யிருக்கவேண்டும். உறுதியாக ஆன்ம உணர்வோடு அவனைப் பார்த்தவாறே, தான் அன்றிலிருந்து அவனுடையவளாகி விட்டதாக அறிவுறுத்தியிருக்க வேண்டும். அவனைத் திருமணம்செய்துகொண்டால், அவன் ஒருவன் தான் தனக்கு ஆதாரமாக இருப்பான். அவனுடைய இன்ப-துன்பத்திலும் பங்காளியாக அவள்தான் இருப்பாள். அவளுடைய இன்ப-துன்பத்தில் அவனும் பங்கு கொள்வான். அவர்கள் இரு வருடைய இன்ப-துன்பங்களும் வேருக இருக்காது. இருவரும் ஒன்று சேர்ந்து குழந்தைகளைப்பற்றிக் கவலைப்படுவார்கள்; இருவரும் ஒன்று சேர்ந்து கிழவர்களாக ஆவார்கள். வாழ்க்கையைப் பற்றி இருவரும் ஒரே கருத்தைக் கொண்டவர்களாக மரணத்தை எதிர் நோக்குவார்கள். அவனை அப்பொழுதே வணங்கி உள்ளத்தில்

அவனையே தன் கணவனாக ஏற்றுக் கொண்டே, தான் அவனருகில் போயிருக்க வேண்டும். அவளோ உணர்ச்சி வயப்பட்டு தன்னை மறந்து அவனுடைய மார்பில் தன் தலையை வைத்துவிட்டாள். அவனுடைய அன்பைப் பெற்றபிறகே அவளுடைய உள்ளம் அமைதியை அடைந்தது. இதுதான் அவள் செய்த தவறு என்று அவள் எண்ணினாள். ஆனால் அவ்வளவு அடக்கத்துடன் இருக்க அவளுக்குப் பொறுமையில்லாமலிருந்தது. அவளோ சோனுப்பரியா வைச் சேர்ந்த ஒரு பெண். அது சோனாவின் சூழ்நிலையில் ஏற்பட்ட ஒரு குற்றமாகவும் இருக்கலாம். நடுப்பகல், ஜன நடமாட்ட மற்ற சூழ்நிலை, செடிகொடிகள் காற்றில் அசைந்தாடிக் கொண் டிருந்தன; வெகு தொலைவுவரை இயற்கைப் பசுமை பரவியிருந்தது; சோனாயின் இடையறாத நீரோட்டத்தில் அலைகள் வீசிக்கொண்டி ருந்தன. அந்த இயற்கைச் சூழ்நிலையில் அவள் மெய்ம்மறந்து போனாள். கவர்ச்சியான இயற்கையழகுக்கு நடுவில் அவளுக்குத் தனஞ்சயனும் இயற்கையின் ஒரு அம்சமாகவே தென்பட்டான். அவள் தயக்கமே யில்லாமல் தன்னுடைய காதலை அவனுக்கு அர்ப்பணித்து விட்டாள்.

வாசந்திக்குத் தன் தாயிடத்தில் அன்பும் பக்தியும் வளர்ந்தது. அவள் இந்த வீட்டை விட்டுப் போக நேரும். பிறந்த வீட்டை விடுவது எவ்வளவு கஷ்டமானது! எவ்வளவு பெரிய பந்தம் இது! கிழத்தாயோ மணமாகாத பெண்ணைச் சிறிது நேரம் தங்கியிருக்கும் தேனீயைப்போலக் கருதுகிறாள். அவளும்தானே தான் பிறந்த வீட்டை விட்டு வந்தாள்!

கண்ணில் விழுந்திருந்த பூவை அகற்றிய பிறகு கிழத்தாயின் நடத்தையில் பெரிய மாறுதல் காணப்பட்டது. இப்பொழுதெல்லாம் அவள் தன் மகளுக்கு அடிக்கடி நல்வார்த்தைகள் சொல்லிவந்தாள். அவளை மிகவும் மதிப்புடன் நடத்திவந்தாள். அடிக்கடி "பார் அம்மா! நான் சாவதற்கு இன்னும் பல நாட்கள் இல்லை. நான் உயிரோடு இருக்கும்பொழுதே உன் திருமணத்தைப் பார்க்க முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! ஒருத்திக்கு வாழ்க்கையை காட்டிவிட்டேன். மகனும் தானே சம்பாதிக்கத் தகுந்தவனாக ஆகிவிட்டான். அதனால் எனக்கு உன்னைப்பற்றியே கவலையாக இருக்கிறது" எனறு கூறிவந்தாள். வாசந்தி மிகவும் கவனத்துடன் அவள் கூறுவதைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் தான் ஒன்றும் சொல்லவில்லை.

இன்று தூங்கும்பொழுது தாய், வாசந்தியிடம் "வாசந்தி! நீ

இப்பொழுதெல்லாம் தனியாகவே தூங்குகிருயே! கிழவியிடம் தூங்குவது பிடிக்கவில்லையா?'' என்று கேட்டாள். "அம்மா, இவ்வாறு ஏன் வருத்தப்படுகிருய்! உனக்கு அசௌகரியமாக இருக்கும் என்று நினைத்துத்தான்......'' என்று வாசந்தி பதிலளித்தாள், "தாயின் மடியில் மகள் தூங்கினுல் எந்தத் தாய்க்குத்தான் பிடிக்காமற் போகும்? அதுவும் இப்பொழுதெல்லாம் என் உள்ளமும் மிகவும் வாட்டமாக இருக்கிறது.''

தான் தாயிடம் தூங்கவில்லையென்ருல் அவளுக்கு வருத்தமாக இருக்கும் என்று வாசந்தி புரிந்து கொண்டாள். அண்ணியும் தாயின் அந்த விருப்பத்தைப் புரிந்துகொண் டிருந்தாள். அதனுல் அண்ணியும் அவளிடம், "வாசந்தி! நீ அம்மாவோடு ஏன் தூங்குவதில்லை? இந்த வீட்டில் இன்னும் எத்தனை நாள் இருக்கப் போகிருயோ? இளம் பெண் மறு வீட்டிற்குப் போகத் தயாராகத்தான் இருக்கவேண்டும்'' என்று கூறினுள். அண்ணியின் வார்த்தையின் பொருளைப் புரிந்து கொண்டு நாணத்துடன் அவள், "போ அண்ணி, என்ன என்னவோ பேசுகிருய் நீ!'' என்று கூறினுள்.

அன்று இரவு தாய் அவளிடம் எத்தனையோ விஷயங்கள் கூறினுள். இத்தனை நாட்கள் அம்மா இப்படியெல்லாம் பேசினதே இல்லையே! எங்கேயாவது திருமணத்தைப் பற்றிப் பேச்சு நடக்கிறதா என்ன? என்ற கேள்வி வாசந்தியின் உள்ளத்தில் தோன்றிற்று.

"வாசந்தி, நீ இவ்வளவு சீக்கிரம் மரம் போல வளர்ந்து விட்டாய். நீ இப்பொழுது முழு வாலிபப் பெண்ணுக ஆகிவிட்டாய். உன் முகத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் தன்னை ஒருவனுக்கு அர்ப்பணிக்கும் வயது உனக்கு வந்துவிட்டது என்று தோன்றுகிறது. நீ இப்பொழுதெல்லாம் முன்னைப்போல் சிரிப்பது கூடக் கிடையாது; ஆனுல் மகளே! பிறப்பு, இறப்பு, திருமணம் இந்த மூன்றும் தெய்வத்திற்குக் கூடத் தெரியாது. ஆகையால் தான் நான் கவலைப்படுகிறேன்.''

வாசந்தி தாயை இறுக அணைத்துக் கொண்டு கண்ணீருடன் கேட்கலானுள், "அம்மா! திடீரென்று இப்படியெல்லாம் சொல்லி என்னை ஏன் வருத்தப்படுத்துகிருய்? நான் என்ன உங்களுக்கெல்லாம் ஆபத்தாக ஆகி விட்டேனு?

தாய் சிறிதும் கலங்காமல் உறுதியான குரலில் கூறினுள், "ஆமாம். ஆனுல் ஆபத்தாக ஆகவில்லை. உண்மையில் ஒரு பெரும் சுமையாக ஆகிவிட்டாய். உனக்குத் திருமணம் ஆகும் வரையில் எனக்கும்

உன் அண்ணனுக்கும் மன அமைதியே இருக்காது. மகளுக்குச் சரியான வயதில் திருமணம் செய்து வைத்தால்தான் எங்களுக்கு நற்கதி கிடைக்கும்.''

''அம்மா! நீ எது சொன்னாலும் நான் கேட்டுக் கொள்வேன். ஆனால் இதையெல்லாம் நீ என்னிடம் சொல்லாதே. இதை என்னி டம் சொல்வதில் என்ன லாபம்?''

''நீ இப்பொழுதெல்லாம் ஆற்றங்கரையில் அதிக நேரம் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய். வீட்டிலும் எதையோ நினைத்துக்கொண்டே இருக்கிறாய். அதனால்தான் இதையெல்லாம் நான் சொல்கிறேன்.''

அப்பொழுது வாசந்தியால் ஒன்றும் பேச முடியவில்லை. தாய் எல்லாம் அறிந்தவள் போல அவளிடம் பேசிக்கொண் டிருந்தாள். இரவில் அவளுக்குத் தூக்கமே வரவில்லை. தாய் கூறிய சொற்கள் அவளுடைய காதுகளில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. தாய் அவளிடம், ''ஒரு பெண் உண்மையிலேயே நல்லவளாக இருந்தால் எந்த ஆடவனுடனும் அவள் சுகமாக வாழ முடியும். ஆனால் ஒரு முறை பெண் தவறிவிட்டால் ஒரு தவறை மறைப்பதற்கு ஆயிரம் தவறுகள் செய்ய நேரிடும். ஆனால் அன்றே அவளுடைய அமைதி அழிந்து போகும்'' என்று கூறியிருந்தாள். ஆனால் ஒரு விஷயம் அவ ளுக்கு இன்னும் புரியாமலே இருந்தது. ''ஆண்டவன் பெண்ணுக்கு ஒரு நல்ல பண்பைக் கொடுத்திருக்கிறான். அது என்னவென்றால் அவள் எந்த நிலையில் இருந்தாலும் தன் வாழ்க்கையை எப்படியா வது நடத்திக் கொள்வாள்'' என்று தாய் கூறியிருந்தாள். ஆனால் இதையெல்லாம் தாய் ஆரம்பத்திலேயே யல்லவா கற்றுக் கொடுத் திருக்கவேண்டும். அன்றிரவு தாய் பேசிக்கொண்டே யிருந்தாள். அவள் கேள்வியே கேட்காமல் ஒரு சிறு பெண்ணைப் போலக் கேட்டுக்கொண்டே யிருந்தாள். கவனமாக யோசித்துப் பார்த்த பிறகு அவளை ஒரு நியாயப் பிரச்சினை கவலையில் ஆழ்த்தியது.

மறுநாள் காலைக் கதிரவனின் ஒளியால் கூட அவளுடைய உள்ளத்து இருளைப் போக்க முடியவில்லை. வேலைகளைச் செய்வதில் மனத்தை மாற்ற முயன்றாள். ஏராளமான அழுக்குத் துணிகளை எடுத்துக் கொண்டு ஆற்றங்கரைக்குச் சென்று வெகுநேரம் அவற் றைத் தோய்த்துக்கொண் டிருந்தாள். வீட்டிலுள்ளவர்கள் எழுந் திருப்பதற்கு முன்பே அவள் மூன்று கூடை நெல்லை இடித்தாள். நடுப்பகலுக்குப் பிறகு அவள் மூன்று வரிசைத் துணியை நெய்தாள். மாலையிலும் அவள் தாயிடமும் அண்ணியிடமும் செல்லாமலேயே இருந்தாள். சாம்பிராணி தூபம் ஏற்றி அறைகளிலெல்லாம் புகை

காட்டினுள். மாட்டுக் கொட்டிலுக்கருகில் குப்பைக்கு நெருப்பிட்டு அதன் புகையைக் (கொசுக்களை விரட்டுவதற்கு) கொட்டிலுக்குள் பரவும்படிச் செய்தாள். மாலையில் சாப்பிட்டபிறகு படுக்கையில் படுத்துக்கொண்டு ஆண்டவனின் பெயரை ஜபித்துக் கொண்டிருந்தாள். மறுநாள் காலையில் கண் விழித்த பிறகு அவள் மிகவும் தெளிவான உணர்வைப் பெற்றுள். இரவில் அவள் நன்ருகத் தூங்கவும் செய்தாள்.

காலையில் எழுந்திருந்து அவள் தினசரி வீட்டைப் பெருக்குவது வழக்கம். அண்ணி காலையில் எழுந்திருந்து தோட்டத்தில் வேலை செய்துகொண் டிருந்தால் அவள் வீட்டிற் கெதிரிலுள்ள தாழ்வாரத்தைச் சுத்தப் படுத்துவது வழக்கம். வீட்டிற்குப் பின்னுல் தென்னைமரத்திலிருந்து ஆற்றங்கரை வரை மரங்களுக்கும் செடிகளுக்கும் நடுவில் தலை வகிட்டைப்போல் இரண்டு கஜ அகலமுள்ள பாதையிலும் அவள் பெருக்குவது வழக்கம். இரண்டு பவழமல்லி மரங்களின் அடிப்பாகத்தையும் அவள் தூய்மைப்படுத்துவது வழக்கமாக இருந்தது. அன்றும் அவள் அந்த இடங்களையெல்லாம் சுத்தப்படுத்தி விட்டாள். எல்லா இடங்களையும் சுத்தப்படுத்தி விட்ட பிறகு வீட்டிற்கெதிரிலுள்ள தாழ்வாரத்தின் இரு பக்கத்திலுள்ள இரண்டு மகிழ மரங்களுக்குக் கீழே கிடந்த பூக்களைப் பொறுக்கி அவள் தன் மடியில் வைத்துக் கொண்டாள். அந்தப் பூக்களை ஒரு மாலையாகத் தொடுத்து தன் தலையில் வைத்துக் கொண்டாள். மற்ருெரு மாலையை எதிரேயுள்ள வீட்டிலுள்ள ராதாகிருஷ்ணன் படத்திற்குப் போடுவதற்குப் போகும்பொழுது வீட்டின் நிலையைப் பார்த்து அவளுக்கு எரிச்சலாக வந்தது. எதிரிலுள்ள அறை எவ்வளவு அசுத்தமாக இருக்கிறது என்பது இதுவரை அவளுக்குத் தெரியாமலேயே இருந்தது. ஒரு இளம் பெண் இருக்கும் வீட்டிலுள்ள முதலறை பார்த்த உடனேயே மனம் மகிழும்படி இருக்கவேண்டும் என்று அவள் இன்றுதான் உணர்ந்தாள்.

அறையில் தெற்குப்புறம் வைக்கப்பட்டிருந்த மூன்று நெல் மூட்டைகளை அவள் எப்படியோ இழுத்து ஒரு மூலைக்குக் கொண்டு போனுள். யாருடைய பார்வையும் அவற்றின்மீது படக்கூடாது என்பதற்காக அவற்றை ஒரு பாயை விரித்து மூடினுள். இரண்டு பெரிய நெற் கூடைகளைக் களஞ்சியத்திற் கெதிரில் ஓரமாக வைத்தாள். அறையின் வடக்குப் பக்கமாக விருந்தாளிகளுக்காகப் போடப்பட் டிருக்கும் விசிப்பலகையின்மீது ஒரு வர்ணப்

போர்வையை விரித்துப்போட்டாள். மரத்தூணில் தொங்கிக் கொண்டிருந்த இரண்டு மான்கொம்புகளையும் சுத்தப்படுத்தினாள். சிறிய மேஜையை இரண்டு நாற்காலிகளுக்கு நடுவில் வைத்தாள். இரண்டு மோடாக்களையும் இரண்டு மணைகளையும் வட்டமாகப் போட்டாள். மேஜையின் மேல் பூவேலை செய்யப்பட்டிருந்த ஒரு துணியை விரித்தாள். ஒரு பாட்டிலில் பூவை வைத்து அதையும் டேபிள் மீது வைத்துவிட்டாள். கூடத்தின் உருவே மாறி விட்டது. தன் உள்ளத்து ஒளி இவ்வாறு வெளியே பரவியதைக் கண்டு அவளே வியந்து போனாள்.

அண்ணியும் சாமர்த்தியத்தில் குறைந்தவளில்லை. வாசந்தி செய்யும் வேலைகளையெல்லாம் கவனித்தபொழுது அவளுக்கு சிறிது ஐயம் ஏற்பட்டது. அவள் சிரித்துக்கொண்டே, "உம். இன்று தான் எனக்கு உன் வேலை பிடித்திருக்கிறது. யாராவது பெண் பார்க்க வந்தால் பெண் பார்ப்பதற்கு முன்பே அறையைப் பார்த்த உடனேயே மகிழ்ந்து விடுவார்கள்" என்று கூறினாள்.

வாசந்தி பெருமிதத்துடன் சிறிது தலைகுனிந்து நின்றாள். "கேள் வசந்தி, இன்னும் அதிக நாளில்லை, அந்த நாளும் வந்துவிடும். உன்னுடைய அண்ணன் ஒரு இடத்தில் பேசியிருக்கிறார்" என்று அண்ணி மறுபடியும் கூறினாள்.

"அண்ணி, இந்த மாதிரி என்னைக் கேலி பண்ணினால் நான் உன்னிடம் பேசவே மாட்டேன்."

"அடேயப்பா! உண்மையைச் சொன்னால்கூட கோபம் வருகிறதா?" அப்பொழுது வாசந்தியின் சந்தேகம் அகன்று விட்டது. அண்ணி இவ்வாறு பேசுவதைக் கேட்டு வாசந்திக்கு வேறு எதுவும் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனாலும் பரவாயில்லை. தனஞ்சயன் இனி வீட்டிற்கு வந்தால் அவள் அவனுக்கெதிரில் போகவும் அவனுடன் பேசவும் முடியுமல்லவா? ஆனால் இந்த விஷயங்களெல்லாம் நான்கு நாட்கள்கூட மறைந்திருக்கவில்லை. சனிக்கிழமையன்று போக்ராம் கதிரவன் மறைந்த பிறகே சந்தையிலிருந்து வீடு திரும்புவது வழக்கம். ஆகையால் அன்று வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் சாப்பாடு சாப்பிட்டு விடுவது வழக்கம். தருலதா மட்டும் கணவனை எதிர்பார்த்து உட்கார்ந் திருப்பாள். அவள் எதிரில் உட்கார்ந்துகொண்டு பொரியைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். அந்த நேரத்தில் அவள் மகள் ஓடிவந்தாள். தருலதா கோபத்துடன் மகளைப் பார்த்து "ஆற்றங்கரைப் பக்கம் தனியாகச் செல்லக்கூடாது என்று சொல்லியிருக்கிறேனில்லையா?

ஏன் சென்ருய் ? சொல், போக்கிரித்தனம் வந்துவிட்டதா ?'' என்று கேட்டாள்.

மகள் மானஸ் ஏழுவயதுச் சிறுமி. அவளுக்குப் பெரிய வார்த்தைகள் புரியக்கூடிய வயதில்லை அது. தாயின் கோபத்தைக் கண்டு அவள் பயந்துகொண்டே '' நான் தனியாகப் போகவில்லை. வாசந்தி அத்தையும் கூட வந்திருந்தாள்'' என்று கூறிஞள். தருலதா தன் பொருளற்ற கோபத்தை விட்டுவிட்டு மகிழ்ச்சி யடைந்தவளாய், ''ஆமாம் யார்கூடவாவதுதான் போகவேண்டும். தெரிந்ததா ? அக்கரையில் ஒரே சரிவாக இருக்கிறது. எங்காவது கால் நழுவி விட்டால் ஆற்றிலே மூழ்கிவிடுவாய். உன் அத்தை வந்தாளா இல்லையா ?'' என்று கேட்டாள்.

'' இன்னும் வரல்லே அம்மா, இன்னிக்கு அப்பா எனக்கு சிவப்பு ஃபிராக் வாங்கி வருவாரா மாட்டாரா ?'' தருலதா மானஸின் வார்த்தைக்கு பதிலளிக்காமல் முன்போலவே கோபத்துடன், ''அத்தை இன்னும் துணி துவைத்துக்கொண் டிருக்கிருளா ?'' என்று கேட்டாள்.

''இன்னும் துவைக்கவே யில்லையே !''

''அப்படியாஞல் அவள் சால மரத்துக் கட்டையை வெட்டிக் கொண்டிருக்கிருளா ?''

''அத்தை ரொம்பவும் சந்தோஷமா இருக்கரு. ரொம்ப சிரித்துக் கொண்டிருந்தாள். அந்த ஆளோடு பேசறபோதுதான் அவள் சிரிக்கிருள். அந்த ஆளும் சிரித்துக் கொண்டே யிருக்கிருன்.''

''ஆளா ? எந்த ஆளோடு பேசிக்கொண்டி ருக்கிருள்? ஏன் சொல்லாமல் நிற்கிருய் ? ஒன்றும் புரியாதவள் போல என்ன பார்த்துக் கொண்டிருக்கிருய் ?''

''அந்த ஆளுதான். பாட்டியை பட்டணத்துக்கு அழைத்துக் கொண்டு போஞரே! அந்த டாக்டர்தான். அத்தைக்குத்தான் என்ன தைரியம். இவ்வளவு பெரிய ஆளை 'நீ' என்று கூப்பிட்டுப் பேசுகிருள்!''

தருலதாவுக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது. பொரிக் கூடையை அழுத்தாமல் பூமியில் வைத்து விட்டு முற்றத்தில் வந்து ஆற்றங்கரைப்பக்கம் பார்க்கத் தொடங்கிஞள். வாசந்தி மெல்ல மெல்ல வருவதை அவள் பார்த்தாள். எதிரில் வந்ததும் வாசந்தியைத் தலை முதல் கால் வரைப் பார்த்துவிட்டு அதட்டும் குரலில், ''உனக்கு ஆற்றங்கரையில் இவ்வளவு நேரம் ஏன் ஆகிறது என்பதை இப்பொழுது புரிந்துகொண்டேன். நம்ம பெண்ணுக்கு ஒரு ஆண்

தெய்வம் கிடைத்து விட்டது.'' என்று கூறினாள்.

வாசந்திக்கு இடிவிழுந்தது போல் இருந்தது. அவள் அப்படியே நின்றுவிட்டாள். ஆனால் ஒன்றும் பேசாமலிருப்பது தவறு என்பதால் தயங்கிக் கொண்டே ''என்ன ஆகிவிட்டது? நான் என்ன செய்து விட்டேன்?'' என்று கேட்டாள்.

''இனியும் அப்பாவிபோல் நடிக்காதே. நீ என்ன செய்தாய் என்பதற்கும் நான்தான் பதிலளிக்கவேண்டுமா? ஒன்று மட்டும் கேட்கிறேன். உன்னிடம் உண்மையைப் பேச எனக்கு உரிமை கிடையாதா?''

''அண்ணி!''

வாசந்தியின் குரலில் ஒரு கெஞ்சல் தோன்றிற்று. அண்ணி அன்புக் குரலில் கேட்டாள். ''என்ன?'' வாசந்தி உள்ளத்து முழு வேகத்துடன் ''அண்ணி! நான் உனக்கு என் உள்ளத்தைத் திறந்து காட்ட முடியுமானால்—!''

அண்ணி தலை குனிந்தவளாய் மௌனமாக இருந்தாள்.

## ஐந்து

வாசந்தியின் உள்ளம் தடுமாறிவிட்டது என்று தெரிந்தும் தருலதா அவளைக் கண்டிக்கவில்லை. வாசந்தி எப்பொழுது டனுவா நீர்த் துறைக்குப் போகிறாள்; அங்கே அவள் எவ்வளவு நேரம் இருக்கிறாள் என்பதை மட்டும் கண்காணிக்க ஆரம்பித்தாள். தருலதா தன்னைப் பின் தொடருகிறாள், உளவாளியைப் போல் கவனிக்கிறாள் என்பதைப் புரிந்துகொள்ள வாசந்திக்கு நேரமாகவில்லை. அவள் முன்னைப் போல நீர்த்துறைக்குப் போய் வந்துகொண்டிருந்தாள். முன்னைப்போலவே அவள் எல்லோருடைய வீட்டிற்கும் போய் வந்து கொண்டிருந்தாள். நாடகம் பார்க்கவும் கதை கேட்கவும் அவள் போய்க்கொண்டுதானிருந்தாள். ஆனாலும் அவள் முன்னைவிட அதிகம் அடிமையாகிவிட்டாள். முன்பிருந்த அவளுடைய சுதந்திர உள்ளத்தையும் கவலையேயில்லாத இயற்கையான சுபாவத்தையும் காதலுணர்வு போக்கிவிட்டது. அது அவளைக் கசக்கப்பட்ட புல்லைப் போலக் கசக்கிவிட்டது. எப்பொழுதும் வீட்டிலேயே இருக்கக் கூடியவளும் சுபாவத்தில் சிறிதும் பகட்டுக் காட்டாதவளுமான அவள், முன் போல் வாழ்க்கை நடத்தினாலும்

முதன் முறையாகத் தான் ஒரு கூட்டி லடைக்கப்பட்ட பறவை என்று உணரலானாள்.

மிக அன்புடன் அவளை வளர்த்த அண்ணியும் கூட்டுப் பறவை என்றாவது பறந்துபோய் விடக் கூடாதே என்று எண்ணலானாள். மூன்று குழந்தைகளுக்குத் தாயான தருலதா குடும்பக் கஷ்டத்தில் குழந்தைகளை வளர்ப்பதிலும் இல்வாழ்க்கையின் வேதனை மிக்க மூடப் பழக்க வழக்கங்களில் சிக்குண்டும், தானும் ஒரு நாள் இளம் பெண்ணாக இருந்ததையும், வாசந்தியைப்போல் அவளுடைய உள்ளமும் கலங்கியிருந்தது என்பதையும் மறந்து விட்டாள். வாசந்தி தன் உள்ளத்தை ஒருவனுக்குக் கொடுத்து அவனுடைய உள்ளத்தைப் பெற்றதைப் பற்றி மானஸ்ஸின் வார்த்தைகளிலிருந்து உறுதியாகத் தெரிந்து கொண்ட பிறகு தருலதாவால் அதை முன்னைப்போல் நல்ல முறையில் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவள் வாசந்தியை இந்த அழிவுப் பாதையிலிருந்து காப்பாற்றுவது தன் கடமையென்றும், அப்பொழுதுதான் வாசந்திக்கு நன்மை கிட்டுமென்றும், எண்ணத் தொடங்கினாள்.

அப்பொழுதும் வாசந்திக்கு தருலதாவின்பால் நன்றி உணர்ச்சி தோன்றிற்று. அவள் பயந்துகொண்டே வாழத் தொடங்கினாள். அன்று இரண்டு நாள் ஆகியிருந்தும் தருலதா அந்த விஷயத்தைத் தன் கணவன் போக்ராமிடம் கூறவில்லை என்பது அவளுடைய நன்றி உணர்ச்சிக்கு முதலாவது காரணமாகும். அவளுடைய நடத்தையிலிருந்தே வாசந்தி அதைப் புரிந்துகொண்டாள். அவள் தாயிடமும் பெரும்பாலும் கூறியிருக்க மாட்டாள். ஏனென்றால் தாய் முன்னைப் போலவேயே அவளிடம் பேசிக் கொண்டிருந்தாள். ஆனால் அவளால் எத்தனை நாட்கள்தான் இவ்வாறு இருக்கமுடியும்? உள்ளத்தின் அன்பு தோன்றி அவளுடைய உடலையும் உள்ளத்தையும் பிணைத்து விட்டபிறகு அவளால் என்ன செய்ய முடியும்? கொடுமையான கட்டுப்பாடுகளில் பிணைந்திருந்த குடும்பத்தின் பழைய தடைகளையெல்லாம் உடைத்தெறிய வேண்டுமென்று அவளுடைய மனத்தில் அடக்க முடியாத விருப்பம் தோன்றிற்று. திறந்த வெளியில் தான் சுதந்திரமாக இளமையின் குழலினிமையைக் கேட்பது போலவும் கட்டுப்பாடுகளின் சுவரை உடைத்தெறிந்து வெளியே கிளம்பிவிடத் துடிப்பது போலவும் அவளுக்குத் தோன்றிற்று.

ஒரு கிராமப் பெண் எத்தகைய உணர்ச்சி வேகத்துடனும் உள்ள உருக்கத்துடனும், நெஞ்சு கனியும்படியும் வேதனையைத் தோற்றுவிக்கக் கூடியதாயும் ஆக்க முடியுமோ அத்தனை உணர்ச்சி

வேகத்துடனும் அவள் அண்ணிக்கு தன் கதை முழுவதையும் கூறி விட்டாள். அவளுடையச் சொற்களைக் கேட்டு தருலதாவின் உள்ளத்தில் உண்மையிலேயே கருணை ஏற்பட்டது. எந்த விதமான கருத்தையும் தெரிவிக்காமல் அவள் கூறினாள், "வாசந்தி, என்னால் உன் மனத்தை நன்றாகப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் அடிக்கடி எனக்கு ஒன்று மட்டும் தோன்றுகிறது. தன்னுடைய கற்பனை உணர்வைக் கொண்டு யார்தான் இங்கே இன்பத்தைக் கண்டிருக் கிறார்கள்! மகளே! நீ உன் உடலைக் காப்பாற்றி வைத்துக்கொள். மயக்கம் அதிகமாக ஆகத் தன்னுடையதென்று ஒன்றுமில்லாமல் போய்விடும். அந்த அளவிற்கு உனக்கு துன்பமும் ஏற்படும். இதை நினைவில் வைத்துக்கொள்.

வாசந்தி பெருமூச்செறிந்தாள். இவ்வளவு அனுதாபம் காட்டிய பிறகும் தருலதா அடுத்த நாள் தனஞ்சயன் வீட்டிற்கு வந்தபொழுது தேநீரோ, வெற்றிலையோ கொடுப்பதற்குக்கூட வாசந்தியை அவனுக்குக் கெதிரில் போக விடவில்லை. அண்ணிமீது அவளுக்கு உள்ளத்திலேயே மிகவும் கோபம் ஏற்பட்டது. அவள் சமையலறை யில் பாத்திரங்களின்மீது தன் கோபத்தைக் காட்டிக்கொண் டிருந் தாள். அண்ணியின் கடுமையான பார்வைக்கு பயந்து அவள் கதவின் இடுக்கின் வழியாகக்கூட அவனைப் பார்க்கும் வாய்ப்பைப் பெற முடியவில்லை.

தருலதா வாசந்தியைப்பற்றிப் பெரிதும் கவலைப்படத் தொடங்கி னாள். வாசந்தி எப்பொழுதும் மௌனமாகவே இருக்கலானாள். முன் போல் அவள் முறைப்படி தலைமுடியை வாருவதைக்கூட விட்டு விட் டாள். தனக்குத்தானே திருமணப்பாடலை முணு முணுப்பதைக்கூட அவள் விட்டுவிட்டாள். அனுராக ராகத்தின் இனிமை எதிர்பாராமல் வேதனைக்குரலில் மாறிவிட்டதுபோல் தோன்றிற்று. தருலதா தனிமையில் தன் மாமியாரிடம் எல்லா விஷயங்களையும் சொன்னாள். சுஜலா அவளைப்போல் அதில் எந்த விதமான ஆர்வமும் காட்ட வில்லை. "அப்படியானால் விரைவில் இதற்கு ஏற்பாடு செய்தாக வேண்டும். இந்தக் கஷ்டத்தை யெல்லாம் சீக்கிரம் போக்கடித்துவிட வேண்டும். இல்லையென்றால் ஆபத்துதான். யார் மனம் எந்தத் திசையில் போகும் என்று யாருக்குத் தெரியும்? ஆண்பிள்ளையின் மனம் பங்குனி மாதத்துப் பருவநிலையைப் போன்றதாகும். பல நாள் வரை ஒட்டியிருந்தால் பெண்பிள்ளைதான் வருந்த வேண்டி வரும் என்று மட்டும் அவள் கூறினாள்.

"அம்மா, அந்தப் பையனைப் பற்றி உன் கருத்து என்ன?"

"ஒன்றும் நிச்சயிக்க முடியவில்லை. பார்த்தாலும், பேசுவதைக் கேட்டாலும் நல்லவனாகத்தான் படுகிறான். அதிகமாக கவனித்துப் பார்க்கவில்லை. அவன் பேசுவதைக் கேட்கும்பொழுது அவன் சாமர்த்தியக்காரன் போலத் தெரியவில்லை."

மாலையில் வாசந்தி தாயிடமே இருந்தாள். கண் வியாதி வந்ததிலிருந்து தாயால் இப்பொழுதெல்லாம் முன்போல் புத்தகம் முதலியன படிக்க முடிவதில்லை. வாசந்தி தாய்க்குப் புத்தகம் படித்துச் சொல்லிக்கொண்டிருந்தாள். கீர்த்தனங்களை இனிமையான குரலில் படித்துக்கொண்டிருந்தாள். எந்த இடத்திலும் தடை ஏற்படவில்லை. எதிர்பாராமல் அவளது கவனம் எங்கோ சென்று விட்டது. வீட்டிற்கு எதிரில் சைக்கிளின் மணிச் சத்தம் கேட்டது. 'கிரிங், கிரிங்' என்று இரண்டுமுறை மணி அடித்த பிறகு மறுபடியும் இரண்டு முறை மணி அடிக்கும் சத்தம் கேட்டது. அந்த மணியின் ஒலி அவளுடைய காதுகளுக்குப் பழக்கப்பட்டிருந்தது. அவள் புத்தகம் படிப்பதை நிறுத்தி விட்டாள். அத்தியாயத்தை முடிக்காமலேயே ஏன் நிறுத்திவிட்டாய் என்று தாய் கேட்டது அவளுடைய காதில் விழவில்லை. அவளுடைய கூர்மையான செவிகளுக்கு அவன் சைக்கிளை அண்டக் கொடுத்து நிறுத்தி விட்டான் என்று தோன்றிற்று. சிறிது நேரத்திற்குப் பிறகு, முன் அறையிலிருந்து அவன் கூப்பிட்டது காதில் விழுந்தது. அவள் அவனுக்குப் பதிலளிப்பதற்காக வெளியே போக விரும்பினாள். ஆனால் தாய்க்கு அவளுடைய உள்ளத்தின் நிலை புரிந்துவிட்டது. அவள் கோபத்துடன் அவளை அந்த இடத்திலேயே உட்காரச் சொல்லிவிட்டு மெதுவாக முன்னறைப் பக்கம் சென்றாள். தனஞ்சயனுடன் சிறிது நேரம் பேசி அவனை அனுப்பிவிட்டு உள்ளே வந்து தாய் வாசந்தியிடம், "மகளே என்ன காரியம் செய்துவிட்டாய் நீ! நான் அவனுடைய கண்களில் உன்னுடைய அழிவைத்தான் கண்டேன்" என்று வருத்தத்துடன் கூறினாள்.

வாசந்தி தேம்பித் தேம்பி அழலானாள். தாயே மறுபடியும் கூறலானாள், "நான் மூன்று பருவங்களைக் கழித்து விட்டேன். மக்களைப் புரிந்து கொள்வது எனக்குச் சிரமமாக இல்லை. தனஞ்சயனைப் பார்த்ததும் அவன் தகுந்தவனில்லை என்று எனக்குத் தோன்றிற்று. சிலர் எல்லா விதத்திலும் நல்லவர்களாக இருக்கிறார்கள். தனஞ்சயன் அந்த வரிசையைச் சேர்ந்தவன். ஆனாலும் அவனைப் பார்த்தால் அவன் குடும்பம் வைத்துக்கொண்டு வாழக் கூடியவனாகத் தோன்றவில்லை. இன்னும் சிலர் எதையும் செய்யக் கூடியவர்

களாகவும், அன்பைக் கொடுத்து அன்பைப் பெறுபவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஒரு இடத்தில் நிலைத்திருக்க மாட்டார்கள். அவர்கள் பறவையைப் போல் வானத்திலேயே திரிந்து கொண்டிருப்பதை விரும்புவார்கள். தனஞ்சயனும் அவர்கள் வரிசையைச் சேர்ந்தவன் தான்."

வாசந்தியின் தேம்பல் இரட்டித்து விட்டது. மறுநாள் காலையில் தண்ணீர் எடுத்துவர ஆற்றங்கரைக்குச் சென்றபொழுது அங்கே ஆற்றின் அக்கரையில் தனஞ்சயன் தனிமையில் உட்கார்ந்திருப்பதை அவள் பார்த்தாள். அவள் காட்டு மானைப் போல் அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். தருலதா எப்பொழுது தன்னருகில் வந்து நின்றாள் என்பது வாசந்திக்குத் தெரியாமலிருந்தது. தருலதாவைப் பார்த்ததும் தனஞ்சயன் ஒரு மரத்திற்குப் பின்னால் மறைந்து கொண்டான்.

நிலைமை முற்றிப் போவதைப் பார்த்து தாயும் தருலதாவும் தனிமையில் வெகு நேரம் வரை ஆலோசனை செய்தார்கள். பெண் மனத்தால் ஒருவனை ஏற்றுக்கொண்டுவிட்ட பிறகு அவனிடம் அவளை ஒப்படைத்து விடுவதே நல்லது என்று அவர்கள் முடிவு செய்தார்கள். போக்ராமிடமும் இதையெல்லாம் சொல்லிவிட முடிவு கட்டினார்கள். அவன் கேட்டால் கோபப்படத்தான் செய்வான். ஆனால் மணம் செய்து கொடுத்துவிடுவான். அதற்குப்பிறகு இந்தக் கவலை தீர்ந்துவிடுமல்லவா! வாசந்தியைச் சில நாட்கள் அவளுடைய மாமன் வீட்டுக்கு அனுப்பிவைப்பது நல்லது என்றும் அவர்கள் எண்ணினார்கள். "அவளுடைய தலையிலே சனி ஏறி உட்கார்ந்திருக்கிறான். இதெல்லாம் அவளைப்பிடித்த கிரகக் கோளாறுதான். கொஞ்சம் வெளியிலே சுற்றிவிட்டு வந்தால் அவள் மனசு சரியாகப் போய்விடும். அங்கே சில நாட்கள் இருந்தால் அவளுடைய கவலையும் தீர்ந்துவிடலாம்" என்று தாய் கூறினாள்.

ஆனால் போக்ராமிடம் அவர்கள் இதைக் கூறமுடியாமலிருந்தார்கள். இந்த மாதம் வியாபாரத்தில் அவனுக்கு நஷ்டம் ஏற்பட்டு விட்டது. ஆதலால் வீட்டிலிருக்கும் சிறிது நேரத்தில்கூட அவன் கோபத்துடன் கூச்சலிட்டுக்கொண்டிருந்தான். சின்னச் சின்ன விஷயத்திற்குக் கூட அவனுக்கு கோபம் வந்தது. சாப்பாட்டு ருசி கொஞ்சம் மாறிவிட்டால் கூட அவன் தட்டைத் தூக்கி எறிந்து விடுவது வழக்கமாக இருந்தது. குழந்தைகள் சிறிது சத்தம் போட்டால் கூட அவன் எல்லை மீறிக் கோபப்பட்டுக் கொண்டிருந்தான்.

தாயும் தருலதாவும் வாசந்தியை அவளுடைய மாமாவின் வீட்டிற்கு அனுப்பவேண்டும் என்ற பிடிவாதத்துடன் இருப்பதைப் பார்த்து, வாசந்திக்கு அவர்கள்மீது கோபம் வந்தது. அதனுல் அவள் தான் அங்கே போகமாட்டேன் என்று அவர்களிடம் தெளிவாகக் கூறிவிட்டாள். தாய் சுஜலாவுக்கு இப்பொழுதுதான் தன் பெண்ணின் மீது உண்மையிலேயே கோபம் ஏற்பட்டது. தன் வயிற்றில் பிறந்த மகளாக இருந்தும் அவள் என்ன என்ன வார்த்தைகள் பேசுகிருள்? ஒரு சாதாரண அயலானுக்காக அவள் தாயைக்கூட அவமதிக்கும் அளவிற்குத் துணிந்து விட்டாளே! எனத் தாய் எண்ணினுள்.

"வாசந்தி! நீ போகப் போகிருயா இல்லையா? ஒழுங்காகச் சொல்லிவிடு!"

"எதுக்காக நான் போக வேண்டும் என்பதை ஏன் சொல்ல மாட்டேன் என்கிருய்! நான் என்ன உங்களுக்கு இலவசமாகக் கிடைத்த அடிமையா; நீங்கள் சொல்லுகிற இடத்திற்கு உடனே ஓடிப்போய் விடுவதற்கு?"

"உன் மாமி பல நாட்களாக உன்னைக் கூப்பிட்டுக்கொண்டே இருக்கிருள். அதுக்காகத்தான்!"

"நீ மெதுவாக என்னை அனுதையாக ஆக்க விரும்புகிருய் என்பது எனக்கும் தெரியும்."

"வாயை அடக்கிப் பேசு. மணமாகாத பெண்ணுக இருந்தும் இவ்வாறு பேச உனக்கு வெட்கமாக இல்லை!"

"நான் போக மாட்டேன்! போகமாட்டேன் என்று சொல்லியாகி விட்டது. அதுதான் என்னுடைய முடிவு. உங்களுக்கு நான் இங்கே இருப்பது கஷ்டமாக இருந்தால் கழுத்தில் குடத்தைக் கட்டிக் கொண்டு சோனுய் ஆற்றில் விழுந்து சாகும்படி ஏன் சொல்ல மாட்டேனென்கிறீர்கள்?"

"நீ தான் தவருனதை யெல்லாம் பற்றிப் பேசுகிருய் வாசந்தி!"

இரண்டு நாட்கள்வரை தாயும் தருலதாவும் வாசந்தியுடன் பேசவேயில்லை. மூன்ருவது நாள் தாய் சுஜலாவின் உள்ளத்தில் மகள்மீது பாசம் பிறந்தது. அவள் தூங்கும்பொழுது மகளின் தலையைப் பாசத்துடன் தடவிக் கொடுத்தாள். வாசந்தியும் தாயின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழத் தொடங்கினுள். "வாசந்தி! உண்மையைக் கூறினுல் நீ என்னை உன் விரோதி யென்று ஏன் எண்ணுகிருய்? உன்னிடத்தில் உள்ள என் அன்பு குறைந்து விட்டதா?" என்று தாய் கேட்டாள்.

அவள் அமைதியான சிறு குழந்தையைப் போல் தாய் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக்கொண் டிருந்தாள். தாய் சோணுய் பரியாவின் வாழ்க்கையைப் பற்றியும், அந்த வாழ்க்கையின் தத்துவத்தைப் பற்றியும் அவளுக்குச் சொல்லிக்கொண் டிருந்தாள்.

சோணுய் பரியா கிராமத்து வாழ்க்கை ஆபத்துக்கள் சூழ்ந்த வாழ்க்கையாக இருந்தது. சோணுய் நதியை நம்பித்தான் அந்தக் கிராமத்து வாழ்க்கை நடந்துகொண் டிருந்தது. ஒவ்வொரு ஆண்டும் சோணுய் உரம் சேர்த்துக் கரை மண்ணைச் செழிப்பாக ஆக்கி வந்தது. பல ஆண்டுகள் சோணுய் நதி கோபித்துக்கொண்டும் இருந்திருக்கிறது. ஆற்று வெள்ளம் நெற் களஞ்சியத்து உச்சி வரையில் கூட ஏறியிருக்கிறது! அப்பொழுதெல்லாம் நெல்லும் சணலும் தண்ணீரிலே மூழ்கிவிடும். சோணுய் பரியா மக்கள் பெரும் கஷ்டங்களுக்கிடையில் தங்கள் வாழ்க்கையைக் கழித்துக்கொண் டிருந்தனர். அங்கே நோய் பரவியிருந்தது. பஞ்சம் தலைவிரித்தாடிற்று. ஆற்றின் பெருக்குதான் அந்த கிராமத்து வாழ்க்கை ஓடிக்கொண் டிருப்பதற்கு ஒரு சாட்சியமாக இருந்தது. இயற்கை சினந்தாலும் அந்த ஆற்றின் மீது படகைக் கொண்டு போக்குவரத்துச் செய்யாமல் இருக்க முடியவில்லை. அதன் பிறகு மழையில் ஐந்து ஆறு அடி ஆழமான தண்ணீரில் விவசாயம் செய்வதும் எளிமையான காரியமாக இல்லை. தலைவிதி சரியாக இல்லையென்ருல் எந்த இடத்திலும் விஷப் பாம்பு போன்ற ஆபத்து தோன்றிவிடும். தண்ணீரில் மூழ்கிச் சணல் அறுக்கும் பொழுது கரு மீன் இடறினுல் உள்ளம் நடுங்கிவிடும். வைகாசி மாதப் புயலும் சூருவளிக் காற்றும் வேறு எப்பொழுதும் அங்கே தோன்றி வந்தன. புயல் வீசி வீடுகளைத் தரைமட்டமாக ஆக்கி விடுவதும், சூருவளிக் காற்றில் வீடுகள் விழுவதும் மக்கள் அல்லல் படுவதும், மூச்சு முட்டி மக்கள் இறந்து போவதும் சோணுய் பரியா மக்களுக்குப் பழக்கப்பட்ட செய்திகளாகவும், ஆண்டாண்டு தோறும் பலி கொடுக்கும் பரம்பரை நிகழ்ச்சிகளாகவும் தோன்றின. யார் தலையில் என்ன எழுதியிருக்கிறது என்பதை யாருமே அறிய முடியாது. பழக்கமே யில்லாதவர்களிடம் நம்பிக்கைகொண்டு சோணுய் பரியா-மக்கள் பயமற்ற வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். கிராமிய நம்பிக்கையையும், சமுதாயக் கட்டுப்பாடுகளையும் தீய பழக்கங்களையும் கொண்டே அவர்கள் வாழ்க்கையை கடத்திக் கொண்டிருந்தார்கள். இயற்கையை மகிழ்விப்பதற்காக "லாலுங்க்" என்ற அசாமைச் சேர்ந்த ஆதிவாசி மக்கள் நாக வழிபாடு செய்வது மரபு. அவர்கள் மரங்களின் அடிப்பாகத்தில் குங்குமம் இட்டு வழிபடுவது

வழக்கம். கிராமிய தேவிக்கு ஆடு, அன்னப் பறவை, புரு முதலிய வற்றைப் பலியிடுவதும் வழக்கமாக இருந்தது. மோராபூர், போர்போரீ, தர்கியால், மாஜ்காவ் என்ற இடங்களிலெல்லாம் பஜனைகள் நடப்பது வழக்கம். நல்ல நாட்களிலும் விழாக்களிலும் ஒவ்வொரு இடத்திலும் சங்கரா, மாதவா என்ற ஒலிகள் எதிரொலித்திடும். அந்தப்பகுதி மக்கள் நோய், பஞ்சம், வரட்சி, வெள்ளம் என்று எதிர்பாராமல் உண்டாகும் ஆபத்துக்களை யெல்லாம் தாங்கிக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் ஒருபொழுதும் தோல்வி மனப்பான்மையை வளர விடுவதில்லை, சோனுய் நதியை விட்டுச்செல்லவும் அவர்களால் முடியாது. ஆபத்தை எதிர்பார்த்துக் கொண்டு வாழ்வதிலேயே அவர்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. தைரியத்துடன் ஆபத்துக்களைப் பொருட்படுத்தாமல் இருப்பதே சோனுய் பரியாவைச் சேர்ந்த மக்களின் சுபாவமாக இருந்தது.

ஆனால் சோனுயைச் சேர்ந்த ஆடவர்கள் தான் வரும் ஆபத்துக்களையெல்லாம் எதிர்த்து நிற்க வேண்டியிருந்தது. பெண்கள் நாற்று நடுவது, நெல் அறுவடை செய்வது, வீட்டு வேலைகளைச் செய்வது முதலியவற்றிலேயே ஈடுபட் டிருந்தார்கள். ஆடவர்கள் தங்களது தினசரி வாழ்க்கையில் வரும் ஆபத்துக்களைக் கடந்து அமைதியாக வாழ வேண்டுமானால் அது அவர்களுடைய வீட்டுப் பெண்களையே சேரும். வீட்டுப் பெண்கள் உண்மையான உள்ளத்துடன் தங்கள் வாழ்க்கையை நடத்தவேண்டும்; காதலென்ற பாதையில் போய் விடக்கூடாது; தகாத தொடர்பைக்கொண்டு மனம் மயங்காமல் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அந்தப் பெண்ணுடைய கற்பின் மகிமையால் அடிக்கடி ஆபத்துக்களில் சிக்கினாலும் ஆடவன் தன் குடும்பத்தைக் காக்க முடியும். இதுவே சோனுய் பரியாவைச் சேர்ந்த ஆடவர்களின் கொள்கையாகும்.

ஆனால் இயற்கையான வாழ்க்கைச் சட்ட திட்டங்களை மதிப்பதில்லை; கொள்கைகளை மதிப்பதில்லை. அது நல்லது, கெட்டது என்று கவனிப்பதில்லை. இடையிடையில் சோனுய் கரையில் காதல் வளரவே செய்கிறது. காமதேவதையின் அம்புகள் சட்ட திட்டங்களை ஏற்று இளைஞர்களின் உள்ளத்தில் தைப்பதில்லை. "பிகூ" (வசந்த விழா) விழாவில் இனிமையான கிராமியப் பாடல் "பேபா" வின் (நாதஸ்வரம் போன்ற மூங்கிலாலான வாத்தியம்) இனிய நாதத்துடனும் 'டோல்' (மிருதங்கம் போன்ற வாத்தியம்) வாத்தியத்தின் தாளதுடனும் கலந்து காடுகளைக் கடந்து காற்றில் மிதந்து வரும் பொழுது சமுதாயக் கட்டுப் பாடுகள் தகர்ந்து விடுகின்றன. சுஜலா

வைப் போன்ற கருத்துடைய பல பெண்கள் ஆடவனின் கஷ்டத்திற்குப் பெண்ணின் பாவச்செயலே காரணம் என்று கருதுகிறார்கள். தூங்கும்பொழுது தாய் அன்புடன் மகளிடம் கூறலானாள்: "காந்தலாயீ சணலை அறுக்கப் போய் சோனையில் மூழ்கி இறந்து போனான்! அது ஏன் தெரியுமா? அவனுடைய மனைவி பாவச் செயல் செய்து வந்தாள் என்பதால்தான். அன்று சோனைய் நதியில் புயலொன்றும் வரவில்லை. படகும் கெட்டியாகத்தான் இருந்தது." வாசந்திக்கு காந்தலாயியின் மனைவி சித்ராவைப பற்றிய கதையெல்லாம் தெரியும். கணவன் இல்லாத நேரத்தில் அவள் கடை முதலாளி ஸ்வரூப் என்பவனிடம் செல்வது வழக்கம். ஸ்வரூப் அவளுக்குச் சரிகை வேலைப்பாடு அமைந்த "மேகலா" (அசாமியப் பெண்களின் ஆடை) கொடுத்திருந்தான். அவள் தலையில் தடவும் வாசனைத் தைலம் கூட ஸ்வரூப் கொடுத்ததுதான்.

தாயின் வார்த்தையில் வாசந்திக்கு நம்பிக்கை தோன்ற ஆரம்பித்தது. அவளுடைய உள்ளம் நடுங்கிவிட்டது. தாய் மறுபடியும் சொல்லத் தொடங்கினாள், "ஜானகியின் அண்ணன் காட்டில் மூங்கில் வெட்டும்பொழுது நடுப்பகலில் ஒரு நாகப் பாம்பு கடித்துவிட்டது. வினாடி நேரத்தில் அவன் உயிரிழந்தான். அவன் வீட்டுக்காரி மிகவும் நல்லவள்தான். ஆனால் கஷ்டங்களுக்கெல்லாம் மூலகாரணமாக இருந்தவள் அவனுடைய தங்கை ஜானகி. அவள்தான் அந்த வீட்டிற்கே அபசகுனமாக இருந்தாள். அவளால் அந்த வீடே அழிந்து போயிற்று. சம்பாதிக்கக்கூடிய அண்ணனும் இறந்து விட்டான். ஒரு முறை அவளுடைய கர்ப்பம் சிதைக்கப்பட்டது யாருக்குத்தான் தெரியாது?"

தாயின் சொற்களைக் கேட்ட வாசந்தி கத்தி விட்டாள். அவள் காரணமாக போக்ராமுக்கு ஏதேனும் தீங்கு விளைந்து விட்டால் வீடே அழிந்து விடும். தந்தை இறந்த பிறகு பத்து ஆண்டுகளாக அவன்தான் குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறான். அவர்களுக்கெல்லாம் இரண்டு வேளை சாப்பாடு போடுவதற்காக அவன் பகலிலும் இரவிலும் சந்திரனையும் சூரியனையும் போல அலைந்து கொண்டே இருந்தான். வாசந்தியின் நடுக்கக் குரலைக் கேட்ட தாய் அவளுக்கு ஆறுதலளிப்பதற்காக மறுபடியும் சொல்லத் தொடங்கினாள், "ஒரு பெண் குடும்பத்தின் திருமகள் ஆவாள். பெண்ணின் நல்ல குணத்தால் ஒரு குடும்பத்தின் மூன்று தலை முறைகள் காக்கப்படும். வாசந்தி! நேரம் கடந்து விடவில்லை. உனக்கும்தான் என்ன வயதாகிவிட்டது? மன உறுதியுடன் இருக்கவேண்டும். தவறான

எண்ணங்களை யெல்லாம் மனத்திலிருந்து அகற்றி விடு, வாசந்தி! உன் நல்ல குணத்தால் எங்களுக்கும் நல்லது ஏற்படும். நீ புகும் வீட்டிலுள்ளவர்களுக்கும் முன்னேற்றம் உண்டாகும். இந்தக் குடும்பம் அழியாமலிருக்கும். அந்தக் குடும்பமும் வளர்ச்சியை அடையும். நீ என் கடைசிப் பெண் இல்லையா? இந்தக்கிழ வயதில் தாயின் இந்த வார்த்தைகளுக்கு மதிப்பு கொடுக்கமாட்டாயா வாசந்தி?''

இவ்வாறு சொல்லும்பொழுது சுஜலாவின் குரலில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. அவள் வாசந்தியின் ஒரு கையைப் பிடித்துக் கொண்டு ஏதோ கெஞ்சிக் கேட்பதுபோல் தோன்றினுள். அவளுடைய உள்ளடங்கிய கண்களில் விளக்கு வெளிச்சத்தில் கண்ணீர் பளிச் சிட்டது. வாசந்தி தாயின் மடியில் அழுதுகொண் டிருந்தாள். அவள் வேண்டா வெறுப்பாகச் சிறிது நேரம் முதல் ஆடவனின் காதலையும், கவர்ச்சியையும் விடுத்து மனதிற்குள்ளேயே பல முறை, '' இனி தனஞ்சயனின் நிழலுக்கும் அப்பால் இருக்கப்போவதாகவும், மாலையில் திரும்பி வந்து அவன் சைக்கிள் மணி அடித்துக் கூப்பிட் டால் காதைப் பொத்திக்கொண்டு விடுவதாகவும், அவன் வீட்டிற்கு வரும்பொழுது தான் ஆற்றங்கரைக்குப் போய் விடுவதாகவும்; ஆற்றிற்கு அக்கரையில் அவன் தென்பட்டால் தான் ஓடி வீட்டிற்கு வந்து விடுவதாகவும் அவள் உறுதி செய்து கொண்டாள். அவ்வாறு செய்வதால் தன்மீது அவனுக்கு உள்ள நம்பிக்கை அகன்று விடும். தனக்கு விடுதலை கிடைக்கும். தான் தூய்மையுடன் வாழ முடியும். தலை விதிப்படி அவனைத் திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்த பிறகுதான் அவள் அவனைத் தன்னுடையவனுகக் கருதுவாள் என்றும் வாசந்தி முடிவு செய்தாள்.

அடுத்த நாள் காலையில் அவள் தான் கஹிங்குரியிலுள்ள மாமன் வீட்டிற்குப் போவதாகத் தாயிடம் கூறினுள். அதைக் கேட்டதும் தாய், தருலதா இருவருடைய பெரிய கவலையும் தீர்ந்தது போலிருந்தது. இரண்டு நாட்களுக்குப் பிறகு வாசந்தி தாயுடன் கஹிங்குரி போய்விட்டாள். அவள் போகும்பொழுது தருலதா '' நான் உன் அண்ணனிடம் பேசுகிறேன். உனக்கு தனஞ்சயன் பொருத்தமானவனு? என்று மட்டும் அவரிடம் கேட்கிறேன் '' என்று அவள் காதில் மெதுவாகக் கூறினுள்.

அண்ணியிடம் ஏற்பட்ட நன்றி உணர்ச்சியால் வாசந்தியின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. தாய்க்குத் தெரிந்து விடக் கூடாது

என்பதற்காக புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டு அவள் சரியாக உட்கார்ந்து கொண்டாள்.

## ஆறு

சுஜலாவின் எண்ணம் வேறுபட்டிருந்தாலும், பரம்பரையில் ஈடுபாடு கொண்ட பழங்காலத்துப் பெண்ணாக இருந்ததாலும் அவளுடைய எண்ணமோ விருப்பு—வெறுப்போ எந்தப் பயனையும் அளித்துவிடுமென்று தெரியவில்லை. வாசந்திக்குத் தன் தாயிடம் சிறப்பான நம்பிக்கை ஏதும் கிடையாது. அவள் தருலதாவின் மீதுதான் முழு நம்பிக்கையும் வைத்திருந்தாள். அவளிடத்தில் தருலதா ஒருத்திக்குத்தான் அனுதாபம் தோன்றிற்று. ஆதலால் வாசந்தி அவள் மீதுதான் நம்பிக்கை வைத்திருந்தாள். பெண்ணின் மனம் சஞ்சலப்பட்டு விட்டால் குடும்பத்திற்கும் ஆண்பிள்ளைக்கும்தான் பெருத்த துன்பம் விளையும் என்ற சோணாய் பரியா மக்களின் நம்பிக்கையைப் பற்றி தெரிந்ததிலிருந்து அவளுக்கு ஒரே கலக்கமாக இருந்தது. ஆயினும் அவள் நம்பிக்கையுடன் இருந்தாள். அண்ணி போக்ராமிடம் சொல்லுவாள்; அண்ணனுக்கும் தனஞ்சயனைப் பிடித்துவிடும். சமுதாய முறைப்படி தங்கள் திருமணம் நடந்து விடும் என்று அவள் எண்ணினாள். ஆனால் சென்ற நான்கு மாதங்களாக—தனஞ்சயனுக்கு அவள் தன் உள்ளத்தைப் பறிகொடுப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்பாகவே போக்ராம் ஒரு விதமான சங்கடத்தில் மாட்டிக் கொண்டிருந்தான். அந்தச் சங்கடத்திலிருந்து வெளிவருவது முடியாதது மட்டுமல்ல. அதனால் அவனுடைய எதிர்காலமும் மங்கிக்கொண்டிருந்தது. அவனுடைய எதிர்காலம் என்றால் குடும்பத்திலுள்ள ஏழு உயிர்களின் எதிர்காலமாகும். சோணாய் பரியாவின் வாழ்க்கையில் மாறுபாடு தோன்றி வந்தது, சமூகவாழ்வில் புதுப் புதுக் கருத்துக்கள் தோன்றிக்கொண்டிருந்தன. விவசாய வாழ்விற்கு எந்த விதமான தடை ஏற்படாவிட்டாலும் மக்கள் புதுப் பிரச்சினைகளோடு போராட வேண்டியிருந்தது. பொருளில்லாமை வளர்ந்து கொண்டிருந்தது. அத்துடன் மக்களின் சுயநலமும் பெருகிக் கொண்டிருந்தது. முன்பிருந்த மனிதத் தன்மையில் குறை ஏற்பட்டுக்கொண்டிருந்தது. சோணாய் பரியாவின் உள்ளம் "வனகீத"த்தின் (அசாமிய கிராமியப்பாடல்) உருக்கமான இனிமையாலோ "வரகீத"த்தின் (சிறந்த அசாமிய பக்திப்பாடல்) பக்தி

பரவசத்தாலோ அல்லது இயற்கையின் தெவிட்டாத அழகினுலோ மகிழ்ந்திருக்க முடியவில்லை. வாழ்க்கையில் சிக்கல்கள் வளர்ந்து கொண்டிருந்தன. வாழ்க்கை ஒரு யுத்தப் பாடலாக மாறிக் கொண் டிருந்தது. அதனுல் பலர் நீசமான செயல்கள் புரிய ஆரம்பித்து விட்டார்கள். ஒழுங்கான நடத்தை என்பதின் பொருளை அவர் களால் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்தப் புதிய நிலையில் பலர் திறமை வாய்ந்தவர்களாக ஆகிவிட்டார்கள். பழைய முதியோர்கள் ஏழையாக மாறிப் போனுர்கள். சில புதிய குடும்பங்கள் தோன்றிக் கொண்டிருந்தன.

சோனுய் பரியா கிராமத்து மக்கள் தொகை பெருகிக் கொண் டிருந்தது. விவசாயம் செய்ய நிலம் குறைந்தது. மூதாதையர்கள் விட்டுப் போயிருந்த இருபது—இருபத்தைந்து ஏக்கர் நிலத்தை ஒவ்வொரு தலைமுறையிலும் சகோதரர்கள் பங்குபோட்டுக் கொண்ட பிறகு ஒவ்வொரு குடும்பத்திலும் இரண்டு ஏக்கர் நிலம் தான் எஞ்சி யிருந்தது. அதுமட்டுமல்லாது ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலிருந்து இதுவரையில் புதுப்புது முறையைக் கையாளும் சுரண்டல் கூட்டம் அட்டையைப் போல் வளர்ந்துகொண் டிருந்தது. சோனுய் பரியா விலுள்ள மண்பாதை இருக்குமிடத்தில் பெரிய பெரிய கற்களைப் பரப்பிப் புதுப் பாதை போடத் திட்டம் நடந்துகொண் டிருந்தது. பல இடங்களில் வெள்ளை நிறமான அரசாங்க அலுவலகங்கள் காணப் பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும் மூன்று நான்கு குத்தகைக்காரர் களும், பொதுக் கூட்டங்களில் பேசும் சாமர்த்தியசாலிகளும் பெரிய பெரிய வீடுகளைக் கட்டிக்கொண் டிருந்தார்கள். அவற்ருல் கிராமங் கள் மிகவும் அழகுடன் காணப்பட்டன. ஆனுலும் சாதாரண மக் களின் நிலை மேலும் மேலும் கெட்டுக்கொண்டே யிருந்தது ஏழை மக்கள் மேலும் மேலும் ஏழைகளாகிக் கொண்டிருந்தார்கள். புதுச்சூழ் நிலையில் சோனுய் பரியா மக்கள் இரக்கமற்றவர்களாகவும் பண்பற்றவர்களாகவும் ஆகிக்கொண் டிருந்தார்கள். அவர்கள் பழமைக்கும் புதுமைக்கும் இடையில் நம்பிக்கை இழந்து கொண் டிருந்தார்கள். கல்வி பரவாததால் மக்களுடைய உள்ளத்தில் புதுக் கருத்துக்கள் இடம் பெறவில்லை. சோனுய் பரியா மக்கள் பரந்த மனத்துடன் வாழ்க்கை வாழக் கற்கவில்லை. ஏதோ ஒரு காலத்தில் பயனுள்ளதாக இருந்த பழக்க வழக்கங்களை இன்று வரை தாங்கிக் கொண்டிருந்தனர்.

போக்ராமும் புதுச் சூழ்நிலைக்கு தக்கவாறு தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயன்றுகொண் டிருந்தான். ஆனுல் நாளுக்கு

நாள் அவன் அந்த முயற்சியில் தோல்வியடைந்து கொண்டேயிருந் தான். அவன் தந்தை ஏராளமான நிலமோ சொத்தோ வைத்து விட்டுப் போகவில்லை. ஏதோ இரண்டு மூன்று குழி நிலம் தான் வைத்திருந்தார். அவன் அதற்காகத் தந்தைமீது தவறிக் கூட குற்றம் சாட்டியது கிடையாது. அவரது காலத்தில் நிலத்திற்கு மதிப்பே இல்லாதிருந்தது. சோனுய் கரையில் பொருள்கள் ஏராள மாகக் கிடைத்தன. இல்லாமை என்பதே இல்லாமலிருந்ததால் வருங்காலம் பற்றிய கவலையே அவருக்கு இல்லாமலிருந்தது. அதனால் தான் அவர் தன் மகனுக்கு அதிகமாக நிலம், சொத்து முதலியன வைத்துவிட்டுப் போகவேண்டும் என்று கருதவில்லை. அவருடைய வாழ் நாளில் ஒரு குடியானவனின் வாழ்க்கை உறுதியாகவும் கவலை யற்றும் இருந்தது. அப்படிப்பட்ட நேரத்தில் மனிதன் உலகியல் ஆசைகளை விடுத்து இறந்த பிறகு நல்ல கதி கிடைக்கவேண்டுமே என்று கவலைப்படுவது இயற்கையே. தர்மசிந்தனை மக்களைச் செய லற்றுப் போகும்படி செய்துவிட்டது. இவையெல்லாம் சேர்ந்து மனிதனுடைய நிகழ்கால வாழ்க்கை முன்னோர்களின் பரம்பரைப்படி நடக்கும் வாழ்க்கையாகவே தோன்றிற்று.

தந்தை இறந்த பிறகு அவர் வைத்துப் போயிருக்கும் நிலத்தை நம்பித் தன் வருங்காலத்தை அமைத்துக் கொள்ள முடியாது என்று போக்ராம் உணர்ந்தான். அவர் வாழ்நாளிலேயே போக்ராம் விவசாயத்தை விட்டு விட்டு வியாபாரத்தில் ஈடுபட நேர்ந்தது.

போக்ராமின் வியாபாரம் விசித்திரமாக இருந்தது. அவன் மாசி முதல் வைகாசி வரை கிராமம் கிராமமாகச் சுற்றி நெல், பருப்பு, கடுகு முதலியன வாங்குவான். வாரத்தில் ஓரிரண்டு முறை வண்டி யில் சாமானை ஏற்றிக்கொண்டு போய்ப் பட்டணத்தில் அதிக விலைக்கு விற்பான். வைகாசி முதல் ஆவணி வரை புல்குரி, ஜாஜோரி, தலங்காட் முதலிய கிராமங்களில் கூடும் சந்தைக்குப் போய், தைத்த துணிகளை விற்பான். அடுத்த நான்கு மாதங்கள் அவன் சணல் வியாபாரம் செய்வான். இரண்டு மூன்று நாட்கள் சுற்றியலைந்து பத்துப் பன்னிரண்டு மணங்கு சணலை ஒன்று சேர்த்து அதை ஒரு நாள் பட்டணத்து வியாபாரியிடம் விற்று விட்டு வருவான். ஆனால் இந்தத் தொழிலுக்கு மிகவும் தைரியம் தேவை. சணல் வியாபாரம் சூதாடுவது போன்றதாகும். ஒரு வண்டி சணலில் நூறு ரூபாய் லாபம் வந்தாலும் வரலாம்; அல்லது விலை குறைந்து முதலே மூழ்கி னாலும் மூழ்கலாம். சணல் சந்தையின் நிலையைப் புரிந்து கொள்வ தும் அழகிய பெண்ணின் உள்ளத்தை அறிந்து கொள்வதும் ஒன்று

தான். ஆனால் போக்ராமுக்குப் பொதுவாக நஷ்டம் ஏற்படுவதில்லை. அவன் வியாபாரம் செய்து செய்து சாமர்த்தியக்காரனாக ஆகி விட்டான். அந்த வியாபாரத்திற்கு வேண்டியது ஒரு மாட்டு வண்டி, ஒரு ஜோடி காளைமாடு, ஒரு தராசு, படிக்கல். சணலை நிறுக்க ஒரு நிறுவை முள், இவைகள்தான். முதலாக இருநூறு அல்லது முன்னூறு ரூபாய் இருந்தால் போதும். அதை வைத்துக் கொண்டு ஒரு குடும்பத்தை நடத்தி விடலாம். லாபப் பணத்தைக் கொண்டு அவன் திருமணம் செய்து கொண்டான்; தங்கை ரூபந்தி யை கஹிங்குரியில் திருமணம் செய்து கொடுத்தான். 1948இல் சணல் விலை மிகவும் ஏறியிருந்தது. அந்த வருஷம் அவன் நல்ல பணம் சம்பாதித்தான். வீட்டையும் நன்றாகக் கட்டிக் கொண்டான். ஒரு வண்டிக்காரனையும் அமர்த்திக் கொண்டான். சைக்கிள் ஒன் றும் அவன் வாங்கிக் கொண்டான். முழங்கால் வரையிலேயே இருந்த அவன் வேஷ்டி அப்பொழுது கால் வரையில் நீண்டுவிட்டது. அவன் பெரிய மனிதன் ஆகிவிட்டான். சட்டைப் பையில் பேனா ஏறிவிட்டது. சிவப்புத் துணியில் கட்டியிருந்த கணக்குப் புத்தகத்தில் கணக் கெழுதிவைக்கத் தொடங்கினான். சாதத்துடன் ஊறுகாய் போட்டுச் சாப்பிடத் தொடங்கினான். தேநீரோடு பசு நெய்யில் பொறித்த பூரியும் சாப்பிட ஆரம்பித்தான். இப்பொழுது போக்ராம் கலிதா போக்ராம் சேட் ஆகிவிட்டான்.

1948இல் இருந்ததுபோல் லாபம் கிடைக்காவிட்டாலும் பல ஆண்டு களாக அவனது வியாபாரம் நன்றாகவே நடந்துகொண் டிருந்தது. முதலும் வளர்ந்தது. அவன் பணக்காரனாகா விட்டாலும் மோராபுர் கிராமத்தைச் சேர்ந்த கோபால் மண்டல், கேர்பாய் மஹரி, ஜோகேரா பாயன், ஜயராம் பண்டித் முதலியோரைவிட அவனது நிலை நன்றாகவே இருந்தது. ஆனால் சென்ற இரண்டு ஆண்டுகளாக நிலைமை மாறிக்கொண் டிருந்தது. வியாபாரமே நடக்கவில்லை. மழைக் காலத்தில் சணல் கொஞ்சம்தான் விற்கமுடியும். அதிக லாபமும் அப்பொழுது கிடைக்காது. சணல் விலையிலும் ஏற்றமும் இறக்கமும் ஏற்படாமலிருந்தது. நெல், கடுகு முதலியவற்றின் வியாபாரமும் மந்தமாகத்தான் இருந்தது. ஆகையால் இப்பொழு தெல்லாம் வியாபாரம் செய்வது அவனுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. வியாபாரத்தில் கிடைக்கும் லாபத்தைக் கொண்டே அவன் குடும்பம் நடத்த வேண்டியிருந்தது. ஆகையால் அவன் நேரத்தைக் கவனித்துப் பலவாறான வியாபாரங்கள் செய்து குடும்பத்தைச் சமாளித்து வந்தான். அவன் ரெடிமேட் துணி

வியாபாரம் ஆரம்பிக்காம லிருந்தால் குடும்பத்தை நடத்தவே முடியாது. கடைசியில் வண்டிக்காரனை வைத்துக் கொள்ளமுடியும் என்ற நிலையும் இல்லாமற்போய் விட்டது. மாட்டு வண்டி வருஷத்தில் இரண்டு மாதங்களே பயன்படுகிறது. அதுவும் சணல் வியாபாரத்தின் பொழுதுதான். அதுக்கு கூலி ஆளே போதுமே!

ஐந்து ஆறு ஆண்டுகளாகச் சோனுய் பரியா மக்களால் முன்போல் நெல் விற்க முடியவில்லை என்பதை போக்ராம் கவனித்துக்கொண் டிருந்தான். கடுகு விளையும் நிலத்தில் கூட அவர்கள் மழைக்கு முன்னால் விளையும் தானியத்தை விளைவித்துக்கொண் டிருந்தார்கள். தண்ணீர் இல்லாதபொழுது அந்த நிலத்தில் கத்தரிக்காய், முட்டை கோஸ் முதலிய காய்கறிகள் உற்பத்தி செய்தார்கள். அந்த நிலத்தில் ஒரு வருஷம் விட்டு விட்டு மறு வருஷம் கடுகு போட்டு வந்தார்கள். அப்படியிருந்தும் அவர்களால் கடுகு முதலியன விற்பனை செய்ய முடியவில்லை. பதினைந்து நாட்கள் சுற்றியலைந்தும் ஒரு வண்டி சணல் தான் அவனால் சேர்க்க முடிந்தது. ஆனால் இந்த வேகத்தில் வியாபாரத்திற்கு வேண்டிய சரக்குகள் சேர்ந்தால் வியாபாரம் எவ்வாறு நடக்கும்! ஆகையால் அவன் அந்த வியாபாரத்தை விட்டு விட்டான்.

நாட்டில் மக்களின் எண்ணிக்கை அதிகரித்தது. விவசாயத்தால் வயிறு நிரம்ப வழியில்லாமலிருந்தது. நிலத்தின் செழுமையில் குறைவு ஏற்பட்டு விட்டதா என்ன? ஆனால் போக்ராமுக்கு இந்தக் காரணம் சரியெனப் படவில்லை. சணல் முன் போலவேயே உற்பத்தி செய்யப்பட்டு வந்தது. குறிப்பிட்ட நேரத்தில் விலைக்கு வாங்கவும் முடிந்தது. ஆனால் சணலைச் சாப்பிட முடியாதே! சணல் உற்பத்தி செய்வதால் ஒரே நிலத்தில் இரண்டு முறை விவசாயம் செய்யலாம். சணலறுவடை ஆனபிறகு தண்ணீர் குறைந்து விடுவதால் அந்த நிலத்தில் குளிர்கால தானியம் உற்பத்தி செய்யலாம். ஆகையால் அந்தப் பகுதியில் சணல் உற்பத்தி செய்யும் சில குடும்பங்கள் நல்ல நிலையிலிருந்தன. அப்படிப்பட்ட நிலமில்லாத குடும்பங்கள் மிகவும் மோசமான நிலையிலிருந்தன. ஒரு காலத்தில் சோனுய் பரியா மக்களுக்குச் சணலின் மதிப்பே தெரியாமலிருந்தது. மாடு கட்டு வதற்கான கயிற்றுக்கு வேண்டிய இரண்டு மூன்று கஜம் நீள முள்ள சணலை மட்டுமே அவர்கள் உற்பத்தி செய்து வந்தார்கள். முதல் உலகப் பெரும் போருக்குப் பிறகு தான் அவர்கள் சணல் சாகுபடியில் ஈடுபட்டார்கள்.

போக்ராமின் நிலைமை மோசமாகப் போனாலும் நெல் வியாபாரம் மந்தமாகப் போய் விட்டதால் நெல் விளையும் நிலத்தில் சணல் உற்பத்தி செய்யப்படுவது அவனுக்கு ஆறுதலாக இருந்தது. ஏனென்றால் சோணய் நதிக் கரையில் சணல் உற்பத்தி ஆகிக் கொண்டேயிருந்தால் அவனுடைய வியாபாரமும் நடக்கும் சணலை விற்றுக் கிடைக்கும் பணத்தால் மக்களும் செலவு செய்யக் கூடிய நிலைமையில் இருப்பார்கள். ஆகையால் தன்னுடைய ரெடிமேட் துணி வியாபாரமும் நடந்து கொண்டே இருக்கும் என்று அவன் கருதினான். ஆனால் சென்ற இரண்டு மாதங்களாக நிலைமை அவன் எதிர்பார்த்ததற்கு மாறாகப் போயிற்று.

பேபேஜியாவிலிருந்து ஹாதீபுர் வரையிலுள்ள சாலையில் கல் போடும் வேலை முடிந்துவிட்டது. சாலை அகலமாக ஆக்கப்பட்டது. அந்தச் சாலைதான் சில நாட்களுக்குப் பிறகு சோணய் கரையிலுள்ள நாலு கிராமங்களை ஒன்று சேர்க்கப் போகிறது. கடந்த ஆண்டு களில் முழங்கால் வரை சேறு கலந்த தண்ணீர்தான் சாலையில் இருந்தது. ஆனால் இப்பொழுது கல் போடப்பட்டு விட்டதால் சாலை சமனாகப்போய் விட்டது. இனிமேல் பட்டணம் வரை சணல் வண்டி போவது சுலபமாக இருக்கும். ஆனால் வரப் போகும் சௌகரியம் இருக்கட்டும். இப்பொழுது மிகவும் நஷ்டம்தான் உண்டாகிக் கொண்டிருக்கிறது. சாலையிலுள்ள கற்கள் கூர்மையாக இருந்தன. ஹாதீசுங்கிலிருந்து பேபேஜியா வரை தார் போடப் பட்டிருந்தது. ஆனால் பெரிய சாலையில் போய்ச்சேருவதற்கு முன்னால் கற்களால் அவனுடைய சைக்கிளுக்கு மிகவும் சேதமேற் பட்டது. ஒன்றரை மாதத்தில் அவன் இரண்டு டயர்கள் மாற்ற வேண்டி வந்தது. டயரின் விலைபோ ஏறிக் கிடந்தது. ஒரு டயரின் விலை பத்து ரூபாய். சின்னக்கடைகளிலோ இன்னும் கொஞ்சம் அதிகமாகவே இருந்தது. ஒன்றரை மாதத்தில் சைக்கிளுக்கே இருபது—இருபத்தைந்து ரூபாய் செலவு செய்து விட்டால் பிறகு வியாபாரம் எப்படி நடக்கும்!

இரண்டாண்டுகளாக போக்ராம் தன் தந்தையின் சிராத்தத்தைச் செய்ய முடியாமலிருந்தான். மக்களைக் கூட்டவோ, விருந்தளிக்கவோ வழியில்லாமல் இருந்தது. மூன்று நாட்களாக அவன் கனவில் அவன் தந்தை வந்து கொண்டேயிருந்தார். ஏதோ கஞ்சி காட்டி மந்திரம் சொல்ல வைத்து சிராத்தம் செய்து விட்டோம் என்று செய்ததால் தந்தையின் ஆவி கோபித்துக் கொண்டு விட்டது என்று அவன் எண்ணினான். ஆதலால் அவன் மோலாய் மோஹரியிடம்

கடனாக இருபது இருபத்தைந்து ரூபாய் வாங்கிக்கொண்டு ஆனி மாதம் இருபத்தெட்டாம் தேதியன்று எப்படியோ தந்தையின் சிராத்தத்திற்காக மக்களைக் கூட்டியிருந்தான். இன்று இரண்டு மாதங்களாகியும் அவனால் மோஹரிக்குக் கடனைத் திருப்பிக் கொடுக்க முடியவில்லை.

தாயுடன் வாசந்தி மாமன் வீட்டிற்குக் கிளம்பிய மறு நாளே மோலாய் மோஹரி அதிகாலையில் கடனைத் திருப்பிக் கேட்க வந்து விட்டான். மோஹரி கொஞ்சம் கடுமையாக வார்த்தைகள் பேசி விட்டான். போக்ராம் வாழ்க்கையில் அதற்குமுன் ஒரு பொழுதும் இப்படிப்பட்ட அவமானம் ஏற்பட்டதேயில்லை. ஒரு காலத்தில் அவர்கள் வீட்டிற்கு வந்து பால் விற்றவனும், கூலி வாங்கிக் கொண்டு தோட்டத்தில் வேலை செய்தவனுமான மோலாய் மோஹரி கடுமையான வார்த்தைகளைப் பேசக் கேட்பதற்கு முன்னரே தன் இரண்டு காதுகளும் ஏன் செவிடாகியிருக்கக்கூடாது என்று போக்ராம் எண்ணினான். போக்ராமுக்கு ஒரே கோபமாக இருந்தது. அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டான். மோஹரியை அவன் அடித்து விடவில்லை. இரண்டு நாட்களுக்குள் கடனைத்திருப்பிக் கொடுத்து விடுவதாக அவன் வாக்குக் கொடுத்தான்.

சைக்கிள் கெட்டுப் போயிருந்ததால் அவன் இரண்டு வாரமாக புல்குடி சந்தைக்குப் போக முடியவில்லை. அடுத்த நாள் சனிக் கிழமையாக இருந்ததால் துணி மூட்டையை சைக்கிளில் வைத்துக் கொண்டு புல்குடி சந்தைக்குப் போனான். ஆனால் அங்கேயிருந்த நிலை அவனுக்குப் பேரிடியாக இருந்தது.

ரெடிமேட் துணிக் கடைகள் பத்துப் பன்னிரண்டு காணப்பட்டன. அந்தக் கடைகளில் பலவிதமான துணிகள் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. வியாபாரிகளெல்லாரும் பட்டணத்திலிருந்து வந்திருந் தார்கள். நெல், சணல் முதலியன வியாபாரம் செய்யும் புல்குடி கேருவா வியாபாரி கூட அந்தத் துணி வியாபாரத்தில் இறங்கி விட்டான். அங்கே அவன் ஒரு பெரிய கடை போட்டிருந்தான். அங்கேயிருந்த கடைகளில் பலவகையான வர்ணத்துணிகள் இருந்ததனால் வாங்குப வர்கள் கூட்டமாகச் சூழ்ந்துகொண் டிருந்தார்கள். அதைத் தவிர அந்தப் பட்டணத்து வியாபாரிகள் விற்பனை செய்யும் முறையே விசித்திரமாக இருந்தது. துணி வாங்க வருபவர்களையெல்லாம் அவர்கள் மிகவும் மரியாதையுடன் அழைத்து பீடி, சிகரெட்கூடக் கொடுத்தார்கள். அதனால் சாதாரண துணிக் கடைக்காரனான போக்ராமின் பக்கம் யாருமே திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அவன்

என்னென்னவோ நினைத்தான். பத்துமணி ஆவதற்குள் அவனுக்கு வியாபார நம்பிக்கையே இல்லாமற் போய் விட்டது. வருத்தத்துடன் அவன் எல்லாத் துணிகளையும் மூட்டையாகக் கட்டிவிட்டான். அப்பொழுது அவன் மனத்தில் பல கேள்விகள் தோன்றின. கிராமத்தில் நாளுக்கு நாள் மில் துணி விற்பனைதான் வளர்ந்து கொண்டிருந்தது. மில்லில் தயாரான இந்த மெல்லிய போர்வையை அணிந்து கொள்ளாவிட்டால் பெண்களுடைய உடலுக்கு என்ன தான் கஷ்டம் ஏற்படுமோ? எதிர்பாராமல் இந்த ஆசை எங்கிருந்து தான் தோன்றிற்றோ? சுகபோகம் வளர்ந்திருப்பதைப் பார்த்தால் மக்களின் நிலையில் சீர்திருத்தம் ஏற்பட்டுவிட்டதா என்ன? இல்லை, மக்களின் நிலை இன்னும் சீரடையவில்லை. இது ஊராரைப் பார்த்து அவர்களைப் போல் வாழ வேண்டும் என்ற ஆசையின் பிரதிபலிப்புத் தான். ஆனால் இது காந்தியின் நாடாயிற்றே! சுதந்திர இயக்கத் தின்பொழுது தலைவர்கள் ஒரு வீட்டில் ஒரு ராட்டினம் சுற்றினால் மேல் நாட்டில் இயந்திரத்தால் ஓடும் ஒரு மில் மூடப்பட்டு விடும்; தன் துணியைத் தானே நெய்துகொள்வது என்றால் தன்னைத் தானே காத்துக்கொள்வதாகும் என்று மக்களுக்குக் கூறினார்களே? ராட்டினத்தால்தான் நாடு முன்னேறும் என்று அவர்கள் சொன்னார்களே காந்திஜி வாழ் நாள் முழுவதும் இப்படியெல்லாம் சொல்லிக்கொண்டும் நூல் நூற்றுக்கொண்டும் இருந்தார். இப்பொழுது காந்திஜி இல்லையென்பதால் ராட்டினம் சுற்றும் ஒலி மறைந்து விட்டதா? முன்பு கூட்டங்களில் பேசிய தலைவர்களெல் லோருடைய கருத்தும் இப்பொழுது மாறிப் போய் விட்டதா? நூல் நூற்பதில் மக்களுக்குச் சோம்பலாக இருக்கிறதா? கிராமத்துப் பெண்கள் எல்லோரும் திறனிழந்து விட்டார்களா?

நம்பிக்கை இழந்து வருத்தத்துடன் சந்தையை விட்டுத் திரும்பும் பொழுது சுதந்திர இயக்க நாளைப்போல் கிராமத்து மக்கள் இப் பொழுதும் கையால் நூற்ற நூலினாலான துணியை அணிந்து கொண்டிருந்தால் இந்த வியாபாரிகள் மக்களை இவ்வாறு மயக்க முடியாதல்லவா! அது மட்டுமல்லாது, அவனும் இந்த வருந்தத்தக்க நிலையை அடைந்து இவர்களிடம் தோல்வி யடைந்திருக்க வேண்டா மல்லவா என்று அவன் எண்ணினான். மக்கள், முன் போலவே துணி மணிகள் போட்டுக் கொண்டிருந்தால் அவனும் தன் வீட்டுத் தறியைக் கொண்டே நல்ல பணம் சம்பாதிக்க முடிந்திருக்குமே!

சந்தையை விட்டுச் சாலையை அடைந்தபொழுது அங்கே சந்தை வியாபாரி திலக்கை அவன் சந்திக்க நேர்ந்தது. இந்தத்

தடவை திலக் இருபதாயிரம் ரூபாய் குத்தகைக்கு சந்தையையே எடுத்துக் கொண்டுவிட்டான்.

"என்ன வியாபாரி இவ்வளவு சீக்கிரமாகச் சந்தையையே விட்டுப் போறே!"

"ஆமாப்பா! ஒன்றும் கேட்காதே, வியாபாரமே நடக்கலே, பட்டணத்து வியாபாரிகள் வந்து நம்ம வயிற்றிலே அடித்து விட்டார்கள். அவர்களைப் போல் நம்மாலே வியாபாரம் செய்ய முடியாது. ஆமாம், திடீரென்று இவ்வளவு பேர்கள் எங்கேயிருந்து வந்தார்கள்?"

"அடே! உனக்கு ஒன்றுமே தெரியாதா? எட்டு நாட்களாக இந்தப் பக்கம் நாளுக்கு மூன்று தடவை பஸ் வந்து போய்க்கொண்டிருக்கிறதே! ஒரு பஸ் பூர்பந்தா வரையில் போகிறது. இரண்டாவது பஸ் மயோக் வரையிலும், மூன்றாவது பஸ் ரஹா வரையிலும் போகிறது. பஸ்ஸினால் தான் இவர்கள் வரவும் போகவும் முடிகிறது. சந்தையும் முன்னைவிடப் பெரிதாக ஆகிவிட்டது."

திலக் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்த போக்ராம் பதிலொன்றும் கொடுக்கவில்லை. அவன் வருத்தத்துடன் பெருமூச்சு விட்டான். இனிமேல் புல்குடி சந்தைக்கு வருவதால் எந்த லாபமும் கிடையாது. அதனால் அவன் இனி ஜாஜோரி சந்தையிலும் தலங்க் துறைச் சந்தையிலும்தான் வியாபாரம் செய்ய முடியும். அந்தச் சந்தையிலாவது பட்டணத்து வியாபாரிகள் வந்து விடக்கூடாதே என்று அவன் ஆண்டவனிடம் வேண்டிக் கொண்டான்.

மத்தியான சாப்பாட்டுக்குப் பிறகு அவன் மனைவி, வாசந்திக்குச் சீக்கிரமாகவே மணம் முடித்து விடவேண்டும் என்று சொன்ன உடனேயே அவன் கோபத்துடன் கத்தத் தொடங்கிவிட்டான், "உன்னைப் போன்ற பெண்களுக்கு வேறு கவலையே கிடையாதா! எப்போது பார்த்தாலும் திருமணம், திருமணம் திருமணம்தானா! அப்படி அவளுக்குப் பையனே கிடைக்காமல் போய் விட்டால் மரத்தடியிலே உட்கார்ந்திருக்கும் கிழச் சன்னியாசிக்குக் கொடுத்து விடேன்! இந்தப் பெண்களுக்குப் பொறுமையே கிடையாது."

"அதற்கு இவ்வளவு கோபப்படுவானேன்! நான் என்ன உலகத்தில் நடக்காத காரியத்தைச் சொல்லி விட்டேனா! கடைசியில் உங்களைப் போன்ற ஆடவர்கள்தான் "வாலிபப் பெண் காட்டுப் புலிபோல" என்று சொல்ல ஆரம்பிப்பார்கள்."

"அந்தப் புலியின் வாயில் கடிவாளம் போட எனக்கும் தெரியும். தரு! இனிமேல் நீ இந்தக் கவலையை விட்டு விடு, இல்லையென்றால்

வாசந்தியின் அண்ணன் அவளுக்கு மணம் செய்து வைப்பது கிடக்கட்டும்; அவளைக் காப்பாற்றக் கூட அவனால் முடியுமா என்று சில நாட்களுக்குப் பிறகு சந்தேகப்பட ஆரம்பித்து விடுவாய்.''

''இன்று நீங்கள் என்னென்னவோ பேசுகிறீர்களே! எனக்கு ஒன்றும் புரியவேயில்லை.''

போக்ராம் அமைதியாக அன்று புல்குடிச் சந்தையில் ஏற்பட்ட நிலைமையை மிக வருத்தத்துடன் அவளிடம் கூறினான். தருலதாவின் உள்ளமும் வருத்தத்தில் ஆழ்ந்துவிட்டது. அவள் வாசந்தியைப் பற்றிய ரகசியமான விஷயத்தை அவனிடம் அப்பொழுது சொல்ல வேண்டாம் என்று எண்ணினாள். அவன் எங்கேயாவது கோபப்பட்டு எதிரிடையாக ஏதாவது நடந்துவிட்டால்!

அன்று இரவு போக்ராமுக்கு தூக்கமே வரவில்லை. பல ஐயங்கள் புழுவைப்போல் தோன்றி அவனுடைய உள்ள அமைதியைக் குலைத்துக்கொண்டிருந்தன. இரண்டு மாதத்திலேயே கல் பரப்பிப் போட ஆரம்பிக்கப்பட்ட சாலை பேபேஜியாவிலிருந்து ஜாஜோரி வரை போட்டு முடிந்தாகி விட்டது. அந்தச்சாலை இன்னும் நீண்டு அவன் கிராமம்வரை வந்து சேர எத்தனை நாள் பிடிக்கப்போகிறது! நாட்டில் நல்ல சாலை இருந்தால் மக்களுக்கு நன்மை ஏற்படும் என்று மக்களும் கருதுகிறார்கள். செய்தித்தாள்களும் அடிக்கடி அறிவித்துக் கொண்டேயிருக்கின்றன. ஆனால் அந்தப் புதுச்சாலை அவனுடைய அழிவுக்கு வழி வகுக்கக் கூடியது என்று அவனுக்கு அன்று தான் தெரிய வந்தது. லேமலே மீரைச் சேர்ந்த மரப்பாலத்தை எரித்துச் சாம்பலாக்கி விட்டாலென்ன? மூங்கில் பாலங்களையெல்லாம் தகர்த்தெறிந்து விட்டு மரப்பாலங்கள் போடப்படலாயின. அதாவது சில நாட்களில் எல்லாப் பாலங்களும் மரப் பாலங்களாக மாறிவிடும். மரப்பாலமாக இருப்பதால் சோணாய் கரை வரை மோட்டார் வரும். மோட்டார் என்ற பெயரை நினைத்தாலே அவன் உள்ளம் நடுங்கிற்று. அந்த மோட்டாரால்தானே அவன் புல்குடிச் சந்தையை ஒரேயடியாக விடவேண்டி வந்தது.

அந்த நாள் முதல் போக்ராம் தலங்க் சந்தைக்கும் ஜாஜோரி சந்தைக்கும் போய்வரத் தொடங்கினான். மற்ற வியாபாரங்களையும் எப்படியோ அவன் நடத்திக் கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய உள்ளத்தில் முன் போன்ற உற்சாகமே இல்லாமற் போய் விட்டது. அவன் நடுங்கிக் கொண்டே நாட்களைக் கழிக்கத் தொடங்கினான். சின்னச் சின்ன விஷயங்களில் கூட அவனுக்கு கோபம் ஏற்பட்டுக்கொண்டிருந்தது. தருலதா பல முறை முயன்றும்

வாசந்தியைப் பற்றிய உண்மையான விஷயத்தை அவனிடம் சொல்ல முடியவில்லை.

தாயும் வாசந்தியும் ஒரு நாள் கஹிசூரியிலிருந்து திரும்பி வந்தார்கள். அவர்களிடம் போக்ராம் மாமன் வீட்டைப் பற்றி ஒன்றுமே கேட்கவில்லை. அவன் ஒரே ஒரு கவலையில்தான் மூழ்கியிருந்தான். அவனுக்கு ஏராளமான முதல் வேண்டும். இல்லையென்றால் அவன் வியாபாரம் செய்வது பயனற்றுப்போகும். ஆனால் முதல் சேர்ப்பது எப்படி? சென்ற மூன்று மாதங்கள் கூட லாபப் பணத்தைக் கொண்டு அவனால் குடும்பம் நடத்த முடியவில்லை. வியாபாரத்தில் போட்டிருந்த பணமும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வந்தது.

# ஏழு

கார் காலம் வந்தது. வானம் புதுப் புது எழிலுடன் தோன்றிற்று, ஆறுகள் இளமை அழகுடன் பொலிந்தன. சோனாய் நதியில் தண்ணீர் நிரம்பியிருந்தது. பசுங்கதிர்களால் வயல்கள் அடர்ந்திருந்தன. 'சராளி' என்ற நீர்ப்பறவையும், அன்னப் பறவைகளும் 'காமன்' (கொக்கு) பறவைகளுமாகிச் சேர்ந்து வயல் பகுதியை எதிரொலிக்கச் செய்துகொண் டிருந்தன. பல காட்டுப் பறவைகள் கூட்டம் கூட்டமாகப் பறந்து முகிலுக்கும் மண்ணுக்கு மிடையில் இணைப்பை உண்டாக்கியதுபோல் தோன்றிற்று. பாப்சிலா, ஜல்மயீ, மேராபுர் என்ற இடங்களிலுள்ள காடுகளில் மயில்கள் கரும் முகில் இடிக்கும்பொழுது அழகுடன் ஆடிக்கொண் டிருந்தன. மீன் கொத்திப் பறவைகள் சலசலப்பதைப் பார்த்தால், செழுமை படர்ந்திருந்த நீர் வரிசையில் கரும் மீன், தங்க மீன், வெள்ளி மீன் முதலிய மீன்கள் ஏராளமாக வளர்ந்திருந்தன என்பது நன்கு புலப்பட்டது. கொக்குகளின் கால்கள் நெற் கதிர்களுக் கிடையில் மகுடு போல் அமைந்திருந்த நீர்ப்பாதை வழியாகப் படகுப் போல் சுற்றிக் கொண்டிருந்தன.

மொட்டுகள் பூத்துவிட்டன. பலவிதமான தானியங்கள் பசுமையுடன் பொலிந்து கொண்டிருந்தன. வாய்க்கால்களி லெல்லாம். தண்ணீர் நிரம்பியிருந்தது. தவளைகளின் ஒலியால் சோனாய் நதியின் வேகம் மிகுந்து விட்டது போல் தோன்றிற்று. சோனாய் புரியா கிராமம்

இயற்கையின் புது அழகினுல் புத்துயிர் பெற்றுத் திகழ்ந்தது. சோஞய் பரியா மக்களும் இயற்கையின் புது அழகில் ஒன்றியிருந் தார்கள். அடங்காத மழையின் வேகத்திற்குத் தக்கவாறு வாழ்க் கையை நடத்த மனிதனும் தைரியத்தைச் சேகரித்துக் கொண்டான். மீன் பிடிக்கும் மயக்கம் மக்களிடையே தோன்றிற்று. சோஞய் நதி யின் மீது அப்போது படகைச் செலுத்த முயல்வது அசட்டுத் துணிச் சல்தான். அப்பொழுதுதான் சணல் அறுவடை செய்வதும், சணல் நனைப்பதும், சணலைச் சுத்தப்படுத்துவது ஆகிய வேலைகளும் நடந்து வந்தன. சணல் விற்று ஆண்டு முழுவதற்கும் பணம் சேகரிக்கும் நேரமும் அதுதான்.

வயலில் பரவியிருந்த பசும் சணல் மணம் குடியானவர்களின் உள்ளங்களில் முன்னைப்போல் பணத்தாசையைத் தோற்றுவித்தது. வீட்டு முற்றங்களில் மூங்கில் பரப்பில் சணலைப் பரப்பிக் கொண்டு பெண்கள் முன்பனிக்காலத்து முழு நிலா நேரத்துக் கனவு கண்டு கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். சோஞய் பரியாவைச் சேர்ந்த செயல் நிரம்பிய வாழ்க்கையில் ஒரு கீதம் வந்து பிணைந்தது போல் தோன்றிற்று.

ஆவணி மாதத்து மழை மின்னலுடன் வந்து ஆற்றில் வெள்ளம் வரச்செய்தபொழுது சிற்ருறுகளிலும் நீர் பெருகிற்று; மக்களுடைய உற்சாகமும் வளர்ந்தது. ஆனுல் போக்ராமின் மனம் மட்டும் முன் போலவே இருந்தது. ஏனென்ருல் ஆற்று வெள்ளத்தைப் போல் சணல் விலை ஏறிக் கொண்டே போனுலும் அவனுடைய வியாபாரத் தில் எந்த முன்னேற்றமும் ஏற்படவில்லை. அவன் படகை ஓட்டிக் கொண்டு இரண்டு மூன்று முறை சோஞய் ஆற்றில் இக்கரைக்கும் அக்கரைக்குமாகப் போய் வந்தான். வீடு வீடாக ஏறிச் சணலுக் காக அலைந்து அவன் களைத்துத்தான் போனுனே தவிர ஒரு வாரம் அல்லது பத்து நாட்களுக்குள் வியாபாரம் செய்து லாபம் பெறும் விலைக்கு அவனுல் சணலைச் சேர்க்க முடியவில்லை. எல்லோரும் சாமர்த்தியக் காரர்களாக ஆகிவிட்டார்கள். அவனுக்கும் விலை வாசி யெல்லாம் நன்ருகத் தெரிந்து தானிருந்தது. முன்பெல்லாம் அவன் தராசு முள்ளை இங்குமங்குமாக ஆக்கி லாபம் சம்பாதித்து வந்தான். ஆனுல் இப் பொழுதெல்லாம் அது முடிவதில்லை. மக்களுக்கு அவனது சாமர்த்திய மெல்லாம் தெரிந்துவிட்டது. ஆனுல் ஒரு வருஷத்திற்குள் அவர்கள் இவ்வளவு கெட்டிக்காரர்களாக எப்படி யானுர்கள்? அலனைப் போல வியாபாரம் செய்யும் சாகீ ராமி டமிருந்து அவனுக்குத் தெரிய வந்தது; “சணலறுவடைக்கு முன்ன

ரேயே சோனாய் பரியா கிராமத்திற்குப் பல மார்வாடி வியாபாரிகள் வந்து முன் பணம் கொடுத்து விட்டு போனார்கள். அவர்கள் தான் சணலை எப்பொழுதும் "பத்ம கான்டா" (ஒரு விதமான தராசு) வில் தான் நிறுத்து விற்கவேண்டுமென்றும், சின்னத் தராசு, படிக்கல் சரியில்லை யென்றும் கூறி விட்டுப் போனார்கள்." கல் பரப்பிப் போடப் பட்ட சாலை சோனாய்க்குத் தெற்கு பக்கம் வரை வந்துவிட்டது. ஆதலால் பட்டணத்து வியாபாரிகள் வந்து போக வாய்ப்பு கிடைத்து விட்டது. அந்தச் சாலைதான் சாதாரண வியாபாரிகளுக்கு யமனாக வந்து சேர்ந்தது.

லேமலேமீர் பாலமும், ஹாதீசுங்குக்கும் ஜாஜோரிக்கும் நடுவில் போடப்பட்டுவந்த பாலமும் சித்திரை வைகாசியிலேயே தயாராகி விட்டன. ஆவணியில் இஞ்சினீயர் பாலத்தை வந்து பார்த்து விட்டு எவ்வளவு கனமுள்ள வண்டிகள் பாலத்தின் மேல் போகலாம் என்று முடிவு கட்டிவிட்டார். பாலத்திற்கு எதிரில் அந்த கனத்தைக் குறித்த ஒரு பலகை மாட்டப்பட்டுவிட்டது. பேபேஜியாவிலிருந்து தலங்க் நீர்த் துறை வரை போடப்பட்ட புதுச் சாலையில் டிரக்குகளும் பஸ்களும் போக அரசாங்கம் அனுமதியளித்து விட்டது. அது போக்ராமுக்கும், அவனைப் போன்ற பலருக்கும் பெரும் ஆபத்தாகப் போய்விட்டது.

தலங்க் நீர்த்துறை சோனாய் நதியைச் சேர்ந்த துறையாகும், போக்ராமின் ஊரான மேராபூரிலிருந்து ஒரு மைல் தூரம் மேற்குப் புறமாக அமைந்திருந்தது. சோனாய் வழியாகப் படகில் போனால் ஒரு பர்லாங்கு தூரம் குறைவாக இருக்கும். குளிர்காலத்தில் ஒவ்வொரு ஆண்டும் அந்தத் துறையில் ஒரு மூங்கில் பாலம் போடப் பட்டு வந்தது. அதனால் தான் அந்தத் துறைக்கு 'தலங்க் துறை' அதாவது 'பாலத்துறை' என்ற பெயர் வழங்கப்பட்டு வந்தது. ஆனால் எப்பொழுதிலிருந்து அதற்கு இந்தப் பெயர் ஏற்பட்டது என்று சோனாய் பரியா மக்களுக்குத் தெரியாது. தலங்க் துறைக்குத் தெற்கிலே 'மணிபுர் பரி' என்ற மாடுகள் மேயும் இடம் உண்டு. அந்தத் துறைக் கருகில்தான் தலங்க் துறைச் சந்தை நடப்பது வழக்கம். அந்தச் சந்தையில் வடக்குக் கரையிலிருந்தும் தெற்குக் கரையிலிருந்தும் மக்கள் வந்து சேர்வது வழக்கம். போக்ராமின் ரெடிமேட் துணிகள் அங்கே நன்றாக விற்பனையாகிவந்தன. மழைக் காலத்தில் சோனாய்க்கு அக்கரையிலுள்ள கிராமத்திலுள்ள மக்கள் படகு வழியே அங்கே சணல் கொண்டு வருவார்கள். போக்ராம் அதிக கஷ்டப்படாமல் அங்கேயே சணலை விலைக்கு வாங்கிப் பட்ட

ணத்தில் கொண்டு போய் விற்று லாபம் சம்பாதித்து வந்தான். ஆனால் இந்த மழைக்காலத்தில் அவனுடைய தலைவிதி மாறி விட்டது. தலங்க் சந்தைக்குச் சணல் ஏராளமாக வந்திருந்தது. ஆனால் விலை ஏறிக் கிடந்தது. அந்த விலைக்கு வாங்குவதால் லாபத்திற்கே வழி கிடையாது.

சோனாய் வரை கற்சாலை வந்து சேர்ந்த பதினைந்து நாட்களுக்கு பிறகு ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று அவனுக்கு ஒரே கஷ்டமும் அவநம்பிக்கையும் ஏற்பட்டு, தான் உயிரோடு இருக்கிறோம் என்று உணரும் திறன்கூட அற்றவனாகப் போகும் நிலைக்கு அவன் மாறி விட்டான். சந்தை நாளன்று அவன் வெறும் மாட்டு வண்டிக்குப் பின்னால் கற்சாலை வழியே சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்து கொண்டிருந்தான். தலங்க் சந்தையில் சணல் வாங்க எண்ணியிருந்தான் அவன். ஆனால் பாதையில் பெரிய பெரிய டிரக்குகள் போனதால் பறந்த தூசியில் அவனும் அவனுடைய மாட்டு வண்டியும் இருக்குமிடம் தெரியவில்லை. சந்தைக்குப் போய்ப் பார்த்தால் பட்டணத்திலிருந்து சணல் வியாபாரம் செய்யும் பெரிய பெரிய மார்வாடி சேட்டுகள் அங்கே வந்திருந்தார்கள். பெரிய பெரிய தூண்களை நட்டு அமைக்கப்பட்டிருந்த பெரிய தராசில் சணலை நிறுத்துக் கொண்டிருந்தார்கள். கொஞ்ச நேரத்திற்குள் மலைபோன்ற சணலை டிரக்குகளில் ஏற்றிக் கொண்டு பட்டணத்திற்கும் போய் விட்டார்கள். அவனால் ஒரு மணங்கு சணல் கூட வாங்க முடியவில்லை. மனத் துன்பத்துடன் தனது வலுவிழந்த தன்மையை உணர்ந்தவனாய் அவன் தன் தராசு முள்ளைப் பையில் வைத்துக் கொண்டான். இனி அவனுக்குச் சணல் விற்பதில் மக்களுக்கு என்ன லாபம்! அவன் எந்த எந்த சேட்டுக்கெல்லாம் சணலை விற்று லாபம் சம்பாதித்து வந்தானோ அந்த சேட்டெல்லாம் இப்பொழுது சந்தைக்கு வந்து நேரிடையாக உழவனிடமே விலைக்கு வாங்கத் தொடங்கி விட்டார்கள். பழக்கப்பட்ட அந்தச் சந்தையில் வாங்குபவர்களும் விற்பவர்களும் அவனுக்குப் பழக்கப்பட்டவர்களே. அவர்களுக் கெதிரில் அவனுக்கு இப்பொழுது அவமானமாக இருந்தது. ஆதலால் அவன் பத்து மணிக்கு முன்னரே சந்தையை விட்டுப் போய்விட்டான். வீட்டிற்குத் திரும்பி வந்து அவன் முதலில் வீட்டிற்கு பின்புறமிருக்கும் டனுவா துறையில் தனிமையில் நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தான். தனிமையில் அவன் சோனாய் நதிக் கெதிரில் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தான். அவனுடைய வாழ்க்கையில் அது ஒரு தோல்வி நாளாக இருந்தது. அந்தத் தோல்வி ஒரு நாள் அவனை

அழித்தாலும் அழித்துவிடும். ஏழ்மை அவனுடைய வாழ்க்கையின் நம்பிக்கையையும் இன்பங்களையும் பறித்துக் கொள்ளும். ஆதலால் அவன் ஏழ்மையை உள்ளத்தால் வெறுத்தான்.

இரண்டு நாள்வரை அவன் வீட்டிற்குள்ளேயே இருந்தான். வீட்டில் யாரும் அவனுடன் பேச்சுக் கொடுக்கவில்லை. அவனுடைய நெற்றியில் கவலை படிந்திருப்பதைப் பார்த்து ஒருவருக்கும் அவனைக் கூப்பிட கூடத் தைரியமில்லாமலிருந்தது இந்தப் புதுக்கஷ்டத்திலிருந்து விடுபட எந்தப் பாதையும் கிடைக்காமல் அவன் தவித்துக் கொண்டிருந்தான். சோனுய் பரியாவிலுள்ள இயற்கையழகும் இயற்கைச் செல்வமும் அவனை வருந்தச் செய்து கொண்டிருந்தன. காலம் பழிவாங்கி விட்டது. என்றும், அன்பு நிறைந்த சோனுய் இப்பொழுது இறக்கமற்ற மாற்றாந் தாயாக மாறிவிட்டது என்றும் அவன் கருதினான்.

ஆனாலும் அவன் தோல்வியை ஏற்கத் தயாராக இல்லை. சட்டைப் பையில் தராசு முள்ளை வைத்துக்கொண்டு சோனுய் கரையிலுள்ள கிராமங்களிலெல்லாம் சுற்றினான். நான்கைந்து நாட்கள் சுற்றிய பிறகும் அவனால் ஒரு வண்டி சணல்கூட சேர்க்க முடியவில்லை. இதற்கிடையில் வியாபாரிகளின் மனமும் மாறிவிட்டது. தலங்க் சந்தையில் வியாபாரம் செய்து பணக்காரனாகலாம் என்றுதான் எல்லோரும் கனவு கண்டுகொண்டிருந்தார்கள். அந்தச் சந்தையில் சணலை விற்றாலே பட்டணத்து விலை கிடைக்கும்பொழுது பேரம் பேசி உள்ளூர் வியாபாரிகளுக்குச் சணல் விற்பதால் என்ன பயன்? அது மட்டுமல்லாது தலங்க் சந்தைக்குப் பட்டணத்திலிருந்து வரும் மார்வாடி வியாபாரிகள் தங்கள் இஷ்டப்படித்தான் விலை ஏறவும் இறங்கவும் செய்யும் என்றும் தாங்கள் வாங்கும் சணல் நேராகக் கல்கத்தா மில்லுக்கு அனுப்பப்படுகிறது என்றும் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

புரட்டாசி மாதத்திற்கு முன்பே போக்ராம் முற்றிலும் சீர்குலைந்து விட்டான். உண்மையான வியாபார நாட்கள் வருவதற்கு முன்னரே அவனுக்குப் பெரிய ஆபத்து வந்துவிட்டது. நான்கு மாதத்திற்குள்ளாக அவன் புல்குடி சந்தையில் ரெடிமேட் துணி வியாபாரம் செய்வதை நிறுத்தவேண்டி வந்தது. சோனுய் பரியா கிராமத்தில் சணல் வாங்கக் கூடிய நிலையும் போய்விட்டது. தலங்க் சந்தையில் சணல் விற்பவர்களிடம் விலை கேட்கக் கூட அவனுக்கு அச்சமாக இருந்தது. அவனுக்கு வேறு வழியே யில்லாமற போய்விட்டது. ஆனால் இனி அவன் ஜாஜோரி சந்தையிலும் தலங்க் சந்தையிலும்

துணி விற்பனை செய்துதான் சம்பாதிக்க வேண்டும். இன்னும் பட்டணத்திலிருந்து சோனுய்வரை பஸ் வரவில்லை. ஆகையால் பட்டணத்து வியாபாரிகள் இன்னும் இந்த இரண்டு சந்தைக்கும் வந்து விடவில்லை என்று அவன் எண்ணினுன்.

## எட்டு

நம்பிக்கை, நம்பிக்கையற்ற நிலை, இன்னும் பல விதமான நிகழ்ச்சி கள்—இவற்றை யெல்லாம் தாண்டிக்கொண்டு காலம் கடந்து சென்றது. பல மாதங்களாக வாசந்தியின் நடத்தையைப் பார்த்து சுஜலாவுக்கும் தருலதாவுக்கும் வியப்பாக இருந்தது. வாசந்தி இப் பொழுதெல்லாம் வீட்டுக்குள்ளேயே இருந்தாள் டனுவாத் துறைக்குச் சென்றால் கூட அங்கே அதிகநேரம் தங்குவதில்லை. அவள் தாய்க்கு தினந்தோறும் ராமாயணம் முதலிய நூல்களைப் படித்துச் சொல்லிவந்தாள். அவளுடைய உள்ளத்து ஆசைகள் எல்லாம் நீண்ட நூல் தறியிலே சிக்கிக் கொண்டு இருந்து விடுவது போல் அவள் உள்ளத்திலேயே தங்கிவிட்டன. அவள் இப்பொழு தெல்லாம் அதிக ஈடுபாட்டுடன் தறியில் துணி நெய்து வந்தாள். ஒரு கிராமப் பெண்ணுக்கு அன்பின் உணர்வே அளவற்ற சக்தியை அளிக்கும். இப்பொழுதெல்லாம் தனஞ்சயனின் நினைவு அவளு டைய இளம் உள்ளத்தை சஞ்சலப் படுத்துவதில்லை. திருமணம் ஆகும் வரையில் அவனைப் பற்றி நினைக்க அவளுக்கு உரிமையே கிடையாது. சிறிய கண்ணுக்கும் புலப்படாத துவாரம் வழியே அந்தப் பாவமென்ற பாம்பை அவள் நுழைய விட்டு விடக் கூடாது. அந்தப் பாவம் சோனுய் பரியாவின் பரம்பரையைச் சேர்ந்த பாவமா கும். ஓமத் தீயைச் சாட்சியாக வைத்து மந்திரம் சொல்லி மணம் முடிந்த பிறகுதான் சோனுய் பரியாவைச் சேர்ந்த இளம் பெண் உள்ளத்தில் சிற்றின்ப உணர்ச்சிக்கு இடம் கொடுக்கலாம். அதற்குப் பிறகுதான் தன்னைத்தானே அர்ப்பணம் செய்து உடலாசையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். அதுதான் சோனுய் பரியாவின் பரம் பரை நியதியாகும். வாசந்தி தன் வாலிப உள்ளத்தை அடக்கிக் கொண்டு எதிர்காலம் பற்றிய இனிமையான கனவு கண்டு கொண் டிருந்தாள். இப்பொழுதெல்லாம் டனுவாத் துறைக்குப் பக்கத்தில் தனஞ்சயன் காணப் படுவதில்லை. அவன் மேராபூர் வழியாக பட்ட ணத்திற்குப் போகிறுன் என்று காதில் விழுந்தது.

அவளுக்குத் தாயைப் பார்த்தால்தான் கஷ்டமாக இருந்தது. கண்களில் விழுந்திருந்த பூவை அகற்றிய பிறகு கண்ணாடி போட்டதில் சில நாட்கள் வரை அவளுக்குக் குணமாக இருந்தது. ஆனால் மறுபடியும் அவளுக்குப் பார்வைத் தொல்லை ஏற்பட ஆரம்பித்து விட்டது. கண்ணாடியாலும் ஒரு பலனும் ஏற்படவில்லை. தாய் கையால் தடவிக் கொண்டு இங்குமங்கும் செல்வதைப் பார்க்கும் பொழுது அவளால் பொறுக்க முடியவில்லை. ஆனால் இப்பொழுது வைத்தியம் செய்வது என்பதும் முடியாமலிருந்தது. வீட்டின் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருந்தது. அப்படி யிருந்தும் அவள் ஒரு நாள் அண்ணனிடம் சொல்லிப் பார்த்தாள். இரண்டு பிளவுள்ள ஒரு மூக்குக் கண்ணாடி வந்திருக்கிறது என்றும், அதில் மேல் பக்கத்துக் கண்ணாடியால் தூரத்துப் பொருள்களையும் கீழ்ப் பக்கத்துக் கண்ணாடியால் அருகிலுள்ள பொருள்களையும் பார்க்கலாம் என்றும் அவள் கஹிங்குரியிலேயே கேட்டு வைத்திருந்தாள். ஆனால் அந்தக் கண்ணாடி போடப் பத்து ரூபாய் வரை செலவாகும். அண்ணன் அன்று தலங்க் சந்தையிலிருந்து தோல்வியுற்ற மனத்துடன் வீடு திரும்பியிருந்தான். சந்தையில் அவனால் ரெடிமேட் துணிகள் விற்க முடியவில்லை. அந்தச் சந்தையிலும் புல்குடிச் சந்தை போன்ற நிலைமையே காணப்பட்டது. மூன்று நாட்களுக்கு முன் பிலிருந்து அதாவது ஆகஸ்ட் பதினைந்தாம் தேதியிலிருந்து நயாமி லிருந்து தலங்க் சந்தை வரை தினசரி இரண்டு முறை பஸ் சர்வீஸ் வந்து போய்க்கொண் டிருந்தது. ஞாயிற்றுக் கிழமையன்று தலங்கில் கூடும் சந்தையிலும் பட்டணத்து வியாபாரிகள் வந்து கூடிவிட்டனர். செவ்வாயன்று ஜாஜோரி சந்தையிலும் இதே நிலைமை தான் ஏற்படும். அப்படியானல் இந்த மாதத்திற்குள்ளேயே அவன் வியாபாரத்திற்கே முழுக்குப் போட வேண்டியதுதான். அப்பொழுது முதலைக் கொண்டுதான் குடும்பம் நடத்த வேண்டி வரும். அந்தப் பணமும் தீர்ந்து விட்டால் அவன் ஆசையோடு வைத்திருக்கும் சைக்கிளையும் விற்க நேரிடும். அதற்குப் பிறகு பூகன் சம வெளியிலிருக்கும் மூன்று காணி நிலத்தை மோலாய் மோஹனுக்கு விற்று விட வேண்டி வரும். அன்று மோலாய் கடனுகக் கொடுத்த இருபத்தைந்து ரூபாயைத் திரும்பிக் கேட்டபொழுது, அவனுக்கு அவமானமாக இருந்தது. ஆனல் மோலாய் கூறியது சரியாகத் தான்போய்விட்டது. ஒரு நாள் போக்ராம் தன்னுடைய பரம்பரைச் சொத்தையும் விற்க நேரிட்டாலும் நேரலாம்.

இந்த மன நிலையில் தாய்க்குக் கண்ணாடி வாங்குவது பற்றி வாசந்தி கூறியதைக் கேட்டதும் போக்ராமுக்கு கோபம் பீரிட்டுக் கொண்டு வந்தது. அவன் வெறுப்புடன் பீடித் துண்டை எறிந்து விட்டு வாசந்தியைக் கடுமையாகத் திட்ட ஆரம்பித்து விட்டான். "பெண் களான நீங்களெல்லோரும் சேர்ந்துகொண்டு என் உயிரை ஏன் வாங்குகிறீர்கள்? நான் மார்வாடிக்காரனிடம் வண்டிக் காரனாக ஆகாதவரை நீங்கள் விடமாட்டீர்கள் போல இருக்கிறதே! உன் அம்மாவுக்கு மூக்கு கண்ணாடி வேண்டும். ஏன் உனக்கு வேண் டாமா? இப்போதுதான் பெண்கள் எல்லோரும் கண்ணாடி போட்டுக்கொண்டு தெருவிலே நெளித்துக் கொண்டு போகிற காலம் வந்து விட்டதே!"

அண்ணனுக்கு தன்னிடம் மிகுந்த அன்பு உண்டு என்று அவள் எண்ணிக்கொண் டிருந்தாள். இதுவரை அவன் இவ்வாறு அவளிடம் பேசியதே கிடையாது. ஆனால் இன்று எதிர்பாராமல் போக்ராம் இப்படிக் குத்துப்படியாகப் பேசியதைக் கேட்டதும் அவள் விசும்பி விசும்பி அழத் தொடங்கிவிட்டாள். அவள் உடனே அந்த இடத்தை விட்டு அகன்று படுக்கை யறைக்குள் போய்விட்டாள். இரவில் தருவும் சுஜலாவும் எவ்வளவோ அன்பாகச் சொல்லிப் பார்த்தும் அவள் சாப்பிட மறுத்து விட்டாள். அவள் இரவு முழுவதும் அழுது கொண்டேயிருந்தாள். கண்ணீரால் தலையணை நனைந்து விட்டது. சோனாய் பரியா கன்னியின் பொறுமை தோற்றுப் போயிற்று. அவள் போக்ராமைப் பகைவனாகக் கருதத் தொடங்கினாள். பிறந்த வீடு சிறையாகப் பட்டது. சுஜலா தரு இருவருடைய அன்பான வார்த்தைகளிலும் அவளுக்கு கபடம் இருப்பதாகத் தோன்றிற்று. அவளுடைய கண்ணீர் நிறைந்த கண் களுக்குத் தனஞ்சயன் தெய்வமாகத் தோற்றமளித்தான். சோனாய் பரியாவைச் சேர்ந்த அடக்கம் என்ற அணையை முறையற்ற வெள்ளம் தோன்றி உடைத் தெறிந்தது. அமாவாசை இருட்டில் வால் நட்சத் திர ஒளியைப் பார்த்ததுபோல் இருந்தது அவளுக்கு. வாழ்க்கை, யில் முதன் முதலாக ஓர் ஆடவனின் அர்த்தம் நிறைந்த அன்பையும் அன்பின் பரிசத்தையும் உணர்ந்து அவளுடைய உள்ளத்து வேதனை யெல்லாம் பறந்து விட்டது. அடுத்த நாள் முதல் அவள் பழைய வாசந்தியாக மாறி விட்டாள். அவளுடைய உடலுணர்ச்சியுடன் உள்ளமும் உறவு கொண்டது. அன்பின் ஏக்கமும் நம்பிக்கையும் கலந்து அவளுடைய உள்ள உணர்ச்சிக்கு முழுமையை அளித்தது. டனுவாத் துறையிலுள்ள மாமரம், நாவல்மரம், கதம்ப மரம், வாழை

மரம் முதலியவற்றின் நிழலில் உட்கார்ந் திருப்பதில் அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது. சரத் காலத்து சோஞய் நதியின் தூய்மை யான நீரில் அவள் தன் வாழ்க்கையின் எதிரொளியைக் கண்டாள். சோஞய் நதியில் துடுப்பை வீசிக் கொண்டு படகை ஓட்டிச் செல்லும் படகோட்டிகளின் பாடல்களில் அவள் தொலைவிலிருந்து வந்திடும் குரலைக் கேட்டாள். வாசந்திக்கு நெடு நேரம் வரை சோஞய் கரை யில் தனிமையில் உட்கார்த்திருந்தும் சலிப்பே தட்டவில்லை.

வாசந்தி வெளிப் பக்கத்து அறையை முன் போல் அலங்கரித்தாள். தூங்கும் அறையில் தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது வைக்கோல் கூரை, வேய்ந்த அறையிலுள்ள இரண்டு தூண்களைக் கரையான் பூச்சிகள் அரித்துக்கொண் டிருந்தன. சமையலறைச் சுவர் தெறித்து நரி நுழையும் அளவிற்கு ஓட்டையாக இருந்தது. நெற் களஞ்சியம் வடக்குப் புறமாகச் சாய்ந்து விட்டது. வீட்டின் மூலை முடுக்குகளில் மட்டும் இல்லாது அங்கே வாழ்பவர்களின் முகங்களிலும் துணிகளிலும்கூட இல்லாமையின் சின்னங்கள் தெரிய வந்தன. அப்படியிருக்க எதிர்ப்புற அறையை முன்போல அலங்க ரிப்பது காக்கையின் இறக்கையில் மயிலிறக்கையை வைப்பதுபோல் தான் ஆகும். ஆனாலும் வாசந்திக்கு அதில் தவறென்றும் தோன்ற வில்லை. என்றாவது தனஞ்சயன் வந்து நின்றால்! அவன் அவர்களு டைய வீட்டின் வெளிப்புற நிலைமையைப் பார்த்து உள்ளத்து நிலை மையையும் புரிந்து கொண்டு விடுவானே! என அவள் எண்ணினாள்.

இலையற்ற மரத்தில் புது இலைகள் தோன்றியதும் வசந்தம் தன் பெருமையைப் பற்றி பறைசாற்றிக் கொள்ளும். அது போலவே வாசந்தியின் காதல் ஏக்கம் அவளுடைய வேதனையிலும் ஓர் இன்பத் தைத் தோற்று வித்தது. அன்பின் உயர்ந்த உணர்ச்சி உடலுணர் வுடன் சேர்ந்து ஒரு புத்தின்பத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது.

மேகங்களுக்கு அழகை அளித்துவிட்டு சரத் காலம் கடந்து விட்டது. பனிக் காலம் வந்ததும் சோஞய் பரியாவின் வாழ்க்கையில் இளைப்பாறும் நேரம் வந்தது. மரங்களில் பழங்கள் தோன்றின. நெற் செடிகள் தளிர் விடத் தொடங்கின. குளங்களிலும் வாய்க் கால்களிலும் தண்ணீர் வற்றி விட்டது. செம்படவர்கள் சோஞய் ஆற்றில் பெரிய வலைகளை வீசி மீன் பிடித்தார்கள். வீட்டுக்கு வீடு மிருதங்க ஒலி கிளம்பிப் பனிக் காலத்து அமைதியைக் குலைத்தது. சோஞய் கரையிலிருந்து கிளம்பும் குழல், யாழ் முதலிய வாத்தியங் களின் ஒலி உள்ளங்களை மயங்கச் செய்தது. கதிரறுக்கப் போகும்

நம்பிக்கையால் சோறுய் பரியா ஏழைகள் கார்த்திகை மாதத்துக் கஷ்டங்களை யெல்லாம் மறந்தனர்.

கடைசியில் ஒரு நாள் தனஞ்சயன் அவர்கள் வீட்டிற்கு வந்தான். போக்ராம் இப்பொழுதெல்லாம் வீட்டிலேயே இருந்து வந்தான். அவன் சிறிது நேரம் வரை போக்ராமுடன் பேசிக் கொண்டிருந்தான். வாசந்தி அவனுக் கெதிரில் இரண்டு முறை வந்தும் போய்க் கொண்டும் இருந்தாள். அவர்கள் இருவரும் அன்று பட்டணத்திற்குப் போவதாக இருந்தனர். போக்ராம் தன்னிடத்தில் இருக்கும் சில காணி நிலத்தில் மனம் வைத்து விவசாயம் செய்வதாக உறுதி கொண்டான். ஆனால் விவசாயம் செய்ய மாடு அவனிடம் இல்லை. அதற்காக விவசாயக் கடன் வாங்க அவன் எண்ணினான். அவன் அதற்கு ஒரு விண்ணப்பமும் கொடுத்திருந்தான். தனஞ்சயனுக்குப் பட்டணத்தில் பலரைத் தெரியும். அவன் அதிகாரிகளுக்குப் புரியும் படியாகப் பேசக் கூடியவன். ஆகையால் போக்ராம் தனஞ்சயனின் உதவியால் கடன் பெற்று விடலாம் என்று நம்பினான். அதற்காகத் தான் போக்ராம் வேண்டிக் கேட்டுக்கொண்டதால் தனஞ்சயன் பல நாட்களுக்குப் பிறகு அந்தப் பக்கம் வந்திருந்தான். சில மாதங்களாக வாசந்தியின் போக்கு அவனுக்கு வருத்தத்தை அளித்திருந்தது. மூன்று மாதத்துக்கு முன்பு அவன் வந்தபொழுது அவள் அவனெதிரிலே வரவில்லை. டனுவாத் துறையில் கூட இரண்டு நாட்கள் அவனைப் பார்த்ததும் ஓடிப் போய்விட்டாள்.

தனஞ்சயனை வெளியே உட்கார வைத்துவிட்டு போக்ராம் உள்ளே சாப்பாடு சாப்பிட உட்கார்ந்தான். தனஞ்சயன் சாப்பிட்டு விட்டு வந்திருந்தான். ஆகையால் அவனுக்குத் தேநீர் கொடுக்குமாறு போக்ராம் கூறினான். வாசந்தி தேநீரை வைத்துக்கொண்டு அவனெதிரே நின்று கொண்டிருந்தாள். அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்; ஒன்றும் பேசவில்லை. வாசந்தி தேநீர் என்று சொன்னதையும் கேட்காதவன்போல் இருந்து விட்டான். வாசந்தியின் கண்கள் கலங்கிவிட்டன. விசும்பும் குரல் கேட்டு தனஞ்சயனின் ஆண் மனம் இளகிவிட்டது. வருத்தம் தோய்ந்த குரலில் அவன் பரபரப்புடன் 'வாசந்தி' என்று அழைத்தான். அவளும் அவனைத் 'தன்' என்று அழைத்தாள்.

வாசந்தி புடவைத் தலைப்பால் இரு கண்களையும் துடைத்துக் கொண்டாள்.

"நீ என்னை உனக்கு வேண்டியவனாக நினைப்பதை முன்பே ஏன் என்னிடம் கூறவில்லை! நான் ஒரு சாதாரண மனிதன். நான்கு

புறமும் சுற்றித் திரியக் கூடியவன். எனக்கு அம்மா, அப்பா ஒரு வருமே கிடையாது நான் ஒரு பரதேசி".

"நீங்கள் எப்பொழுதிலிருந்து இவ்வளவு கொடுமையாக மாறினீர்கள்! என்னைத் துன்புறுத்துவதில்தான் உங்களுக்கு அமைதி கிடைக்கிறதா? இந்த நான்கு மாதங்களில் நீங்கள் ஒருமுறைகூட ஏன் வரவேயில்லை?"

"எனக்கு நேரமே கிடைக்கவில்லை. பாப்சிலாவில் காலரா பரவியிருந்தது நாயையும் நரியையும் போல் மனிதன் சாவதைப் பார்த்து எனக்கு எதுவுமே பொருளற்றதாகத் தோன்ற ஆரம்பித்து விட்டது. இடைவிடாமல் அவர்களுக்காக கஷ்டப்படும் என் உள்ளத்தில் முள்ளைப்போல் ஒரு கவலை குத்திக் கொண்டிருந்தது. நீயும் என்னை..."

"அதையெல்லாம் இனிமேல் பேச வேண்டாம்! தான்! நான் தான் தவறு செய்து விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்."

"வாசந்தி! என் கண்களைப் பார்த்து நீ ஒரு விஷயம் சொல்ல முடியுமா?"

"நான் உள்ளத்தால் சொல்கிறேன். நான் உங்களுக்காக எதையும் விடத் தயாராக இருக்கிறேன்."

விசும்பல்களுக் கிடையில் வெளிவந்த அவளுடைய குரலைக் கேட்டு தனஞ்சயன் பெரிதும் நூரித்துப்போனான். "நான் இப்பொழுது உன் அண்ணனுக்கு இனியும் கஷ்டம் கொடுக்க விரும்பவில்லை. அவனுடைய வியாபாரம் நொடித்துப் போய்விட்டது. விவசாயத்தில் ஈடுபட்டு அவனுடைய நிலை திருந்திய பின் நானே அவனிடம் பேசுகிறேன். சரிதானே?" என்று அவன் அவளிடம் கூறினான்.

தனஞ்சயன் இவ்வாறு சொல்லக்கேட்டு அவள் வாயடைத்துப் போய் வியப்புடன் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். அதற்குள் உள்ளேயிருந்து போக்ராம் "டாக்டருக்கு வெற்றிலை பாக்கு கொடுத்தாயா?" என்று கேட்கும் குரல் காதில் விழுந்தது. அவனுடைய சாப்பாடு முடிந்துவிட்டது. அவனுடைய குரல் அருகிலிருந்து கேட்பதுபோல் இருந்தது. ஆகையால் வாசந்தி உடனே தனஞ்சயனை விட்டு நகர்ந்து உள்ளே சென்று பாக்கு வெட்டத் தொடங்கினாள். அவளுடைய உள்ளத்தில் மின்னல் ஒளி வீசியது போலிருந்தது.

தனஞ்சயனும் போக்ராமும் பட்டணத்திற்குப் போவதைப் பார்த்து வாசந்தி மைத்துனன் அத்தானின் இந்த ஜோடி மிகப் பொருத்தமாக

இருக்கும் என்று எண்ணினுள். போக்ராமுக்கு அன்றே நிறைய பணம் கடனுகக் கிடைக்க வேண்டும்; விரைவில் அவன் சிறந்த விவசாயி ஆகிவிட வேண்டும்; அவன் நெல் நிறைந்த கிடங்கிற்கு அதிபனுக ஆகவேண்டும் என்று அவள் இறைவனை வேண்டிக் கொண்டாள். அவள் மனதிற்குள்ளேயே இறைவனுடைய புகழ் பாடும் பஜனை மண்டபத்தில் இரண்டு எண்ணெய் விளக்குகள் காணிக்கையாக ஏற்றி வைத்தாள்.

## ஒன்பது

மாலை நேரத்தில் போக்ராம் வீடு திரும்பினுன்—வாசற்படியை அடைந்ததுமே குழந்தைகள் அவனைச் சூழ்ந்து கொண்டன. கடைக்குட்டி அவனுடைய வேட்டியைப் பற்றிக்கொண்டது. மானஸ் சைக்கிளின் பெடலில் காலைவைத்து மேலே ஏற முயன்ருள். 'அப்பா! நான் ஏறணும்' என்று இரண்டாம் குழந்தை பிடிவாதம் பிடித்தாள். தினமும் தான் இவர்கள் இப்படிச் செய்வது வழக்கம். ஆனுல் மானஸின் காதே செவிடாகி விடும்படி போக்ராம் அவளை ஓங்கி ஓர் அறை அறைந்தான். மற்ற குழந்தைகள் பயந்து இப்படியும் அப்படியுமாக ஓட ஆரம்பித்தன. "எங்கிருந்தாவது வந்த வுடனே சுற்றிக்கொண்டு விடவேண்டுமா? இதுகளுக்குச் சாவு தான் வராதா?" என்று அவன் கத்தினுன்.

வாசந்தி வெளி அறையிலிருந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு நம்பிக்கையே போய்விட்டது. 'பயிர்த்தொழிலை நடத்த இன்று கடன் கிடைக்கவில்லை, அதன் அறிகுறிதான் வீட்டிற்குள் நுழைந்ததுமே தெரிகிறதே' என்று அவள் நினைத்தாள். அவள் நினைத்ததும் சரிதான். தனஞ்சயன், கடன் கொடுக்கும் நகர அதிகாரியிடம் எவ்வளவோ வேண்டிக் கொண்டான். போக்ராமும் கூடத் தன்னுல் இயன்றவரை தன் ஏழ்மை நிலையைப்பற்றி அவனுக்கு எடுத்து விளக்கிப் பார்த்தான். ஆனுல் இதயமற்ற அதிகாரியின் உள்ளம் இளகவேயில்லை. "வியாபாரிகளுக்கு இம்மாதிரிக் கடன் அளிப்பது கிடையாது. உண்மையான விவசாயிகளுக்குத்தான் பயிர்த்தொழில் செய்யக் கடன் கொடுக்க முடியும். அவர்களுடைய விண்ணப்பத் தாள்களே கணக்கின்றி மேஜை மீது குவிந்து கிடக்கின்றன. அவர்களுக்குக் கொடுக்கவே பணம் பற்ருது போலிருக்கிறது. அதுமட்டுமல்ல;

இம்மாதிரிக் கடன் கொடுக்க எத்தனையோ விதிகள் இருக்கின்றன. இந்த விதிகளின்படி கடன் கொடுக்கவே இன்னும் ஆறுமாதங்களாகிவிடும்"—என்று அதிகாரி கூறிவிட்டான். அதிகாரிகளின் பேச்சைக் கேட்டு தனஞ்சயனுக்கு ஆத்திரம் வந்தது. அசாமியப் பிரதேசத்திய பயிர்த்தொழிலே இப்படி முடங்கிப் போய் விட்டதே என எண்ணி அவன் மன நலிவடைந்தான். சர்க்கார் அதிகாரியின் இரக்கமற்ற தன்மை அவனை இன்னும் அமைதியிழக்கச் செய்தது.

கடன் வாங்க இயலாத நிலையை நினைத்து போக்ராம் நம்பிக்கையிழந்து விட்டான். முன்னுக்கு வரும் வழிகள் எல்லாமே அவனுக்குத் தடைபட்டு விட்டன.

ஆனால் கடைசியாக அவனுடைய அதிருஷ்டம் ஒளி வீசிற்று. மிகவும் பெரிய அந்தஸ்துள்ள ஒரு மனிதர் ஒருநாள் அவனுடைய வீட்டிற்கு வந்தார். அவருடைய உதவியால் போக்ராமின் வாழ்வில் மாறுதல் உண்டாயிற்று.

சோனாய் பரியா கிராமம், ஐந்தாண்டுகளுக்குப் பிறகு, புத்துணர்ச்சியுடனும் கலகலப்புடனும் தோன்றிற்று. சோனாய் பரியா மார்கழி மாதத்தில் 'அறுவடை உற்சவம்' கொண்டாடி (இந்த உற்சவத்தை மக்கள் 'மாக்-பிஹு' அல்லது 'போகாலிபிஹு' என்றழைப்பர்). உற்சவத்தின்போது நடக்கும் திருவிழாவும், மக்களின் கொம்மாளமும் மார்கழி மாதத்து வானிலையும், இளைஞர் — இளம் பெண்களின் உள்ளங்களை இலவம் பஞ்சைப் போலாக்கி விட்டன. மெல்லிடையுடன் நடனமாடும் பெண்ணின் இளமை கவிதைச் சந்தம் போன்று துள்ளிப் பாய்ந்தது. பெண்ணின் நினைவு ஏதோ ஒரு காளையின் கனவில் ஒன்றிக் கிடந்தது. இல்லாமையினின்றும் தற்காலிக ஓய்வு பெற்ற முதியோர், இளையவர் எல்லோரும் பக்தி ரசத்தில் மூழ்கி விட்டனர். மார்கழி உற்சவ நங்கை தன் 'கார்த்திகை நங்கை'[1] யான சக்களத்தியை உதார மனத்துடன் மன்னித்து விட்டாள்.

கிராமத்தில் எங்கு பார்த்தாலும் சோனாய் நதியின் மீது மூங்கில் பாலங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இக்கரையும் அக்கரையும் ஒன்று சேர்ந்து விட்டன. தேவ்டா, பாப்சிலா போன்ற இடங்களில் எருமைகளின் சண்டை களியாட்டமாக நடத்தப்பட்டது. பொன்னிறமான கோதுமை, சோளம் முதலிய கதிர்கள் அசைந்தாட மக்களுடைய திருவிழாக் கூட்டம் பார்க்க மிகவும் ரம்மியமாக இருந்தது. கூடவே தேர்தல் சண்டையும் துவங்கிவிட்டது. இம் முறை

---

[1] கார்த்திகை மாதத்தில் உற்சவம் கொண்டாடப்படும்போது போதிய விளைச்சல் இருக்காது.

வாக்களித்து யாரை ஷில்லாங்கிற்கு அனுப்புவது? தன் பேச்சை விற்கும் வழக்கறிஞருக்கு வாக்களிப்பதா? இல்லாவிட்டால், குழந்தைப் பருவத்திலிருந்தே இந்தக் கிராமத்து மக்களோடு வளர்ந்து வாழ்ந்துவரும் ஒரு மனிதனுக்கு அளிப்பதா? இவனைத் தேர்ந்தெடுத்தால் ஒரு வார்த்தை ஆங்கிலத்தில் பேசமுடியாமல் தவிப்பானே? அவனைத் தேர்ந்தெடுத்தால், படபடவென்று ஆங்கிலம் பேசுவான்; ஆனால் நம்மைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டானே! அது சரி, ஒவ்வொரு முறையும் நாம் பிறருக்கு வாக்களிக்கின்றோமே, இதனால் நாம் கண்ட பலன் என்ன? நாய்வாலை நிமிர்த்தும் கதைதான்! பிறர் வந்து நம்மைக் கரையேற்றவா போகிறார்கள்? கவலையுடன் ஒருவன் கூறினானே, அதுவும் சரிதான்—'இலங்கைக்குச் செல்பவன் அரக்கனாகி விடுவான்!'

தேர்தல் திருவிழா மார்கழி மாதத்து ஆரம்பத்திலேயே அமளிதுமளிப்பட ஆரம்பித்தது. தெருவெல்லாம் அழகான கார்கள் வரிசை வரிசையாக ஊர்வலம் வந்தன. சோனாய் நதியின் இக்கரை கூட, அதன் உலர்ந்த மணல் கூட நகரத்துச் சுகவர்சிகளின் மென்மையான திருவடிப் பரிசத்தைப் பெற்றது. இந்த அழகர்கள் கூட்டங்களில், மேடைகளில் அழகழகாகப் பேச ஆரம்பித்து விட்டனர். சோனாயின் அக்கரையில் இப்போது இளவேனிற் பருவம். இந்த எழிற் சித்திரத்தைச் சோனாய் பரியா கிராமம் ஏந்தி நின்றது. பலர் எண்ணங்களில் மூழ்கி விட்டனர். அநேகர் பேச வாய்ப்புப் பெற்றுள்ளனர்—எத்தனையோ பேர் வண்ணமான கனவுகளைக் கண்டுகொண்டிருந்தனர்.

மார்கழி பிறந்து நான்கு தினங்களுக்குப் பிறகு, அந்த மனிதர் போக்ராமின் வீடு தேடிவந்து நின்று விட்டார். போக்ராம் அவரை மிகவும் மரியாதையுடன் உள்ளே அழைத்து அமரச் செய்தான். அவர் சாமானியமான மனிதரல்ல. அந்த மனிதர்தான் நகரத்து மிகப் புகழ்பெற்ற வழக்கறிஞர் சுபோத் சைக்கியா. நகரத்தில் அவரை அறியாதவர் கிடையாது. அவருக்கு ஈடு இணையாக வேறு யாரையும் சொல்லி விட முடியாது. அரசர்களுக் கிணையாக அவரைக் குறிப்பிட வேண்டும். அவர் சினந்தால் நகரத்துப் பிரமுகர்களும் நடுங்கிப் போய்விடுவர். அவருடைய அருட்பார்வை பட்ட மாத்திரத்தில் சின்னச்சாமியும் பெரியசாமியாகி விடுவான்!

சுபோத் சைக்கியா நாற்காலியில் அமர்ந்தார். பருமனான பிடியுள்ள மூக்குக்கண்ணாடியைக் கழற்றி, முகத்தைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டு, "உன் பெயர்தான் போக்ராம், இல்லையா?"

என்று கேட்டார்.

"ஆமாம் சார்" என்று போக்ராம் மிகவும் பணிவுடன் பதிலளித்தான்.

மூக்குக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டபடியே அவர் "ஆம், உன் பெயரை எத்தனையோ நாட்களாகக் கேள்விப்பட்டிருக்கிறேன், ஆனால் சந்திக்கும் வாய்ப்பு இன்றுதான் கிடைத்திருக்கிறது" என்று கூறினார்.

போக்ராம் மகிழ்ந்து போனான். ஏழ்மையில் அடிபட்ட அவனுக்குப் பெரிய மனிதரின் ஒரு வார்த்தை கூடப் பெரிய பெரிய நம்பிக்கைகளை ஊட்டிற்று. குடும்பத்தைப் பற்றிய கவலைகளினால் நலிந்த அவன் சுயாபிமானத்தையே இழந்து விட்டான். வெற்றியுடன் வாழ்க்கையை நடத்தும் மக்களிடம் இப்போதெல்லாம் அவனுக்குச் சொல்லொணா பக்தி ஏற்பட்டு விட்டது. செல்வம் படைத்தவரை எல்லாவற்றிற்குமே தலைவர் என்று அவன் கருதத் துவங்கிவிட்டான். நாமும் ஏழ்மை நிலையில் தானிருக்கிறோம் என்றறிந்திருந்தும் எளியவர்களைக் கண்டாலே அவன் மனக் கசப்புடன் வெறுக்கத் துவங்கினான். ஒரு விதத்தில் அவன் தன் சுயாபிமானத்தையே இழந்திருந்தான் என்றுதான் சொல்ல வேண்டும்.

"போக்ராம், உன்னுடன் முக்கியமாகச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். அதற்காகவேதான் இன்று நான் வந்திருக்கிறேன்" போக்ராமின் உள்ளம் படபடத்தது. "நான் அவ்வளவு தகுதியுடையவனா சார்?"—என்று சிரித்தபடியே பணிவுடன் கேட்டான்.

"நீ தகுதியுள்ளவனா, இல்லையா என்பதை நீதான் நன்கறிவாய். ஆனால் நான் இதற்கும் ஒரு படி மேலாக உன்னை மதிக்கிறேன். நாற்பத்து இரண்டாம் ஆண்டு நடந்த போராட்டத்தில், இந்த மாவட்டத்தில் முதலில் உன் பெயர்தான் குறிப்பிடப்பட்டிருக்கிறது. உன் பெயர்தான் எல்லோருடைய நினைவிற்கும் வரும்."

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து இரண்டாம் ஆண்டில் போக்ராமின் தந்தை உயிருடன் இருந்தார். அப்போது போக்ராம் ஒரு கவலையுமின்றி காங்கிரசில் தொண்டனாகச் சேர்ந்து கொண்டான். ஊர்வலத்தின் முதல் வரிசையில் அவன் நிற்பான். கிராமம் கிராமமாகச் சென்று அயல் நாட்டுத் துணிகளையும், ஆலையில் தயாரிக்கப்பட்ட துணிகளையும் தீக்கிரையாக்குவான். சோனாய் பரியா கிராமத்து மக்களுக்கும் அயல் நாட்டு உடைகளைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று அவன் அறிவுறுத்துவது வழக்கம். ஆனால் விதியின் விளையாட்டு விசித்திரமாகிவிட்டது. ஆலைகளில் தயா

ரிக்கப்பட்ட துணிகளை அவனே விற்க நேர்ந்தது. 'சப்-டிப்டி' அலுவலகத்திற்கு எதிரே நின்றுகொண்டு அவனும், மற்றும் பலரும் 'பிக்கட்டிங்' செய்ததுண்டு. அலுவலகத்தில் நாட்டுக் கொடியை நாட்டச் சென்று போலீசாரின் தாக்குதலை அவனும் அவனுடைய நண்பர்களும் எதிர்த்து நின்றது ஒரு காலம்! அவனுடைய இடுப்பருகே 'பயனட்' பட்டுவிட்டது. காயத்தின் வடுக்கள் இன்றும் போக்ராமின் உடலில் இருகின்றன. மூர்ச்சையுற்று வீழ்ந்தபோது தான் அவன் கைது செய்யப்பட்டான். சிறைச்சாலையில்தான் அவனுக்குச் சிகிச்சை யளிக்கப்பட்டது. அவன் ஆறு மாதங்கள் வரை சிறைச்சாலை உணவைச் சுவைத்திருந்தான். இன்று சுபோத் சைக்கியா கூறிய பிறகும், வேறு ஏதோ ஒருவனைப்பற்றிப் பேசுவது போல அவனுக்குத் தோன்றிற்று.

சைக்கியா கூறினர், "இந்தத் தடவை நீ எனக்கு உதவியளிக்க வேண்டும். இங்கு வாழும் மக்கள் உன் பேச்சைக் கேட்பார்கள் என்பதை நானறிவேன். நான் இம்முறை இந்த மாவட்டத்தில் நிற்கிறேன்!"

சைக்கியா பெரிய தந்திரசாலி. 'போக்ராம் வியாபாரி. எல்லா மக்களுடனும் பழகுபவன். ஆதலால் சோணுப் பரியா கிராமத்து மக்கள் எல்லோருக்கும் இவனைத் தெரியும்' என்று வழக்கறிஞர் நினைத்தார் போலும்! 'யார் எப்படிப்பட்டவர் என்பதைத் தெரிந்து கொண்டிருப்பவன் இவன். இத்தகைய ஒரு மனிதனை நம்முடன் வைத்துக் கொள்வது நல்லது. போதாதற்கு நாற்பத்து இரண்டாம் ஆண்டில் இவன் சாதித்த சாதனைகள் வேறு இருக்கின்றன. நாட்டிற்காக இவன் வாயிலிருந்து வெளிவரும் வார்த்தைகளுக்கு மதிப்பு அதிகம். தேர்தல் நேரத்தில் இப்படிப்பட்ட மனிதனை நம்முடன் வைத்துக் கொண்டால் குபேரன் கூட இருப்பது போலத் தான். அவன் நமக்குக் கண்ணபிரானைப் போல் கை கொடுத்து உதவுவான்!' என்று சுபோத் கருதினர்.

சைக்கியாவின் கருத்துக்கு போக்ராம் சற்று எதிர்ப்புக் கூறினன். "வீட்டுச் செலவையும் பிரச்சினையையுமே சமாளிக்க முடியாத என்ருல் சமுதாய வேலைக்காகச் சுற்ற எங்கே முடியப் போகிறது? அதில் உள்ளம்தான் எப்படி நாட்டம் கொள்ளும்? சொந்தத் தொல்லைகளே என்னைப் போதும் போதும் என்ருக்கி விட்டன." என்று சொல்லத் தொடங்கினன்.

சூழ்ச்சி மிக்க ஒரு சிரிப்பால் சைக்கியா போக்ராமை வளைத்துப் போட ஆரம்பித்தார். தம் திறமையாலும், சாதுர்யத்தாலும்

அவனுக்கு எவ்வளவோ உதவ முடியும் என்பதை இங்கிதமாகக் குறிப்பிட்டார். புத்திசாலியான போக்ராம் புரிந்துகொண்டு விட்டான். மறு நாள் விடிந்ததுமே சைக்கியா போக்ராம் வீட்டிற்கு வந்துவிட்டார். இம்முறை இருவரும் மனம் விட்டுப் பேசிக் கொண்டனர். இப்போது 'லீவிங்லோன்' என்ற ஒரு வகைக் கடன் கொடுக்கப்படுகிறது. 'உன் வீட்டில் மூன்று பெண்டிர் இருக்கின்றனரே. எளிதில் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் கடன் கிடைக்கும். இந்தக் கடனை உடனடியாகத் திருப்பித் தரவும் வேண்டியதில்லை. பல ஆண்டுகள்வரை இலவசமாகக் கிடைத்ததாகவே நினைத்துக் கொள்ளலாம். இந்தக் கடனை நான் விரைவில் உனக்களிக்க ஏற்பாடு செய்கிறேன். தினசரிக் குடும்பக் கவலையை மறந்து நீ மற்ற வேலையில் ஈடு படலாம்' என்று சைக்கியா கூறினர்.

சைக்கியாவின் அருளைப் பெறப் போகும் போக்ராம் சுவர்க்கத்தையே கைவசப்படுத்திக் கொண்டாற் போல் மகிழ்ந்தான்.

இரண்டாம் நாள் சுபோத் சைக்கியா மறுபடியும் வந்து, "இரண்டாயிரம் ரூபாய் கடன் கொடுக்க ஏற்பாடு செய்தாகி விட்டது. மார்கழி மாதத்திற் குள்ளேயே சுஜலா, தரு இருவரின் பெயரிலும் தொகை கிடைத்து விடும்" என்று கூறினர்.

இதைக் கூறிவிட்டு அவர் டிரைவரைக் கூப்பிட்டார். டிரைவர் ஜீப்பிலிருந்து பளபளக்கும் ஒரு புதிய சைக்கிளை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். "போக்ராம், இனி இந்த சைக்கிள் உனக்குத் தான். நீ எல்லா இடங்களுக்கும் போக சௌகரியமாக இருக்கும். நீ யாருடன் செல்ல விரும்புகிருயோ, அவர்களுக்கும் சைக்கிள் வேண்டுமானுல் சொல்; டிரைவர், 'லீஃப்லெட்' எல்லாவற்றையும் கொண்டுவா." பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பட்ட நோட்டீசுகளும், சிறிய 'அப்பீல்' கொண்ட சிறு புத்தகங்களும் கொண்ட கட்டுகளை டிரைவர் சைக்கியாவிற்கு முன்பு வைத்தான். அவற்றை போக்ராமிடம் கொடுத்தபடியே சைக்கியா கூறினர்,—"சோணுய் நதியின் அக்கரை வரையில் நல்ல பாதை போட்டது என்னுல்தான் என்பதைக் 'கான்வஸ்' செய்யும்போது சொல்ல வேண்டும்—சர்விஸ் பஸ்கள் நல்ல பாதைகளில் செல்ல ஏற்பாடு செய்தவனும் நான்தான் என்பதைக் குறிப்பிட வேண்டும்."

இதைக் கேட்டதுமே போக்ராமின் உடல் கொதிக்க ஆரம்பித்தது. திடீரென்று அவனுடைய இரண்டு கண்களும் இருண்டு விட்டன. ஆத்திரத்தினுல் இரு காதுகளும் சிவந்து போயின. நன்கு உறுதியுடன் அமைக்கப்பட்ட பாதை ஏன் தனக்குக் காலன்போல்

தோன்றுகிறது என்று அவன் உணர்ச்சி ததும்ப சைக்கியாவிடம் பேசினான். சைக்கியா மிகவும் பொறுமையுடன் சொற்பொழிவைக் கேட்பது போல் போக்ராம் கூறியதை யெல்லாம் கேட்டுக் கொண் டிருந்தார். பிறகு, " ஆயிரக் கணக்கான ரூபாய் செலவழித்துப் பாதை செப்பனிடப்பட் டிருக்கிறது என்பது உண்மைதான். ஆனால், உனக்குப் பிடிக்காவிட்டாலும் உண்மையைச் சொல்வதில் தவறென்ன ? " என்று கேட்டார்.

" போதும் நிறுத்துங்கள் சார். இந்தப் பாதை தான் என்னை இத் தகைய ஏழ்மை நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறது. இந்தப் பாதை காரணமாகத்தான் இனி சோனாய் பரியா கிராமத்து மக்களின் சுக வாழ்விற்கும் அமைதிக்கும் இழுக்கு வரப் போகிறது. "

" போக்ராம், நீ ஒன்றும் அறியாதவன். உண்மையான நிலைமை யையும் நேரத்தையும் நீ அலட்சியம் செய்யக் கூடாது. மக்களுக்கு, நேரத்தின் மதிப்பை எடுத்துரைத்து, நமக்குப் புதிய வாய்ப்புக்களை உண்டாக்கிக் கொள்ள வேண்டும்! "

சைக்கியா இன்னும் எவ்வளவோ எடுத்துரைத்த பின்பு, போக்ராம் சாமர்த்தியசாலியான வழக்கறிஞரின் திட்டங்களுக்கு இசைந்து விட்டான். சைக்கியாவிற் கெதிரே அவன் சிரம் பணிந்து நின்று விட்டான். அடுத்த நாளிலிருந்தே போக்ராம் தன் புதிய வேலையை மேற்கொண்டான். சோனாய் பரியாவில் வாழும் மக்களின் வாயிலாக அவன் மறுபடியும் நம்பிக்கையின் ஒளிக் கிரணங்களைக் காண முற்பட்டான்.

## பத்து

சோனாய் நதியின் அக்கரையில் 'அ' கூடப் படிக்கத் தெரியாத மக்களின் எண்ணிக்கை அதிகம். அத்தகைய மக்களுக்கு நம்பிக்கை யூட்டுமளவில் பேசுவது மிகவும் சுலபம். எத்தனையோ கூட்டங் களும், மேடைப் பிரசங்கங்களும் நடந்தன. தனித்தனிக் கட்சி களைச் சேர்ந்தவர்கள் சோனாய் பரியாவின் மக்களைப் பலவிதமான வார்த்தைகளினால் பிரமிக்கச் செய்தனர். யார் நம் வாக்குகளைப் பெறத் தகுதி பெற்றவர்? நம் முன்னேற்றத்திற்காக யார் உழைப் பார்கள்? இப்படிப்பட்ட பேச்சுக்கள் ஆரம்பத்திலிருந்தே நடந்து விட்டன. நூறுவிதமான பேச்சுக்களால், ஒன்றுமறியாத கிராம

மக்களின் மனம் கலக்க மடைந்துவிட்டது. கிராம மக்களுக்கு 'அரசியல்' என்ருல் என்ன என்றே தெரியாது. 'காந்தி மகான்' இருந்த காலத்தில் அவர்கள் ஒரு சிறிது புரிந்துகொண் டிருந்தனர். இப்போதோ, அவர்களது நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டே வந்தது. ஆனல், அதற்குக் காரணம் தங்கள் அறியாமை என்றுதான் அவர்கள் சொல்லிக் கொள்கின்றனர்.

ஷில்லாங் சபைக்காக மூன்று பேர் போட்டியிட்டனர். மற்ற இருவர் சஞ்சீவ் பருவா மற்றும் லோக்நாத்தாமுலி ஆவர்.

சஞ்சீவ் பருவாவின் கட்சியில் மக்களின் எண்ணிக்கை அதிகம். நாற்பத்து இரண்டாம் வருடத்திய போராட்டத்தில் அவர் அதிகத் தொண்டாற்றியவர். அவரைப் பிடித்துத் தருபவருக்குப் பத்தாயிரம் ரூபாய் பரிசளிப்பதாகப் பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கை விட்டிருந்தது. தலைமறைவாக இருந்தபோது அவருக்கு சோனுய் பரியா மக்களுடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந்தது. இந்த மாவட்ட மக்கள் இன்றும் அவரை அதே அன்புடன்தான் பார்த்து வருகின்றனர். அவரும் அடிக்கடி கிராமத்திற்கு வருவது வழக்கம். வெள்ளம், பஞ்சம் எனும் சோதனை நாட்களில் அவர்தான் மக்களுக்கு ஆதாரம்.

தேர்தலுக்கு நான்கு நாட்கள் முன்னதாக, உண்மையான போட்டி சுபோத் சைக்கியாவிற்கும் சஞ்சீவ் பருவாவிற்கும்தான் என்று தெரியவந்தது. 'சகோதரர்களே! இந்தத் தடவை நீங்கள் அளிக்கும் வாக்கின்படி சர்க்கார் மாறிவிடப்போகிறது. உங்கள் இன்னல்கள் முடிந்துவிடப் போகின்றன. சுபோத் சைக்கியாவிற்கு வாக்குக்கொடுத்து மாபெரும் தவறிழைத்து விடாதீர்கள்! அவர் மேடைகளில் பேசியதால்தான் சிறைசென்ருர். சிறையில் அவர் நெய்யும் பாலும் தயிருமாகச் சாப்பிட்டார் என்று சொல்லப்படுகிறது. நம் சஞ்சீவ் பருவா எப்படித்தெரியுமா? அவரைப் பிரிட்டிஷ் சிங்கத் தால்கூடப் பிடிக்க முடியவில்லை...' என்று சஞ்சீவ் பருவாவைச் சார்ந்தவர்கள் பேசினர்.

சுபோத் சைக்கியாவைச் சார்ந்தவர்கள் இவ்விதம் மக்களுக்கு அறிவுறுத்தினர் : 'தோழர்களே! சைக்கியா அவர்களைத் தேர்ந்தெடுத்தால் இம் முறை அவர் அமைச்சராகி விடுவார். நம் சோனுய் பரியா கிராமத்தின் துக்கமே பறந்தோடிவிடும். பாலம் கட்டப்படும், அணைக்கட்டு போடப்படும். பள்ளிகள் நிறைய ஏற்படும். சோனுய் பரியா மக்களுக்கு நல்ல நல்ல வேலைகள் கிடைக்கும். ஆனல் சஞ்சீவ் பருவா போன்றவர்கள், வலுவற்ற கட்சியின்

அங்கத்தினராக இருந்துகொண்டு என்ன செய்வார்கள் பாவம்? அவர் ஷில்லாங்கில் தன் அலவன்ஸை வாங்கிக் கொண்டு உட்கார்ந்திருப்பார்...'

சோனுய் பரியாவின் மக்கள் இந்த ஐந்தாண்டுகளாக ஏழையாக இருந்தனரே தவிர அவர்களிடம் ஒற்றுமைக்குக் குறைவிருக்கவில்லை. அந்தணர்கள் பொதுமக்களைக் கீழோர் என்று கருதிவந்தனர். ஆனால் கல்பியா, பாப்சிலா போன்ற இடத்து மேமன்சிங் மக்கள் தனி மதத்தவர் என்பது கூட அவர்களுக்கு இப்போதுதான் தெரியவந்தது. கவிதா ஜாதியினரிடையிலும் பலதரப்பட்டவர் இருக்கின்றனர் என்பதை அநேகர் இப்போதுதான் தெரிந்து கொண்டுள்ளனர்.

போக்ராம் தேர்தல் சண்டையில் சுறுசுறுப்பாக பங்கு கொண்டான். அவனுக்குத் தெம்பும் அதிகரித்துவிட்டது. சுபோத் சைக்கியா தேர்தலுக்காக ஜீப் வேறு கொடுத்திருந்தார். போக்ராமிடம் பலர் வேலை செய்து வந்தனர் சுபோத் சைக்கியாவிடம் சொல்லி அந்தப் பிரச்சாரர்களுக் கெல்லாம் போக்ராம் ஆளுக்கு ஒரு சைக்கிள் வாங்கிக் கொடுத்திருந்தான். கைச்செலவிற்குப் பணமும் தரப்பட்டது. மக்களிடம் எவ்விதம் பேசவேண்டும் என்பதையும் போக்ராம் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்திருந்தான். வடக்குப் பக்கத்தில் மோட்டார் செல்லாது. ஆகையால் அங்கு அதிக நேரம் செலவிட நேர்ந்தது. அவர்களுக்குச் சாப்பிடக்கூட நேரம் கிடைக்கவில்லை. ஆயினும் அந்த இடங்களுக் கெல்லாம் போதையேறியவர்கள் போல் அவர்கள் சுற்றத் துவங்கினர்.

சோனுய் பரியா கிராமமே சிவதாண்டவ நடனத்தில் ஈடுபட்டிருந்தது எனலாம்! எதிர்பாராமல் முன்னதாகவே வந்த இளவேனில் பாதையின் புழுதியைக்கூட உயிர்ப்புறச் செய்து விட்டது. தம்மை அலங்கரித்துக் கொண்டு சோம்பேறிகளாகத் திரிந்துவந்த இளைஞர்களுக்குத் திடீரென மக்களாட்சியின் மகிமை தெரிந்து விட்டது! நகரத்துக் கள்ளக் கடைக்காரர்களும் கறுப்புப் பணத்தைச் சேமிப்பவரும்கூட தேசத்தின் நலம் என்பது பற்றிச் சொற்பொழிவாற்றமுற்பட்டு விட்டனர். சுபோத் சைக்கியாவின் சீலத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டனர். சுயநலப் பேய்கள்கூட இங்கு கொடையாளிபோல் நடந்து கொண்டனர். 'ஷைலக்' போன்ற கஞ்சர்கள் கூடத் தம் இறுகிய பணமுடிப்பை அவிழ்க்க ஆரம்பித்தனர். மமதை கொண்ட மக்கள் கூட மண்ணோடு மண்ணாய், புழுதி மண்டிக் கிடக்கும் ஏழை மக்களைப் புகழுரைகளால் மகிழ்வித்தனர்.

போக்ராமின் குழுவினர் ஜல்மயி, ராய்டிங்கியா, சாபுக்தரா

போன்ற கிராமங்களின் மக்களைத் தம் பக்கம் கொண்டுவந்து விட்டனர். ஆனால் பாப்சிலா, கூஞ்சி, போர்போரி போன்ற இடங்கள்தான் அவர்களுக்குப் பிரச்சினைகளாக இருந்தன. அந்த இடங்களில் தனஞ்சயன்தான் மிகவும் பெயர் பெற்றிருந்தான். அங்கு வாழும் மக்கள் தனஞ்சயனைத் தவிர வேறு ஒருவருடைய வார்த்தையையும் கேட்பதில்லை. சோனாய் நதிக்கு வடக்கே அவன்தான் மக்களின் தெய்வம். அவர்கள் நோய்வாய்ப்பட்டால் சிகிச்சை செய்வான். இன்னலில் இருக்கும்போது அவர்களுக்குக் கை கொடுத்து உதவுவான். எல்லோரையும் சமமாகப் பார்ப்பான். இதற்குமேல் சோனாய் பரியாவின் மக்களுக்கு என்ன வேண்டும்? எல்லோரையும் அழைத்து தனஞ்சயன் கூறினான்: 'நினைவிருக்கட்டும், சகோதரர்களே, மின்னுவதெல்லாம் பொன்னல்ல. தன்னை மக்களில் ஒருவனாகக் கருதுபவனை, மக்களின் துயரைத் தன் துயரென்று கொள்பவனைத்தான் நீங்கள் தேர்ந் தெடுக்கவேண்டும். தேர்தலுக்குப் போட்டியிடுவோரில் சஞ்சீவ் பருவாதான் தகுதி பெற்றவர். அவருடைய குறிக்கோள் நேர்மையானது, அதற்கான உபாயங்களும் நேர்மையானவை. சைக்கியாவின் குறிக்கோளும் உண்மையானதாக இருக்கலாம். ஆனால் உபாயங்கள் நேர்மையானவை அல்ல. அப்படிப்பட்ட மக்கள் நாட்டிற்கு நலன் செய்பவர்களல்லர்.'

மக்கள் இதனை ஆமோதித்தனர். ஒரு சாதாரணமான இளைஞனின் ஒரே பேச்சில் அவர்கள் மயங்கிவிட்டனர். மகிமை பொருந்திய சைக்கியாவின் பாச்சா பலிக்கவில்லை, போக்ராமின் உள்ளத்தில் புயல் வீசத் துவங்கியது. 'மக்களைச் சரிப்படுத்துவது எவ்வளவு கடினம்' என்று அவன் கருதினான். போதாததற்கு, தனஞ்சயன் வேறு அவனுடன் பகைமை பாராட்ட ஆரம்பித்து விட்டான். தன் உடன் பிறந்த தம்பியைப்போல் எண்ணி, அவனை வீட்டிற்குள் அழைத்துச் சென்று போக்ராம் உபசரித்ததுண்டு. அப்படிப்பட்ட போக்ராமிற்கெதிரே தனஞ்சயன் காலன் போல் காட்சியளித்தான். 'தனஞ்சயன் காரணமாக நம் எதிர்காலமே தவிடுபொடியாகிவிடும் போலிருக்கிறதே' என்று போக்ராம் எண்ணினான். அன்னியனை நம்பக்கூடாது என்கிறார்களே அது உண்மைதான் எப்போதும் ஒன்றுமே பேசாமல் இருக்கும் மக்களும் சிக்கலான பிரச்சினை யாகிவிடுகின்றனர்.

சுபோத் சைக்கியாவும் பாப்சிலா சென்றிருந்தார். போக்ராம் அவருக்காக ஒரு கூட்டம் கூடச் சேர்க்கமுடியாமல் தவித்தான்.

கிராமத்து இளைஞர்கள் ஒன்று சேர்ந்து சைக்கியாவையும் போக்ராமையும் அவமானப் படுத்தியதாகக்கூட மக்கள் பேசிக்கொண்டனர். சைக்கியாவிற்கு தனஞ்சயன் பேரில் கோபம் மூண்டது. ஆனால் அவரால் வாய்திறக்க முடியவில்லை. மக்களின் பாததூளியை ஏற்றுக்கொள்ளும் நேரமாயிற்றே இது! அவருடைய உள்ளத்தில் நஞ்சு நிரம்பியிருந்தது. ஆனால் முகத்தில் அமுதம் பெருகப் பேசி தனஞ்சயனைத் தம் பக்கம் ஈர்த்துக்கொள்ள அவர் பெரு முயற்சி செய்து பார்த்தார். ஆனால் அதில் அவர் வெற்றி பெறவில்லை. 'எல்லோரையும் விலைக்கு வாங்கிவிட முடியாது சைக்கியா! பிரபுத்துவத்தின் பெருமை உங்களை அறிவிழக்கச் செய்திருக்கிறது. நீங்கள் எங்கள் ஊருக்குப் பாவச் சுமையை அழைத்து வந்திருக்கிறீர்கள்!' என்றுகூட தனஞ்சயன் அவரிடம் கூறியிருப்பான்போல் தோன்றிற்று

இது உண்மைதான். இரண்டு தினங்களுக்கு முன்பு, மோராபூரை நோக்கி தனஞ்சயன் சென்றிருந்தான். இளைஞர்களின் ஒரு கூட்டம் அவனைச் சூழ்ந்து கொண்டது அவர்கள் கெட்ட வார்த்தைகளால் அவனைத் திட்ட ஆரம்பித்தனர். ஒருவன் தனஞ்சயனுடைய சட்டையை இறுகப் பிடித்துக்கொண்டான். அந்த இளைஞர்களைப் போலவே தனஞ்சயனும் இளைஞன்தான். சுபோத் சைக்கியாவிடம் பணம் வாங்கிக்கொண்டு இந்த இளைஞர்கள் போக்கிரித்தனம் செய்தனர். மார்வாடி கொடுத்த புதிய சைக்கிளைப் பெற்றதுமே இவர்களுக்குப் பெரியவர்களை மதிப்பதுகூட மறந்து போய்விட்டது. மதுபானம் அருந்துவதுடன் பணத்தையும் ஜீரணிக்கக் கற்றுக்கொண்டு விட்டனர் இந்த இளைஞர்கள். சுபோத் சைக்கியாவின் பகுத்தறிவு பறிபோய்விட்டது. போக்ராமைப் போன்ற நல்ல மனிதர்கள்கூட மனிதத்தன்மையை இழந்துவிட்டனரே! சோனாய் பரியாவில் பாவம்தான் நுழைந்து விட்டது.

தேர்தலுக்கு முதல் நாள், பாப்சிலாவில் ஒரு பெரிய அமர்க்களம் உண்டாயிற்று. நடுத்தரப் பள்ளிக்கு எதிரே ஒரு ஆலமரம் உண்டு. அதன் நிழலில் பகல், மாலை நேரங்களில் கிராம மக்கள் தங்கள் சுக துக்கங்களைப் பரிமாறிக் கொள்வது வழக்கம். இன்று ஆலமரத்தின் அடிமரத்தில் பலவிதமான சொற்றொடர்கள் காணப்பட்டன.

'...மக்கள் வாழ்க...' '...க்கு உங்கள் ஓட்டுக் கொடுத்துக் கவலையை ஓட்டுங்கள்'... '...ரைத் தேர்ந்தெடுத்து, ஆட்சியை மாற்றுங்கள்.'...'மக்கள் மனம் வைத்தால் மக்கள் வாழலாம்' முதலியன. அதில் காலையில் போக்ராமும் ஒன்றைச் சேர்த்து விட்டான்.

அருகிலேயே சில வாலிபர்கள் நின்றுகொண் டிருந்தனர். அவர்கள் கோபத்தில், தொங்கவிடப்பட்ட காகிதத்தைக் கிழித்துவிட்டனர். போக்ராமின் குழுவினர் அவர்களிடம் சென்றனர். இருதரத் தோருக்கு மிடையே கைகலப்பு ஏற்பட்டது. குத்து, அடி, உதை எல்லாவற்றிற்கும் பிறகு செங்கல்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன! அதே சமயத்தில் எங்கிருந்தோ, தனஞ்சயன் அங்கு வந்துசேர்ந்தான். வாலிபர் கூட்டம் அமைதியாகிவிட்டது. ஆனால் போக்ராமின் கூட்டத்தார் கத்தலை நிறுத்தவில்லை. போக்ராமின் சட்டையும் வேட்டியும் கிழிந்து போயிருப்பதைத் தனஞ்சயன் கண்டான். வாயிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. பாப்சிலாவைச் சேர்ந்த இளைஞர்களை அவன் கோபித்துக் கொண்டான். ஒரு கணத்தில் எல்லோரும் அமைதியாகிவிட்டனர். ஆனால் ஒருவன் மட்டும் கூறினான்: 'இவர்கள் இரண்டு நாட்களுக்கு அக்கரை செல்ல முடியாமல் செய்துவிட்டேன். இவர்களை அக்கரைக்கு அழைத்துச் செல்ல வேண்டாம் என்று படகோட்டிகளிடம் நான் சொல்லிவிட்டேன். இங்கேயே விழுந்து கிடக்கட்டும்!'

தனஞ்சயன் அவர்களுடைய பேச்சைக் கேட்காமல் கோபத்தால் மௌனமாக இருந்து விட்டான். இம் மாதிரி அட்டகாசம் செய்யும் இளைஞர்களால் தொல்லை அதிகமாகிறதே என்று அவன் கவலைப்பட்டான். இப்படி இவர்கள் அடித்துக் கொள்வதால் சஞ்சீவ் பருவாவிற்கு நன்மை ஏற்பட வழி கிடையாது. நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சைக்கிள்களின் அருகே தனஞ்சயன் சென்றான். அவை போக்ராமின் கூட்டத்தவருடைய சைக்கிள்கள். சைக்கிளை ஒவ்வொன்றாக எடுக்கும்போது டயரில் காற்றில்லை என்பது தெரிய வந்தது. பாப்சிலா இளைஞர்களின் வேலை அது! ஒரு சைக்கிளில் சீட்டைக் காணோம். தனஞ்சயன் மெதுவாக போக்ராமிடம் சென்று, 'அண்ணா! என்னை மன்னித்துவிடு. நான் வசிக்குமிடத்தில் இப்படி யெல்லாம் நடந்தது பற்றி...'

போக்ராமிற்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. அவனால் எதையும் சகித்துக்கொள்ள முடியாது. "போக்கிரிப் பயலே, இவர்களைத்தூண்டி விட்டு விட்டு தருமபுத்திரைப் போல் வேஷம் போடுகிறாயோ? பொய் மரியாதையா எங்களிடம் காண்பிக்கிறாய்? இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்கா விட்டால் என் பெயர் போக்ராமல்ல" என்றான் போக்ராம்.

தனஞ்சயன் கோபித்துக் கொள்ளவில்லை. வேறொரு மனிதனிடம், 'இவர்களைச் சுத்ரு படகோட்டியிடம் சொல்லி அக்கரைக்குக்

கொண்டு சேர்த்து விடு' என்று வேண்டிக்கொண் டிருந்தான். இதன் பிறகும் கூட போக்ராம் தனஞ்சயனுக்கு நன்றி செலுத்த வில்லை. காரணம், மாலை நேரத்தில் படகோட்ட அதிகப் பணம் படகோட்டி கேட்பான் என்பதுதான். மாலையில் தலங்குக் கட்டத்தில் தனஞ்சயனும் போக்ராமும் சந்தித்தனர். முதலில் தனஞ்சயன் தான் பேச முற்பட்டான். அதனால்தானோ என்னமோ, போக்ராமின் உள்ளம் சற்று இளகியது. "சஞ்சீவ் பருவாவிற்காக வேலை செய்வதால் உனக்கு என்ன லாபம்?" என்று போக்ராம் கேட்டான்.

தனஞ்சயன் பணிவுடன் பதிலளித்தான்: "மனிதன் எல்லா வேலைகளையும் லாப-நஷ்டத்தைக் கருதிச் செய்வதில்லை. சிறப்பான குறிக்கோளுடன் செல்லும் மக்களை நான் மதிக்கிறேன். ஆகையால், சஞ்சீவ் பருவா போன்றவர் மக்களின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், அப்போதுதான் உண்மையான மக்களாட்சி மலரும் என்பது என் கருத்து. அதுதான் உண்மையான குடியரசாகத் திகழும்!"

குடியரசு எனும் சொல் போக்ராமின் செவிகளில் இதுவரை கேட்காத சுவரம் போல் ஒலித்தது. அவன் தனஞ்சயனிடம் மேலும் ஒன்றும் பேசவில்லை. அன்று மாலையிலேயே பல கிராமங்களுக்குச் சென்று மக்களுக்கு மதுபானம் அருந்தப் பணம் கொடுத்தான். ஓரிரு கிராமத் தலைவர்களுக்குப் பணம் கொடுத்துத் தன் பக்கம் இழுத்துக் கொண்டான். இரண்டு கிராமங்களில், சைக்கியாவின் கட்டளைப்படி, ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று இருபது ரூபாய் கொடுத்தான். தேவ்டா, கூஞ்சி கிராமங்களில் சஞ்சீவ் பருவா நியமித்திருந்த ஏஜெண்டுகள் ஒவ்வொருவருக்கும் முன்னூறு ரூபாய் கொடுத்து வேலையையே தலைகீழாக்கி விட்டான் போக்ராம். ஒரே இரவில் தேர்தல் சூழ்நிலை மாற்றங் கண்டுவிட்டது.

தேர்தல் முடிந்து விட்டது. சுபோத் சைக்கியா ஆயிரத்து நூற்று நாற்பத்தைந்து ஓட்டுகளில் வெற்றி யடைந்துவிட்டார். சோணுய் பரியாவின் அமளிதுமளி அமைதியாகி விட்டது. சூழ்நிலை பழைய படி வந்த போதிலும் மக்கள் சிக்கலான பிரச்சினைக்குக் காரணமாகி விட்டனர். சுயநலம் அவர்களைக் கவ்விக் கொண்டது. வேலை செய்வதைவிட வம்பளப்பதில் அவர்கள் அதிக சுகத்தைக் காண ஆரம்பித்து விட்டனர். மக்களின் அறிவின்மையைப் பயன்படுத்திக் கொள்ள போக்ராம் போன்றவர்களின் பிரிவு ஒன்று கிளம்பிவிட்டது. முறிந்த சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடந்த போக்ராம் பதினைந்தே நாட்களில் பெரிய மனிதனாகி விட்டான். தேர்தல் பிரச்சாரத்திற்காக

சுபோத் சைக்கியா கொடுத்திருந்த எண்ணூறு ரூபாய் அவனுடைய சொந்தச் சட்டைப் பைக்குள் வந்துவிட்டது. இரண்டு இடங்களில் தியேட்டர் ஹால் அமர்த்தித் தர அவன் சைக்கியாவிடமிருந்து ஆயிரம் ரூபாய் வாங்கி வைத்துக்கொண்டிருந்தான். அதுவும் சொந்தப் பணமாகி விட்டது.

பங்குனி மாதம் ஆரம்பிப்பதற்கு முன்னதாகவே பன்னிரண்டாயிரம் ரூபாய்க்கு ஒரு கண்டிராக்ட் போக்ராமிற்குக் கிடைத்துவிட்டது. வேலை துவங்குவதற்கு முன்னுலேயே அவனுக்கு ஆருயிரம் ரூபாய் 'ரனிங்—பில்' அளிக்கப்பட்டது.

கண்ணிமைப்பதற்குள் போக்ராம் செல்வந்தனுகிவிட்டான். நன்னெறியை நழுவ விட்டுவிட்டோம் என்ரு, நம் சுயமரியாதையை இழந்து விட்டோம் என்ரு அவனது நினைவிற்கு வரவேயில்லை.

சாதாரணத் தேர்தலின் பலாபலன் பேதை வாசந்தியையும் பாதிக்காமலில்லை. தேர்தல் காரணமாக தனஞ்சயன்-போக்ராம் இருவரும் 'கர்ணுர்ஜுன'ராக மாறிவிட்டார்கள் என்பதை அவளும் புரிந்துகொண்டுவிட்டாள்.

இளவேனில் சோனுய் கிராமத்தின் இயற்கை நங்கை முழு மகிமையுடன் பிரகாசித்தாள். கிராமம் மறுபடியும் நவயௌவனத்தை அடைந்துவிட்டது. குயில், மயில் இவற்றின் குரல்களில் காதல் ஒலி கேட்டது. சிவப்பு மலர்கள் குலுங்கப் பசும் போர்வையுடன் மரங்கள் காட்சியளித்தன. பார்ப்பவர்களுக்குச் சோனுய் பரியா கிராமம் அமராவதியின் பூங்காபோல் காட்சி யளித்தது. நிலமகள் மகிழ்ச்சியால் புளகமடைந்தாள். இயற்கை, படைப்பின் ரகசியத்தால் செழித்துக் காணப்பட்டது. புதுமணப் பெண்டிர் பலர் தாய்மையை அடைந்து காணப்பட்டனர். இந்த நேரத்தில் எத்தனை அன்பு உள்ளங்கள் ஒன்ருேடொன்று இணைந்திருக்கின்றனவோ! மைனுவின் இனிய குரல் எத்தனை இளம் உள்ளங்களை வேதனைக்குள்ளாக்கியதோ!

உழவர்கள் மாரிக்காலத்தை வரவேற்றனர். ஏரின் முனையில் சீதாதேவியின் அருள் சேர்ந்துவிட்டது! செழிப்பான நிலத்தில் விளைச்சல் கொழிக்க ஆரம்பித்தது. வேகமாக வீசும் காற்றும் பயிர்களுடன் சேர்ந்து பசுமையான மலைச்சாரலில் ஆடிப்பாடிக் களிப்படைந்தது. சோனுய் பரியா தன் எதிர்காலத்தைப் பற்றி வண்ணக் கனவு கண்டது.

அறுவடைத் திருவிழாவின் போது வாசந்தி கேட்ட பாட்டு நினை

விற்கு வந்தது : 'கண்ணுடி போன்ற மனம் என்ருல் எப்படியிருக்கும்? கைநிறைய நீரை அள்ளி விழாமல் வைத்தாலும் வைத்திருப்பேன். ஆனுல், என் மனத்தை என்னுல் வைத்திருக்க முடியாது...'

அவளுடைய உள்ளம் துடித்தது. இனி தனஞ்சயன் அவளுடைய வீட்டிற்கு வரவே மாட்டான். போக்ராமை அவன் அவமானப்படுத்தியதாக எல்லோரும் சொல்லிக் கொள்கிருர்கள். இரவில் கவலை அவளை இன்னும் அதிகமாக கவ்விக் கொண்டது. தன் சகோதரன் யாரிடமோ சொல்வதை அவள் கேட்டிருந்தாள்— 'சுபோதியிடம் சொல்லி ஒரு சர்க்கார் ஆஸ்பத்திரியைத் திறந்து வைத்தால் போதும். தனஞ்சயனுடைய பெருமை தவிடு பொடியாகி விடும். மற்ற வைத்தியர்கள் வந்ததும் இவனுடைய ஹோமியோபதி இருக்குமிடமே தெரியாமல் பறந்து விடும்...பிறகு வந்த வழியைப் பார்த்துக்கொண்டுதான் போகவேண்டும்.'

## பதினென்று

போக்ராம் எடுத்துக் கொண்ட வேலை விரைவில் முடிந்து விட்டது. அவன் நிரம்பப் பணம் சேர்த்து விட்டான். அவனுடைய வேலையின் பரபரப்பு குறைந்து விட்டது. தான் வசிக்கும் வீட்டைச் செப்பனிட மாரிக்காலம் நல்ல சமயமல்ல. இரண்டு வண்டித் தேக்கு மரக் கட்டை மட்டும் வாங்கப்பட்டிருந்தது. இருக்கும் அறையையும் பக்கத்துப் பிரிவையும் இடித்து நல்ல பங்களாவாக அமைக்கத் திட்டமிட்டான். குளிர் காலத்தில் இந்த வேலையில் அவன் ஈடுபட்டு விடுவான். அவனுக்கு வேறு ஒரு பிரச்சினையும் கிடையாது. தங்கையை நல்ல இடமாகப் பார்த்து திருமணம் செய்து கொடுத்து விட்டால் போதும்; அவனுடைய வேலை தீர்ந்து விடும்.

வாசந்தி இத்தனை நாட்களாக எதைப்பற்றி கவலைப் பட்டாளோ, அதுவே நடந்து விட்டது. ஒரு நாள் மிகுந்த கோபத்துடன் போக்ராம் வீட்டிற்குள் நுழைந்தான். அவனுடைய கோபத்திற்குக் காரணம் என்ன என்று மனைவி கேட்டாள். அவனுடைய கோபம் இன்னும் அதிகரித்தது.

"தரு, இனி உங்கள் எல்லோரையும் நம்ப முடியாது போலிருக்கிறது. பருவமடைந்த பெண் மடியில் கட்டிக் கொண்டிருக்கும் நெருப்பு என்று சொல்கிறீர்கள் ஆனுல்..."

"என்ன சொல்கிறாய்? தெளிவாகத்தான் சொல்லேன்."

"நான் கேள்விப்படுவதெல்லாம் என்ன?"

"என்ன கேள்விப்படுகிறாய்?"

"நல்ல குடும்பத்துப் பெண்ணை ஒரு பரதேசிப்பயல் சீண்டுவதா? நீங்கள் எல்லோரும் கண்களை மூடிக்கொண்டா இருந்தீர்கள்? தெரியும், இது பெண்களின் சாமர்த்தியம்!"

"எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!"

"புரிந்தாலும் புரியாததுபோல் பாசாங்கு செய்வீர்கள். பெண்களின் சுபாவமே அப்படித்தான். அந்த நாய் தனஞ்சயன் என் தங்கையுடன் நதிக்கரையில் பேசிக்கொண்டிருந்தானும். சம்பக் மேதியின் பார்வையில் இருவரும் பட்டுவிட்டார்கள். ஹரி சிந்துக் குழுவினர் நிலத்தை அளக்க அந்தப் பக்கம் வந்தார்களாம். இவர்களிருவரும் பேசிக்கொண்டிருந்தது அவர்களுக்குக் கேட்டதாம். இதுவரை கண்களை மூடிக்கொண்டு, காதுகளில் பஞ்சடைத்துக் கொண்டா நீங்கள் எல்லோரும் இருந்தீர்கள்? ஒன்றுமே தெரியாத குழந்தைபோல் இவள் நடிக்கிறாள்!"

"பிறர் சொல்வதை ஏன் நீ நம்புகிறாய்."

"சொல்லுவார் சொன்னாலும் அது உண்மையா பொய்யா என்று கூடச் சிந்தித்துப் பார்க்க எனக்கு அறிவில்லையா? அதற்காகத்தான் அவளுக்குத் திருமணம் செய்து விடவேண்டும் என்று நீ சிபாரிசு செய்தாயோ? பெண் காதலிக்கிறாள் அதை நீ வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாயா? மானுக்குப் புலியின்மேல் ஆசையாம்—கதை இப்படித் தானிருக்கிறது.'

தருலதாவிற்குப் பதில் பேசத் தைரியம் வரவில்லை. நேற்றிரவும் அவன் 'ருத்ரன்' கோலத்தில் தானிருந்தான். குழந்தைகளும் பயத்தால் நடுங்கிக்கொண்டிருந்தன. வாசந்தி இரவு முழுதும் தூங்கவே இல்லை.

காலையில் எழுந்ததும் அவள் தாயிடம் எல்லா விஷயத்தையும் கூறினாள். ஆனால் தாய் அதை ஆமோதிக்கவில்லை. சுமார் நாற்பதாண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சி அவளது நினைவிற்கு வந்தது. திடீரென்று போக்ராமின் தந்தைமீது அவளுக்குச் சொல்லொணாத பரிவு ஏற்பட்டு விட்டது. கானகத்தில் திரியும் மானின் பேரில் காலை இளங் கதிரவனின் கிரணங்கள் பட்டுவிட்டதைப் போன்ற புத்துணர்ச்சி! சில தினங்களுக் குள்ளாகவே அன்புப் பிணைப்பில் அவள் தன்னைப் பிணைத்துக் கொண்டுவிட்டாள். அவருடைய மடியில் தலையை வைத்துக்கொண்டு ஆனந்தக் கண்ணீர்

உதிர்ப்பது வழக்கம். சோணுய் நதியைக் கடந்து அவளும் தன் கணவனும் செல்வதுண்டு. சுகமான இல்வாழ்வை அங்கேதான் அவள் துவக்கினுள். அப்போது சோணுய் பரியா கிராமம் அன்பின் பெருமையை உணர்ந்திருந்தது. மக்களும் அன்பைப் பெருமதிப்புடன் போற்றி வந்தனர். ஆனுல் இன்று எப்படி இருக்கிறது நிலைமை? மகன் தன் தாய்க்கெதிரே தன் சகோதரியைக் கண்டபடி திட்டுகிருன். அன்பிற்கு இருந்த மதிப்பை அது இப்போது இழந்து விட்டது. இன்றைய மனிதர் அன்பைத் தந்திரம் என்றுதான் நினைக்கின்றனர்.

அவள் சற்று நிதானத்டன் சிந்தித்து மகனிடம் கூறிஞள், "இருந்தாலும் தனஞ்சயனிடம் என்ன குறை இருக்கிறது? அவனைப் போன்ற தகுந்த இளைஞன் எனக்கு வேறெவரும் இருப்பதாகத் தெரியவில்லை. இவர்களிருவருக்கும் சரியான பொருத்தம்தான். இதில் பெண்ணின் குற்றம்தான் என்ன? இந்த வயதில் மனம் சற்று நெகிழ்ந்து போவது சகஜம் தானே!"

"அம்மா! நீயே இப்படிப் பேசிஞல், இனி நாட்டின் கதி என்ன வாகும்? தனஞ்சயனை நான் உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை நன்கறிவேன். அவன் சாமர்த்தியக்காரன். பெண்ணை நாசப்படுத்தக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிருன் அவன். நம் குலத்தவர் அவனுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வதா? அவனுடைய சாதி, குலம், கோத்திரம், வீடு, வாசல் எது பற்றியுமே நமக்கு ஒன்றுமே தெரியாது. தன்னை அந்தணன் என்று சொல்லிக் கொண்டால் மட்டும் போதுமா? பாப்சிலா கிராமத்தில் வசிப்பதிலிருந்தே அவன் பேரில் எனக்குச் சந்தேகம்தான். தெரிந்தே பெண்ணைப் பாழுங் கிணற்றில் தள்ள நான் சம்மதிக்க மாட்டேன்." தாய் பேசாமலிருந்தாள். மகன்தான் என்ருலும் அவளுடைய பேச்சு அங்கே செல்லாது. பெண்ணிற்கு எப்போதுமே சுதந்திரம் கிடையாது. சிறு வயதில் தாய் தந்தையரிடம், பிறகு கணவனிடம், முதுமையில் மகனிடம்—என்று பிறருடைய ஆட்சியின்கீழ் பெண்கள் இருந்தாக வேண்டும். போக்ராமின் விருப்பத்திற்கு மாருக, அவள் ஏதும் செய்ய இயலாதவளாக இருந்தாள். ஆயினும் அவன் ஏதாவது நல்ல வரனைத் தேடி வந்தால், அதையும் நன்கு ஆராய்ந்து பிறகு தான் ஒரு முடிவிற்கு வரவேண்டும். தனஞ்சயன் அவளைச் சீண்டியது உண்மையாஞல் அவர்களிடம் இவ்விதம் அன்பு இயற்கையாக வளர்ந்திருக்காது.

மறுநாள் போக்ராம் ஒரு நல்ல மாப்பிள்ளையைத் தேடிக்கொண்டு

வந்திருப்பதாகக் கூறினான். கணக்கர் வேலை பார்க்கும் அவனுக்குத் தாய், தந்தை, அண்ணன், தம்பி எல்லோரும் இருந்தனர். நல்ல குடும்பத்துப் பிள்ளை. மளிகைச் சாமான் கடைகள் இரண்டும், நிலபுலன்கள் கொஞ்சமும் இருந்தன. தந்தை சூப்ரெண்டெண்டாக வேலை பார்த்துவிட்டுப் பென்ஷன் பெற்று வந்தார்.

யார் என்று கேட்காமலேயே சுஜலாவிற்கும் தருலதாவிற்கும் தெரிந்து விட்டது. சூப்ரெண்டெண்ட் என்றும் அவருடைய மகன் என்றும் சொன்ன மாத்திரத்தில் இவர்தான் மதுரா நினைவிற்கு வரும். மோராபூரிலிருந்து சுமார் நான்கு மைல் தூரத்தில் அவர்களுடைய வீடு இருந்தது. சோனுக்கு இந்தப் பக்கத்தில் இருந்த அந்தக் கிராமத்திற்கு தராங்கயால் என்று பெயர். சோனுப் நதி அங்கும் ஓடுகிறது. மோராபூர் வழியாகவும் அங்கு செல்லலாம், படகிலும் செல்லலாம்.

பழைய காலமாக இருந்தால், சூப்ரெண்டெண்ட் பகீரதனின் மகன் மதுரா, போக்ராம் போன்றவனின் தங்கையை ஒருபோதும் மணக்கச் சம்மதித்திருக்க மாட்டான். பகீரதன் பெருமதிப்புள்ள மனிதன். இருப்பினும் இப்போது போக்ராமும் தனவந்தனாகி விட்டான். எனவே பகீரதனுடன் திருமணத் தொடர்பு கொள்வது ஒருபடி மேல் ஏறிப் போவதுபோல் என்று போக்ராம் கருதினான். இப்போது போக்ராம சற்று அகந்தை கொண்டு விட்டான். இப்போதெல்லாம் கௌரவம், மதிப்பு என்பது பற்றியெல்லாம் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்து விட்டான். சூப்ரெண்டெண்டின் வீட்டுடன் சம்பந்தி உறவு என்றால் இதை மிகவும் பெருமையாக போக்ராம் கருதினான். பகீரதன் குல கௌரவமும் மதிப்பும் உள்ள மனிதன். அவனுடைய தந்தையின் நாட்களில் அவர்களுடைய வீட்டில் இரண்டு யானைகள் இருந்ததாக எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள். இன்றும் 'யானை கட்டியிருந்த வீடு' என்றுதான் மக்கள் அவர்களது வீட்டைக் குறிப்பிடுவது வழக்கம். போக்ராம் தான் வியாபாரம் செய்து வந்த நாட்களில் பகீரதன் வீட்டிற்குள் நுழையக் கூடப் பயப்படுவான். ஆனால் அதிருஷ்ட தேவதையின் துணையினால் பகீரதன் தன் மகனுடைய திருமணத்தைப் பற்றித் தானே குறிப்பிட்டுக் கொண்டு போக்ராம் வீட்டிற்கு வந்தான். இதைவிடப் பெரிய கௌரவம் வேறென்ன இருக்கிறது?

ஆனி மாதத்து முதல் தேதியன்றே மாப்பிள்ளை வீட்டார் பெண்ணுக்கு மோதிரம் அணிவிக்க வந்தனர். தாய், தந்தை, சகோதரி மூவருமே வந்தனர். மாப்பிள்ளை வரவில்லை. போக்ராம் எப்படியோ

தந்திரமாக மாப்பிள்ளைக்கு வாசந்தியைக் காண்பித்து விட்டான். ஆனால் இதுபற்றி வாசந்திக்குத் தெரியவே தெரியாது.

அவர்கள் உள்ளே நுழைந்ததுமே வாசந்தியின் இதயம் படபட வென்று அடித்துக்கொண்டது. அவள் நல்ல புடவையை உடுத்திக் கொள்ள விரும்பவே இல்லை. அவர்கள் எதிரே வர முடியாது என்று அவள் முன்னமேயே கூறிவிட்டாள். தாய் அவளுக்குச் சமாதானம் சொன்னாள் : "வெட்கப் படுவதேன் மகளே! எங்களை வீணாக ஏன் வருத்தத்தில் ஆழ்த்துகிறாய் ?"

"பெண்ணிற்கு மனம் என்று ஒன்று கிடையாதா ?" என்று கேட்டாள் அவள்.

தாய் கேட்காதவள்போல இருந்துவிட்டாள். அண்ணி தருலதாவும் அவளுக்கு அறிவுரை கூறிப் பார்த்தாள். "வாசந்தி பெண்ணாய்ப் பிறந்தால் பெரியவர்கள் சொற்படி நடந்துதானாக வேண்டுமம்மா. தாயின் பேச்சையே கேட்க மறுத்தால், உன்னை இத்தனை நாட்கள் சீராட்டிப் பாராட்டி வளர்த்ததற்கு அவர்கள் கண்ட பயன் தான் என்ன ? இளம் பெண் பிறருடைய வீட்டு மருமகளாகப் போவதற்கு முன்பு 'மாட்டேன்' என்று பிடிவாதம் பிடிப்பது இயற்கைதான். அதற்காகப் பிறந்த வீட்டிலேயே முதுமைப் பருவத்தைக் கழித்து விடுவதா என்ன ? என் தாய் தந்தையரை விட்டுவிட்டு நானும் மற்றொரு வீட்டிற்கு வந்திருக்கிறேனா இல்லையா, பார் ?" இதைக் கேட்டு வாசந்தி மிகவும் வருத்தமடைந்தாள். "அண்ணி ! உனக்குக்கூட என் மனத்தில் இருப்பது தெரியாதா ?" என்று கேட்டாள்.

தரு பதிலளித்தாள். "இதெல்லாம் வயதின் கோளாறம்மா. கன்னிப் பெண்ணிற்கு யாரையாவது ஓரிருவரைப் பிடிப்பது இயற்கைதான். உன் உள்ளமும் சில நாட்கள்வரையில் ஏதோ சேற்றில் அமிழ்ந்து விட்டது என்று வைத்துக் கொள். அவ்வளவுதான் !"

வாசந்தி பெரிய சிக்கல்களில் மாட்டிக்கொண்டு விட்டாள். 'தாய், அண்ணன், அண்ணி இவர்களை மதிப்பதா, அல்லது சோனாய் பரியா மக்களுக்கு அறிமுகமாகாத தனஞ்சயனுக்காகக் காத்துக் கிடப்பதா ? காத்துக்கிடப்பதால் அவளுக்கு நஷ்டம் வந்துவிடுமா ? அவன் உண்மையாகவே கபடமாக இவளுடைய உடலைச் சுவைக்க விரும்பினானா ?'

சிறிது நேரங் கழித்து அவளுடைய அண்ணன் வந்து கேட்டான், "வாசந்தி, நீயும் என் கௌரவத்தைக் குலைக்க விரும்புகிறாயா ? ஒரு தடவை என் முகத்தைப் பார் ! என் கண்மணியல்லவா நீ ?" வீட்டி

லுள்ளவர் எல்லோரும் தன்னிடம் எவ்வளவு அன்பு வைத்திருக்கின்றனர் என்பதை அப்போதுதான் அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. அவர்களை நினைத்த மாத்திரத்தில் அவளது மனம் நெகிழ்ந்து விட்டது. 'போக்ராம் இல்லாவிட்டால், இந்த வீட்டின் நிலைமை என்னவாகியிருக்கும்!'—என்றெல்லாம் அவள் நினைக்கத் துவங்கினாள். போதிய அளவு சம்பாதிக்க முடியாதபோது கூட அவன் எவ்வளவு கஷ்டப்பட்டுக் குடும்பத்தைக் காப்பாற்றினான்! அவனுக்குப் பதிலாக வேறு யாராவது வீட்டில் இருந்திருந்தால், அவளை எந்த வீட்டிலாவது வேலைக்காரியாக அனுப்பியிருப்பார்கள்!

கண்ணீரை அப்படியே விழுங்கிவிட்டு அவள் மாப்பிள்ளை வீட்டாருக்கு முன் வரச் சம்மதித்து விட்டாள். தருலதா அவளை அழகாக அலங்கரித்தாள். வெற்றிலைப் பாக்குத் தட்டுடன் அவள் தாய், அண்ணி இருவருடனும் வீட்டு முன் ஹாலுக்கு வந்தாள்.

பெண்ணைக் கண்டதும் எல்லோருக்குமே பிடித்துவிட்டது. ஓரிரு கேள்விகள் கேட்டுவிட்டு மதுராவின் தாய் தந்தையரும் மகிழ்வுற்றனர். ஆனால் விரலில் மோதிரத்தை அணிவித்தவுடனேயே வாசந்தி அழுதுவிட்டாள். மாப்பிள்ளையின் தாய் இதைத் தவறாக நினைக்கவில்லை. "மகளே! இதில் வருத்தப்பட என்ன இருக்கிறது? கன்னிப் பெண்ணும் தேவியும் நிரந்தரமாக ஓரிடத்தில் இருக்க முடியுமா? ஒரு நாள் அயல் வீட்டிற்குச் செல்பவள்தானே? இரண்டே நாட்களில் நாங்களெல்லோரும் உனக்கு வேண்டியவர்களாகிவிட மாட்டோமா?" என்று கூறினாள் அவள்.

வாசந்தி உள்ளே சென்று விட்டாள். உள்ளிருந்தபடியே மாப்பிள்ளையின் தந்தை கூறியதை அவள் கேட்டுக்கொண்டிருந்தாள்—"உனக்கு ஒரு தங்கை இருக்கிறாள் என்பது எனக்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே தெரியும். கன்னிப் பெண்ணும் தறிப் புடவையும் யாருக்குச் சொந்தமோ, அவர்களுக்குத்தான் கிடைக்கும் என்பார்களே அது உண்மைதான். மதுராவிற்கு நாங்கள் எத்தனையிடங்களில் பெண் பார்த்தோம் தெரியுமா?..."

# பன்னிரண்டு

தனஞ்சயனுக்கு முதலில் ஒன்றும் தெரியாது. சென்ற வாரம், கிராமத்தில், நோயாளிகளைப் பார்ப்பதில் முனைந்திருந்தான். மாரிக் காலத்துத் துவக்கத்திலேயே மழை அதிகமாகப் பொழிந்து தள்ளி விட்டது. சோனாய் நதியில் வெள்ளப் பெருக்கு ஏற்படவில்லை. ஆனால் குளம், குட்டை, ஏரி, வயல் என்று எல்லா இடங்களும் நீரால் நிரம்பிவிட்டன. சோனாய் பரியா மக்களுக்கு மீன் பிடிக்க வாய்ப்புக் கிடைத்துவிட்டது. வலையை விரித்து மக்கள் மீன் பிடிப்பதில் முனைந்தனர். எங்கும் நிரம்பியுள்ள நீர் சிறிது வற்றவே கிராமம் முழுதும் துர்நாற்றம் வீசத்துவங்கியது. கொசு, ஈ, புழு-பூச்சிகளின் அரசாட்சி ஆரம்பித்துவிட்டது. வீட்டில் தரை நனைந்து விட்டதால், காய்ச்சலும் சுரமும் மலியத் துவங்கின. முறைக்காய்ச்சல், சன்னி என்று நோய்களால் மக்கள் பீடிக்கப்பட்டனர். காலராவினால் கிராமம் நடுங்க ஆரம்பித்தது. நதியின் அக்கரையில் மக்கள் ஏராளமாக மடியத் துவங்கினர்.

தனஞ்சயன் தன் லட்சியப்படி மக்களுக்கு மனம் ஒன்றித் தொண்டாற்றினான். வாசந்தியைப்பற்றி விசாரிக்க அவனுக்கு நேரமில்லை, அவன் கடவுளை நம்பியிருந்தான். லக்ஷ்மீபுரியில் பூகம்பத்தின்போது சந்தித்த சுவாமிஜி கூறியது போல், மக்களுக்குத் தொண்டாற்றினால் மகாதேவனின் அருள் தானே கிட்டும் என்று அவன் நம்பிக்கை கொண்டிருந்தான்.

ஆனால் வாசந்தியைப் பற்றிய எல்லா விவரங்களையும் யாரோ சொல்லக் கேட்ட அவன், பனியில் சிக்குண்ட தானி மரம் போல் ஸ்தம்பித்து நின்று விட்டான். அவனுடைய லட்சியம், நம்பிக்கை. சேவை, உற்சாகம் எல்லாமே தவிடுபொடி யாகிவிட்டன. சாபுக்தரா, தேவ்ரா ஆகிய இரண்டு கிராமங்களிலும் காலரா தன் ஆட்டத்தைக் காண்பித்துவிட்டு இப்போது அமைதியடைந் திருந்தது. கூஞ்சியில் நால்வர்தான் நோய்வாய்ப்பட் டிருந்தனர். வேறொருவரும் உடல் நிலையில் பாதிக்கப்படவில்லை. வாசந்தியைப் பற்றிக் கேள்வியுற்ற அவனால் அவளைப்பற்றி அதிகமாக ஏதும் சிந்திக்க முடியவில்லை. ஆயிரக்கணக்கான மக்களைப் போன்று தானும் ஒரு சாமானியமான சக்தியற்ற மனிதன்தான் என்று அவன் கருதினான். ஹோமியோபதி, ஆயுர்வேதம் இவற்றில் அவனுக்குள்ள அறிவு இந்த மாபெரும் நோய்களைத் தீர்க்கப் போதாது என்று நினைத்தான்.

முயற்சிப்பதிலும், சேவைசெய்வதிலும் மனிதன் மனத்திருப்தியடைய லாம், அவ்வளவுதான். காலனுக வந்துள்ள கொடும் நோயை அவனுல் எப்படி மாய்க்க முடியும்! நேர் வழியில் சென்று கொண் டிருந்த மக்களைப் புதிய சூழ்நிலை மாற்றி நேர்மையற்ற வழிக்கு இழுத் துச் செல்கிறது. திடீரென்று கிடைத்த ஒரு வாய்ப்பினுல் அகந்தை யடைந்த இன்றைய செல்வந்தனுன போக்ராவையும் அவனுல் பழைய வழிக்குக் கொண்டுவர முடியாது.

வாசந்தியின் பேரில் அவனுக்குக் கோபமோ வெறுப்போ ஏற்பட வில்லை. ஒரு விஷயம்தான் அவனுக்கு அடிக்கடி தோன்றிக் கொண் டிருந்தது. முடிவில் பாப்சிலாவை விட்டே தான் வெளியே செல்ல நேர்ந்துவிடுமோ? பஞ்சகாலத்தில் தலங்குக் கட்டத்தின் மீது பாலம் அமைக்கப்படுமா இல்லையா? மக்கள் காப்டன் காரியாலயத்தின் வழியாக சோறுப்பாரியாவிற்குச் செல்வார்கள். அப்போது அங் குள்ள மக்களின் மனம் இன்னும் அதிக மாற்றமடையும்! மன நிறைவை யடையாத ஒரு வியாபாரியின் போக்கு மக்களைக் கவ்விக் கொண்டுவிடும். களங்க மற்ற அன்னையே இவர்கள் கானகத்திற்கு அனுப்பி விடுவார்களோ!'

எந்தப் பெண்ணை அவன் தனக்குரியவள் என்று நினைத்தானே, எவளுடன் சிறு உலகத்தைப் படைத்துக்கொண்டு அமைதியாக வாழ நினைத்தானே, எவளுடைய இனிய கனவுகள் இளவேனிற் காலத்துக் குயிலின் குரலாய் இழைந்தனவோ, அவள் இனி வேறு ஒருவனுக்குச் சொந்தமாகிவிடுவாள்! இந்தக் கவலையில் ஆழ்ந்த அவனுக்குப் பகல் ஒளி மட்டும் தைரியமிழக்கச் செய்யவில்லை. இர வின் இருள் கூட அவனைச் சூனியமாக்கி விட்டது. இரவில் கத்தும் ஆந்தை, தவளை இவற்றின் குரலில் கூட அவன் தன் வாழ்வின் சிதைந்த அமைதியைக் கண்டு பயமுற்றுன். அவன் வெகு நேரம் சிந்தித்துப் பார்த்தான். படுக்கை அவனுக்கு முட்களாலானது போலிருந்தது. இரவு முழுவதும் திரும்பித் திரும்பிப் புரண்ட வண்ண மிருந்தான். வாசந்தி நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டாள் என்று அவன் ஒருபோதும் நினைக்கவில்லை. அவனுடைய கண் களுக்கு முன்பு அவளுடைய உருவம் வந்தது. அவன் உள்ளம் பூரித்துப்போயிற்று. இரவு முழுதும் சிந்தித்து முடிவிற்கு வந்தால், அது உசிதமானதாகத்தா னிருக்கும் என்று அவன் நம்பினுன். இரவின் இருளில் வரும் உணர்ச்சிதான், தெளிவற்ற சிந்தனைக்குத் தெளிவு தருகிறது. சிந்தனைகள் உருப்பெற்றுப் பிறகு காலைவேளை யில் பனித்துளிகளைப் போன்று ஓய்வு பெற்று விடுகின்றன. வெயில்

அவற்றை நீராவியாக்கிக் கொண்டு சென்று விடுகிறது. ஆனல் ஆதவனின் முதல் கிரணங்கள் தனஞ்சயனின் உள்ளத்திற்கு ஊக்க மளித்தன. அவனுடைய கோட்பாடுகள் இரவில் சிந்திக்கப்பட்ட எண்ணங்களைப் போன்று தெளிவாக இருந்தன. பகலின் உண்மை யால் இரவின் சங்கல்பத்தை நீராவியாக்க முடியவில்லை. அவன் திடமான சங்கல்பத்துடன் எழுந்தான். ஒரு நாள், தக்க தருணம் பார்த்து அவளை 'டனுவா' கட்டத்திலிருந்து அழைத்துக்கொண்டு வந்துவிட வேண்டியதுதான். இன்று முக க்ஷவரத்திற்குப் பிறகு நல்ல உடைகளை அணிந்துகொண்ட தனஞ்சயன் அடிமேலடி வைத்துக் கிழவி ரூபாவின் வீட்டை நோக்கி நடந்தான். கடைசி முறையாக அவன் தன்னையே ஒரு கேள்வி கேட்டுக்கொண்டான். 'அவளை அழைத்துக்கொண்டு வந்துவிட்டால் எனக்கு கெட்ட பெயர் உண்டாகுமா?' திறமையுடன் அவனே அதற்குப் பதிலும் கூறிக்கொண்டான். 'இந்த மாவட்டத்தில் பெண்ணைக் கடத்திக் கொண்டு செல்வது என்பது சாமானியமான காரியம். இதில் ஆண்மை தெரிகிறது, அன்பின் துடிப்பு புலப்படுகிறது. சொல் லொண்ணு போதையுணர்ச்சி பரிமளிக்கிறது. பல பெண்களுடன் நுனிப்புல் மேய்வது போன்று தொடர்பு கொள்வதுதான் இந்த இடத்தில் அவமதிப்புக்குக் காரணமாகிறது!'

ஒரு கைம்பெண், தன் மகள் வீட்டை விட்டு ஓடிவிட்டால், மக ளின்றி வீடு வெறிச்சென் றிருக்கிறதே எனும் காரணத்தால்தான் வருந்துவாள். வேறெங்காவது அவள் சென்று விட்டால், தன் இளமையைக் காத்துக் கொள்ளத்தான் சென்றிருக்கிறுள் என்று மக்கள் கருதுவது வழக்கம். அறுவடைத் திருவிழாவிலும், கிராம நடன விழாக்களிலும் இம்மாதிரி நிகழ்ச்சிகள் நடப்பது இயற்கை. இம்மாதிரி நிகழ்ச்சி பற்றி தேவைக்கு மீறி ஒருவரும் பேச மாட்டார்கள். சோணுப் பரியாவில் மீன்கள் முட்டையிடும் காலத்தைப் போல் இதையும் ஒரு பருவகாலத் தேவை என்று மக்கள் கருதி வந்தனர். ஆகையால் வாசந்தியை அழைத்துக் கொண்டு வந்து விடுவதால் மக்களிடையே அவனுடைய மதிப்புக் குறைந்து விடாது என்பது தனஞ்சயனுடைய நம்பிக்கை. அவன் மீது மக்கள் கொண்டுள்ள பக்தியும் குறையாது. ஆனல் புதிய தனவான் போக்ராம் சற்று அகந்தை குறைந்து காணப்படுவான். இது மக்களுக்கு மிகவும் பிடிக்கும்—எப்போது பார்த்தாலும் மக்கள் நம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்றே எண்ணிக் கொண்டி ருந்தால் நமது சுதந்திரமே பறி போய் விடும். மக்கள் என்ன நினைப்

பார்கள் என்றே யோசித்துக் கொண்டிருப்பவரால் ஒரு போதும் சுகமாக வாழ முடிவதில்லை. சூழ் நிலை தனஞ்சயனை மாற்றி அமைத்து விட்டது. அவன் தன் ஆத்ம தரிசனம் பெற்று விட்டான். 'யார் என்ன நினைத்தாலும் சரி, பிறர் பக்தி வைத்தால் என்ன, வைக்கா விட்டால் என்ன, நானும் யாரையும் மதிக்கப் போவதில்லை. அவ்வளவுதானே! ஆனால் எனக்கு வாசந்தி வேண்டும். வாசந்தியை மையமாகக் கொண்டு எந்த எதிர்காலம் அமைந்தாலும், அதைச் சிதைக்க யாருக்கும் உரிமை கிடையாது. மானம், அவமானம், கீர்த்தி, அபகீர்த்தி, இவை பற்றி மனிதனின் எண்ணம்...'

கிழவி ரூபாவிடம் அவன் எல்லாவற்றையும் எடுத்துரைத்தான். அவள் பிரமித்துப் போய்க் கேட்டாள், "தன்! மகனே! கடைசியில் நீயுமா...?"

அவன் பதிலுரைத்தான்—"ஆமாம் அம்மா! உண்மையில் நானே தான் அப்படித் துணிந்து விட்டேன். வேறுவழியில்லை. இல்லா விட்டால் வாழ் நாள் முழுதும் வாசந்தி மகிழ்ச்சியோடிருக்க முடியாது. என் நிலையும் அப்படியேதான்."

தனஞ்சயனின் கண்ணீர் நிரம்பிய கண்களில் கிழவிக்குத் துக்கம் நிறைந்த செய்தி காட்சி யளித்தது. "உன்னைப் போன்ற காளை கூடவா இப்படிப் பெண்ணைக் களவாட வேண்டும் அப்பா! உலகம் உன்னைப் பற்றிக் கேள்விப் பட்டால் 'சிவ சிவா' என்று காதைப் பொத்திக் கொள்ளும்" என்றாள் கிழவி.

"ஆமாம் சில நாட்கள்வரை உலகம் அப்படித்தான் செய்யும். எதையும் ரொம்ப காலம் நினைவு வைத்துக் கொள்ளும் சக்தி மக்களிடம் கிடையாதம்மா. வெகு விரைவில் நான் பழைய தனஞ்சயனாகி விடுவேன். ஆனால் இப்போது மானம், மரியாதை, கௌரவம் என்று பார்த்துத் தயங்கிக் கொண்டிருந்தால், இந்தத் தவறு என் வாழ்க்கையையே அழித்து விடும். நானும் ஒரு சாதாரணமான மனிதன்தானே. இங்கு வாழ்ந்து வருவதால், எல்லா விதத்திலும் இங்கு வாழும் மக்களைப் போலவே ஆகி விட்டேன். மக்கள் எனக்கு மிக உயர்வான இடம் கொடுத்துத் தவறு செய்கின்றனர். என்னைப் பிறர் உயர்வாகக் கருதுவதே என் கஷ்டத்திற்குக் காரணமாகி விட்டதம்மா. இறைவன் ஒருவர்தான் எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடம். மனிதனால் அப்படி யாக முடியாது."

கிழவிக்கு அதிகமாக ஒன்றும் புரியவில்லை. அவள் கூறினாள்: "தன்! எதற்கும் ஒரு முறை மறுபடியும் யோசித்துப் பார் மகனே. நீ வயதில் சிறியவன். அதனால்தான் சொல்கிறேன். ஒரு வேளை நீ செய்வது தவறாக இருக்கலாமல்லவா?"

தனஞ்சயன் பேசினான். "நான் தவறு செய்கிறேன் என்று ஒரு போதும் என்னால் நினைக்க முடியாதம்மா. நீங்களே யோசித்துப் பாருங்கள். ஒவ்வொரு மனிதனுடைய விருப்பத்திற்கும் ஏதாவது இடையூறு நேர்ந்தால் அதைப் போக்கிக் கொள்ள அவனுக்கு உரிமை உண்டு. அதற்காக மனிதன் சண்டையிடலாம், போராடலாம். வாசந்தியை அடைய எத்தனையோ இடையூறுகள் இருக்கின்றன. அவளுடைய வீட்டாருடன் சண்டை யிட்டுக் கொண்டு அவளை அழைத்து வர முடியாது. இப்படித்தான் அழைத்து வர முடியும். இதில் எனக்கு உரிமை இருக்கிறது. எந்தப் பெண்ணின் உள்ளத்தை நான் அடைந் திருக்கிறேனோ, எந்தப் பெண்ணிற்கு நான்தான் முதன் முதலில் அன்பு என்பது என்ன என்று கற்றுக் கொடுத்திருக்கிறேனோ, அவளை இவ்விதம் என் வீட்டிற்கு அழைத்து வர எனக்கு உரிமை கிடையாதா என்ன? இவ்விதம் அவளை அழைத்து வந்துதான் அவளை நான் காப்பாற்ற முடியும். பெண் பலவீனமானவள். தக்க தருணத்தில் அவளது மனம் இன்னும் நலிவடைந்து விடும். பெண்கள் தனித்து இடைஞ்சல்களைச் சமாளிக்கும் சக்தி படைத்தவர்களல்லர். ஆகையால் அவர்கள் இடர்களில், வெள்ளத்தோடு வெள்ளமாய்க் கலந்து விடுவார்கள்."

உணர்ச்சி வேகத்தில் தனஞ்சயன் ஒரு சொற்பொழிவாளரைப் போல் பேசிக்கொண்டே சென்றான். கிழவி ரூபாவின் உள்ளத்தில் இப்போதுதான் விஷயம் பதிந்தது. பற்களற்ற வாயைத் திறந்து அவள் சிரித்தாள். அவளது முகம் பளிச்சிட்டது. பல் முளைக்காத குழந்தை சிரிப்பது போல் தனஞ்சயனுக்குத் தோன்றிற்று. அவனது உள்ளம் சற்று அமைதி யடைந்தது. கிழவி வேடிக்கையாகக் கூறினாள், "பெண்ணின் மாயையால் சடைதரித்த சிவனும் மயங்கி விடுவான் மகனே! நீ சொன்னது உண்மைதான். போக்ராம் ருக்மவீரைப் போன்றவன்தான். கிராம நடனத்தில் ருக்மவீரைப் பார்த்தாயா? அப்பப்பா! இல்லாவிட்டால் கண்ணபிரான் வேறு வழியின்றி ஏன் ருக்மணியைத் தூக்கிக் கொண்டு போக வேண்டும்!"

இதைக் கேட்ட தனஞ்சயனுக்கு இரண்டு பெண்டிர், ஆடவர் பற்றிய நினைவு உடனே வந்தது. புத்தகத்திலிருந்தாலும் ஆசை, கனவுகள், கற்பனைகள் இவற்றால் வாழ்ந்து வந்தவர்களாயிற்றே அவர்கள். இந்த அவனித் தாயே யுகம் யுகமாக, அவர்களுக்குத் தன் உள்ளத்தில் இடமும், மலரின் மணமும் அளித்திருக்கிறாளே! அவர்கள்தான் உஷா-அனிருத்தன்; சுபத்ரா-அர்ஜுனன் இன்னும் இப்படி எத்தனை எத்தனை பேரோ! தனஞ்சயன் கூறியபடி செய்ய

ஒப்புக் கொண்ட - கிழவி ரூபாவிடம் விடை பெற்றுக் கொள்ளும் போது தனஞ்சயன் சொன்னான். "இன்னும் நான் தவறுதான் செய்கிறேன் என்று உங்களுக்குத் தோன்றினால், தயவு செய்து இனி என்னிடம் ஒன்றும் பேசவேண்டாமம்மா; எங்களைப் போன்ற மனிதர்களிடம் குற்றங் குறைகள் இருப்பது இயற்கை. நீங்களே யோசித்துப் பாருங்கள். எந்த ராமபிரான் தந்தையைச் சத்திய வாதியாக்கக் கானகம் சென்றாரோ, அதே ராமபிரான் ஒளிந்து கொண்டு வாலியை வதம் செய்தார். காரணமின்றிச் சீதையைக் கானகத்துக்கு அனுப்பிவிட்டார்! கிழவி சிரித்தபடி கூறினாள், "எனக்குச் சொல்லத் தேவையில்லை மகனே! இது தவறு என்றால் முப்பது—நாற்பது வருடங்களுக்கு முன்பு நான் செய்தது மட்டும் தவறில்லையா?"

"ஓகோ, அதனால்தான் நான் சொல்வதை ஒப்புக்கொள்கிறீர்களா?" என்று தனஞ்சயன் கேட்டான்.

கிழவி ரூபா திடீரென்று தனஞ்சயனுக்கு எதிரே இள நங்கை போல் காட்சியளித்தாள். நாணிக்கொண்டு கிழவி சிரித்த சிரிப்பில் முதுமை எங்கோ ஓடி ஒளிந்து கொண்டது. கிழவி கிளம்பியபடியே கூறினாள், "இது ரகசியம். சிதம்பர ரகசியம்! சரி மகனே, நாளைக்கே கிளம்பப் போகிறாயா?"

தனஞ்சயன் கூறினான். "இல்லை நாளை மறுநாள். நான் நாளைக்கு மறுபடியும் வருவேன். கடிதம் எழுதினால்தான் அவளுக்கு நம்பிக்கை ஏற்படும்."

தனஞ்சயன் மகிழ்ச்சிரிக்க மனத்துடன் வீட்டிற்குத் திரும்பினான்.

# பதின்மூன்று

மழைக் காலத்தில் தென்புறத்து மக்கள் வடப் பக்கத்திற்குச் செல்வது கிடையாது. ஆனால் வடக்கேயுள்ளவர்கள் தெற்குப் பக்கம் நிச்சயமாக வருவதுண்டு; ஆனால் மிகவும் அதிகமாகத் தேவைப்பட்டால்தான். சோனாய் நதியைக் கடப்பது விஷத்தை வரவேற்பது போலாகும். வல்லமை வாய்ந்த படகோட்டிகள் சிறு படகுகளைக் கொண்டு சோனாய் அலைகளுடன் விளையாடுவர். ஆனால் தெற்குப் பக்கத்து மக்கள் மட்டும் வடக்கே அதிகமாகச் செல்ல மாட்டார்கள். பெண்டிர் செல்லவே பயப்படுவர். ஆனால் கிழவி

ரூபாவின் விஷயமே அலாதிதான். அவள் வீடு வீடாகச் சென்று போர்வைகளும் பட்டுத்துணிகளும் விற்பவள். அவளுக்கு நல்ல வியாபாரமும் ஆகும். இந்தத் தொழில் செய்துதான் இரு இளம் பெண்களைக் காப்பாற்றி வருகிருள். தானும் நன்ருகத்தான் வாழ்ந்து வருகிருள். ஆடவ ரில்லாமலேயே வீட்டு வேலைக ளனைத்தையும் அவள் சமாளித்துக்கொள்கிருள். கிழவி சிறு இன்னல்களைப் பொருட்படுத்த மாட்டாள். பலத்த மழையினுல் சோணுய் நதியில் வெள்ளமே வந்தாலும் சரி, படகுகள் மூழ்கிப் போன செய்தியே கிடைத்தாலும் சரி, அவளுக்குப் பயம் கிடையாது. தேவைப் பட்டால் சிறு படகின் உதவியாலேயே அக்கரைக்கு வந்து சேர்ந்து விடுவாள். சிறு படகோட்டிகள், பெரிய படகுகளை ஓட்டுபவர்கள் எல்லோருக்குமே அவளைத் தெரியும். படகோட்டிகளைப் போலவே அவளும் துணிச்சலுள்ளவள். அக்கரைக்குச் செல்ல வேண்டும் என்று அவள் சொன்ஞல் எந்தப் படகோட்டியும் ''முடியாது'' என்று சொல்ல மாட்டான். நதியின் மீனைப் போன்றவள் ரூபா என்பது அவர்களுக்குத் தெரியும். அவள் நோயால் இறப்பாளே அல்லாது நீரில் இறப்பவளல்ல. அவளுக்கு நான்கு விதமான நீச்சல் கலை தெரியும். சோணுய் நதியின் இரு கரைகளிலும் தனஞ்சயனை எத்தனை மக்களுக்குத் தெரியுமோ, அத்தனை மக்களுக்கு ரூபாவையும் தெரியும். காரணம் ரூபா பெண்டிருடன் சேர்ந்து பழகுவது அதிகம்; தனஞ்சயன் அதிகமாக ஆடவருடன் பழகுவது வழக்கம்.

நல்ல பட்டப்பகல் நேரம். ரூபா போக்ராமின் வீட்டிற்கு வந்திருந்தாள். இப்போதெல்லாம் அவளுக்கு அவர்களுடைய வீட்டிற்கு வரப் பிடிக்கவே பிடிக்காது. பணம் வந்த பிறகு இவர்களது அறிவும் நிலை மாறிவிட்டது. போக்ராம் இப்போதெல்லாம் தற்பெருமை யடித்துக் கொள்ள ஆரம்பித்துவிட்டான். போர்வையும் பட்டுத்துணியும் காண்பித்தால் 'ஜார்ஜட்', 'வாயல்' என்று இவர்கள் கேட்க ஆரம்பித்து விடுகிருர்கள். இன்று முக்கியமான வேலையாக வந்திருந்த போதிலும் முன்போல அன்புடன் அவள் பேசவில்லை. உரத்த குரலில் கேட்டாள்—'வீட்டில் யாராவது இருக்கிருர்களா'?

இடுப்பில் சிறு குழந்தையுடன் தருலதா வெளியே வந்தாள். ''ஓ! ரூபாவா! ஏது? எங்கள் வீட்டுக்கு வராதபடி தடுத்திருந்த முள் வேலியை இன்று யார் எடுத்தார்கள்?'' என்று கேட்டாள்.

உள்ளிருந்து வாசந்தியின் குரல் கேட்டது, ''ஏது! வழி தப்பி விட்டாயா?''

ஒரு சிறு ஸ்டூலில் உட்கார்ந்தபடியே கிழவி ரூபா பதிலுரைத்தாள்—''நீ என்ன வேண்டுமானுலும் நினைத்துக்கொள். உங்கள்

வீட்டுக்கு வரப் பிடிக்கவில்லை. பணம் வந்தாலும் வந்தது, நீங்கள் எல்லோரும் மாறிப் போய் விட்டீர்கள்.''

''ரூபா! அப்படிச் சொல்லாதே. நாங்கள் யாரையாவது கட்டி வைத்து அடித்தோமா என்ன ?''

''ஓகோ ! அப்படியானால் நீங்கள் மற்றவர்களின் எதிரே பணிவாக இருக்கக் கற்றுக் கொண்டு விட்டீர்களாக்கும் !''

வருத்தத்துடன் பெருமூச் செறிந்தபடியே தருலதா கூறினாள். ''ஒரு புது விஷயம் சொல்கிறேன் கேட்டுக் கொள், ரூபா. குடும்பம் செல்வத்திலே திளைத்தால் ஆண்பிள்ளைகள் தான் பெரிய மனிதர்களாகிறார்கள். பெண்கள் எப்போதும் போல் உதவாக்கரையாகத் தானிருக்கிறார்கள்.''

''என்ன சொன்னாய்? இன்னும் உன் மனத்தில் வருத்தம் இருக்கத்தான் செய்கிறதா?''

'' ஆமாம் ரூபா, முதலில் சாப்பிடவும் உடுக்கவும் போதாமலிருந்தாலும் மனம் நிம்மதியாக இருந்தது. இப்போது சாப்பிடவும் உடுக்கவும் ஒரு குறையுமில்லை. ஆனால் மனம் மட்டும் உலர்ந்த சருகாய் விட்டது.''

வாசந்தி இதுவரை கிழவி ரூபாவையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண் டிருந்தாள். கிழவியின் வீடு பாப்சிலாவில் இருப்பது அவளுக்குத் தெரியும். தனஞ்சயனைப் பற்றிக் கிழவி ஏதாவது சொல்வாள். அவளே சொல்லா விட்டாலும் அண்ணி உள்ளே சென்றதும் வெட்கத்தை விட்டுத் தானே கேட்கலாம் என்று அவள் நினைத்தாள். திருமணம் நிச்சயமானதிலிருந்து கூண்டுக் கிளி போல் அவள் காலத்தைக் கழிக்கலானாள். இரவு நேரத்தில் கனவுகள் அவளைத் துன்புறுத்தின. பல இரவுகளில் ஆந்தையின் குரல் கேட்டு அவள் நடுங்கியதுண்டு. உடலில் நடுக்கம், இதயத்தில் பதை பதைப்பு, வாழ்க்கையின் பயங்கரமான அநித்தியத்துடன் அவள் நாட்களைக் கழித்து வந்தாள். ஆனால் இன்று கிழவி ரூபாவைப் பார்த்ததும் ஒரு சொல்லொணாத நம்பிக்கைக் கிரணம் ஒளி விட்டது. தருலதாவும் ரூபாவும் மிகவும் அன்னியோன்னியமாகப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்த வாசந்தி தானே எழுந்து உள்ளே சென்று விட்டாள். தேநீர் தயாரிக்கத் தண்ணீரை அடுப்பில் வைத்து விட்டு வரச் சென்றாள். தருணம் பார்த்துக் கிழவி கேட்டள், ''நீ இப்படி வருத்தப்படக் கூடாதம்மா! ஏன், அவர் உன்னை அடிக்கிறாரா? திடீரென்று பணம் வந்தால் ஆண் பிள்ளைகள் மது பானம் குடிக்க ஆரம்பித்து விடுவார்கள் என்று சொல்வார்களே !''

தருலதாவின் கண்களிலிருந்து நீர் வழிந்தது. காதருகே வந்து அவள் கூறினாள், "பணக்காரர் ஆனாலும் ஆனார். அவர் அன்பையே விட்டு விட்டார். பணமா வந்தது; பிசாசுதான் பிடித்துக் கொண்டது, ரூபா. இத்தனை வருடங்களுக்குப் பிறகு நான் அவருக்கு விகாரமாக ஆகிவிட்டேன். வீட்டுப் பெண் அவருடைய மனதில் இல்லை. வேறொருத்தியின் மீது பார்வை பதிந்து விட்டது."

கிழவி கேட்டாள், "நான் ஏதாவது செய்ய வேண்டுமா?"

தருலதா கூறினாள், "கோசாயி தெருவில் இருக்கும் செம்படவன் முகுட் ஒரு தாயத்து வைத்திருக்கிறானாம், இடுப்பில் கட்டிக் கொள்ள!"

"ஆமாம், கேள்விப் பட்டிருக்கிறேன்."

"உன் கால்களைப் பிடித்துக் கெஞ்சிக் கேட்கிறேன், ரூபா. ஞாயிற்றுக்கிழமைக்கு முன்னாலேயே அந்தத் தாயத்தை வாங்கிக் கொண்டுவந்து கொடேன். விலை என்னவானாலும் இப்போதே தந்து விடுகிறேன். அதைக் கட்டிக் கொண்டாலாவது அவருடைய உள்ளம் என் பக்கம் திரும்புமா என்று பார்க்கலாம். எல்லா ஆடவரும் வண்டைப் போன்றவர்தான் ரூபா, அது தெரியுமா உனக்கு?"

தருலதாவின் வருத்தத்தைப் புரிந்துகொண்டு கிழவி ரூபா. அவளுக்கு வாக்குக் கொடுத்தாள். அப்போது வாசந்தி ஒரு கிண்ணத்தில் தேநீர் கொண்டுவந்து கிழவிக் கெதிரே வைத்தாள். வாசந்தி உட்கார்ந்துகொண்டு பாக்கு வெட்ட ஆரம்பித்தாள். தருலதா பேச்சை மாற்றியபடி கேட்டாள், "ரூபா, இப்போதெல்லாம் துணிகள் கொண்டு வருவதில்லையா?" கிழவி பதிலளித்தாள், "இந்த மாதம்தான் கொண்டுவரவில்லை மக்களின் நிலைமை மோசமாகி விட்டது. அவர்களால் துணி வாங்க முடியாது."

குழந்தைகள் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தன. ஆகையால் தருலதா கிழவியை உட்கார்ந்திருக்கும்படி கூறிவிட்டுச் சமையலறைப் பக்கம் சென்றாள். வாசந்திக்குக் கிழவியிடம் தனித்துப் பேச வாய்ப்புக் கிடைத்தது. இருவரும் வெகு நேரம் வரை மௌனமாக இருந்தனர். கண்களாலேயே இருவரும் பல விஷயங்களைப் பரிமாறிக் கொண்டனர் போலும்! முடிவில் கிழவியே குரல் கொடுத்தாள். "மகளே, இளமைப் பருவம். இப்படி ஏன் ஒட்டி உலர்ந்து கொண்டு வருகிறாய்? உன்னைப் பார்த்தால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. தலையைக் கூட நன்றாக வாரிக் கொள்ளவில்லையே அம்மா!"

வாசந்தி ஒன்றும் பேசவில்லை. மண்ணில் நெளிந்து சென்று கொண்டிருந்த புழுக்களைப் பார்த்துக்கொண் டிருந்தாள். ரூபா மறுபடியும் கேட்டாள். "நீ எழுத்தைப் படிப்பாயோ?"

வாசந்தி பதிலளித்தாள், "நான்காவது வரை படித்திருக்கிறேன்."

"வாசந்தி எனக்கு எல்லாம் தெரியும். தனஞ்சயன் மகிழ்ச்சியுடன் தானிருக்கிருன் என்று நினைத்துக் கொள்ளாதே. உன்னிடம் வாக்குக் கேட்க வந்திருக்கிறேன். இதோ இந்தக் கடிதத்தைப் படி, பிறகு யாருக்கும் காண்பிக்காமல் கிழித்து விடு."

மழையே வெள்ளமாகப் பொழிகிறதோ என்னும்படி வாசந்தியின் இரு கண்களிலிருந்தும் நீர் வழிந்தோடியது. சேலைத் தலைப்பால் வாயை மூடிக்கொண்டு அவள் உட்கார்ந்திருந்தாள். மறு கையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். இரண்டே விழுங்கில் தேநீரை விழுங்கி விட்டுப் பற்றற்ற முறையில் உண்மையான விஷயத்தை ரூபா ஆரம்பித்தாள் "வாசந்தி, வாழ்வில் வாய்ப்பு என்பது பெரிய விஷயம். அவன் உன்னை ஒருவருக்கும் தெரியாமல் அழைத்துக் கொண்டு போக விரும்புகிருன். இந்த வாய்ப்பு நழுவி விட்டதோ, அவ்வளவுதான். வாழ்நாள் முழுதும் பிறகு அனுபவித்துக் கழித்தாக வேண்டும். புரிந்ததா, வாழ்க்கையில் வாய்ப்பு என்பது ஒரு முறைதான் கிடைக்கும்."

தனஞ்சயன் இந்த அளவுக்கு வந்து விடுவான் என்று வாசந்தி ஒரு போதும் நினைக்கவில்லை. அவள் மகிழ்ச்சியால் சுய நினைவையிழந்து விட்டாள். "ஆனல், அவருக்கு மரியாதையும் கௌரவமும் அதிகமாக இருக்கிறதே. மக்கள் அவரை மிகவும் நல்லவர் என்று கருதுகிருர்களே?" என்று அவள் கூறினுள்.

கிழவி பதிலளித்தாள், "மக்கள் என்ன நினைப்பார்கள் என்று யோசித்தபடியே நீ உன் வாழ்நாள் முழுதும் அழுது கொண்டிருக்கப் போகிருயா? தனஞ்சயன் என்ன சொல்கிருன் என்று தெரியுமா உனக்கு? கொஞ்சம் நீரில் உயிர் வாழும் மீனைப் போல், கட்டுப்பாடும் வரையறையும் மனிதனை ஆக்கி விடுகிறது. நன்ருகச் சிந்தித்துப் பார், வாசந்தி! அன்பு இந்தக் கட்டுப்பாட்டையுப் மதிக்காது. உள்ளம் குளிர அன்புடன் வாழவேண்டுமானுல், கட்டுப்பாட்டைத் தகர்த்துக் கொண்டுதான் கிளம்ப வேண்டும். அது அரச மரத்தைப் போன்று பரந்த பொருள். சிறு அவதூறுகளால் அதனை அசைக்க முடியாது. சிறு காற்ருே, பெரும் புயலோ அரச மரத்து இலைகளைத்தான் அசைக்கலாம். இலைகள் அசைவது தாளம் போடுவது போலிருக்கும், அவ்வளவுதான்."

கிழவி ரூபாவின் சுவை மிக்க வார்த்தைகளைக் கேட்ட வாசந்தியின் அன்பு நிறைந்த கண்கள் மீன்களைப் போல் துள்ளின. வெள்ளமாய் மழை பொழியும்போது சோருய் நதி பெருக் கெடுக்குமாப்போல்

திடீரென்று விறுவிறுப்புடன் காணப்பட்டாள். கிழவிக்கெதிரே சற்று நாணத்துடன் தன் இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண் டாள். "போகிறேன்" என்று மெதுவாகக் கூறியபடியே ஒரு மாபெரும் செயலுக்குத் தான் ஆயத்தமாகப் போவதை அவளிடம் தெரிவித்தாள். கிழவிக்கு அவளிடம் பாசம் மேலிட்டது. அருகே வந்து, கலைந்த தலை முடியைச் சரிப்படுத்தியபடி கூறினாள், "ஞாயிற்றுக்கிழமை அண்ணிக்குத் தாயத்து எடுத்து வருவேன். அப்போது சொல்கிறேன். அதே நாளன்று இரவு கழிந்து பொழுது விடிந்ததும் நீ டனுவா கட்டத்தை அடைந்தாக வேண்டும். அவன் படகுடன் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பான். இரவெல் லாம் நிலவுதான் ஒளி விட்டுக் கொண்டிருக்கும். கொஞ்சம் தொலை வுதான் போக வேண்டும். உனக்கு அதிக சிரமம் இருக்காது. கடிதத்தில் எல்லாம் எழுதப் பட்டிருக்கிறது."

வாசந்தி கூறினாள்—"தாயத்தை எடுத்துக்கொண்டு நீ சனிக் கிழமையே வந்துவிடேன். ஞாயிற்றுக் கிழமை வந்தால் இவர் களுக்குச் சந்தேகம் உண்டாகும்."

"சரி, அப்படியே செய்கிறேன். ஆனால் நிச்சயதார்த்தம் முடிந்து, பெண்ணிற்கு மோதிரம் அணிவித்தாகிவிட்ட தென்றால், அப்படிப் பட்ட பெண்ணை ஒருவரும் சந்தேகிப்பதில்லை. ஆனால் ஒன்று, நீ மனத்தை நன்றாக உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டும். புரிந்ததா வாசந்தி? காட்டை அழித்துப் பயிருக்குத் தகுந்ததாக நிலத்தைப் பண் படுத்தியாக வேண்டும். சொந்த வீட்டை விட்டு பிறருடன் கிளம்ப வேண்டும். இவ்விரண்டிற்கும் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டாக வேண்டும். இது கோழை மனத்தவரால் முடியாத செயலாகும்."

"என் மனம் ஒருவர் முன்னிலையில்தான் நெகிழும்" என்று வாசந்தி கூற நினைத்தாள். ஆனால் நாணத்தின் காரணமாக அவ்வி தம் சொல்ல முடியவில்லை. தன் லட்சியம் நிறைவேறி விட்ட மன நிறைவுடன் தருலதாவிடம் விடை பெற்றுக்கொண்டு கிழவி ரூபா திரும்பிச் சென்றாள்.

தருலதா குழந்தைகளுடன் படுக்கச் சென்றுவிட்டாள். வெற்றிலை பாக்கை இடித்துத் தன் தாய்க்குக் கொடுத்த பின்பு வாசந்தி குடத்தை எடுத்துக்கொண்டு கட்டத்திற்குச் சென்றாள். சோனாய் நதியின் அக்கரைப் பக்கம் ஓரிரு படகுகள் சென்றுகொண் டிருந்தன. இக்கரையில் தலங்குக் கட்டத்திலும் இரண்டு பெரிய படகுகள் நின்றுகொண் டிருந்தன. டனுவா கட்டத்தில் ஒருவருமில்லை. நள் ளிரவில் நிலவு பட்டப்பகலில் ஆதவனைப்போல் ஒளி வீசிக்கொண்

டிருந்தது. சட்டைக்குள்ளிருந்த கடிதத்தை அவள் மெதுவாக வெளியே எடுத்தாள். எழுத்துக்களைப் பார்த்த அவளுக்கு அவை எழுத்துக்களாகத் தெரியவில்லை. தனஞ்சயனே பேசுவதுபோ லிருந் தது. மெள்ள மெள்ளக் கடிதத்தை அவள் படித்துக்கொண்டே சென்ருள் :

அன்புள்ள வாசந்தி,

வீட்டோர் வற்புறுத்தியதன் பேரில் நீ மோதிரம் அணிந்துகொள்ள நேர்ந்துவிட்டது. இதனுல் நான் உன்னை விட்டகன்று விட்டேன் என்று நீ ஒருபோதும் நினைக்கமாட்டாய் என்பது எனக்குத் தெரியும். எனக்கு உன்பேரில் முழு நம்பிக்கை இருக்கிறது. நான் மிகவும் துடித்துக்கொண் டிருக்கிறேன். எவ்வளவோ சிந்தித்துப் பார்த் தேன். முடிவில் சோனுய் பரியாவில் வழக்கம்போல் நடக்கும், ஆனுல் உன்போன்ற உயர் குடும்பத்துடன் தொடர்பில்லாத, அந்த உபாயத்தைத்தான் தேர்ந்தெடுத்துள்ளேன். பிறருடைய கருத்துப் படி நடந்தால், நம் உயிருக்குயிரான ஆசையை ஏமாற்றவேண்டி வரும். ஆனுல் இப்போது அதற்கும் நேரமில்லை. ஆதலால் உன் குடும்பத்தில் நடக்கக் கூடாத சம்பவம்தான் நடந்தாகவேண்டும். கடைசி நாள், இரவு வேளையில் வெண்ணிலவு உதித்திருக்கும். ஞாயிறன்று இரவு நேரத்தில் படகை வைத்துக்கொண்டு நான் காத் திருப்பேன். சேவல் முதலில் கூவியவுடனேயே புறப்பட்டு வந்து விடு. அரைமணி நேரம் முன்னதாக வந்தாலும் சரி, நேரங் கழித்து வந்தாலும் சரி, பரவாயில்லை. பிறந்த வீடு, வயதான தாய், மற்றும் எல்லோரையும் விட்டுவிட்டு வருவது எவ்வளவு கடினம் என்பதை நான் அறிவேன். ஆனுல் நான்மட்டும் உனக்குச் சொந்தமில்லையா? அயலானு? சரி, இனி ஒன்றும் எழுதமாட்டேன். கிழவி ரூபா விவர மாகக் கூறியிருப்பாள். அவளிடமும் நீ வாக்குக் கொடுத்திருப்பாய் என்பது எனக்குத் தெரியும்.

கடைசியாக அன்பு...மிகுந்த அன்பு கலந்த...நான் எழுதாமல் விட்ட இடங்களை நீயே நிரப்பிப் படித்துக் கொள்.

உனக்கே உரிய

**தனஞ்சயன்**

கடிதத்தைப் படித்த வாசந்தியின் மனம் அமைதியை இழந்து விட்டது. அருகிலிருந்த பலவித புள்ளினங்களின் குரல்களில் அவ ளுக்குப் புதுமை தோன்றியது. சோனுய் நதியின் இனிய 'கலகல' ஒலி அவளுடைய உள்ளத்திலும் ஒலித்தது. தொலைவில் பயிர்களில் காணப்பட்ட பசுமையைக் கண்டாள். சுற்றிலுமிருந்த பசுமை

முழுவதிலும் அவளுக்குத் தன்னைத்தான் தெரியவந்தது. சோனுய் நதியில் தங்கம்தான் உருகிப் பாய்கிறது என்று அவள் கருதினாள். அவள் வேகமாக மூச்சு விட்டாள். படித்த பிறகு கடிதத்தைக் கிழித்து விடும்படி கிழவி ரூபா அடிக்கடி கூறியிருந்தாள். ஆனால் தனஞ்சயனின் கடிதத்தை அவளால் கிழிக்க முடியவில்லை. தனஞ்சயனின் முதல் கடிதம் அது, கடைசிக் கடிதமும்தான். அவனுடனேயே அவள் இருக்கப் போகிறாளே, பின்பு கடிதம் எழுதத் தேவை எங்கே? அவனுடன் சென்ற பிறகும் கூட அந்தக் கடிதத்தைப் பத்திரமாக வைத்திருப்பாள். இரண்டு மூன்று குழந்தைகளின் தாயான பிறகும் கூட அவளை விட்டு இளமை செல்லுந் தருவாயிலிருக்கும்போது கூட—பத்திரமாக வைத்திருந்த அந்தக் கடிதத்தை அவனிடம் காண்பித்துக் கூறுவாள், "பாருங்கள், எவ்வளவு ஆசையாக நீங்கள் கடிதம் எழுதியிருக்கிறீர்கள். உங்களை எப்படி மயக்கியிருக்கிறேன்!" அவர் தந்தையின் பொறுப் புணர்ச்சியுடன் கூறுவார், "அசடே! நாளுக்கு நாள் நீ குழந்தையாகிக்கொண்டு வருகிறாய்!" இப்படிச் சொல்லி விட்டு அவர் மனம் விட்டுச் சிரிப்பார்.

அவள் தண்ணீர்க் குடத்துடன் வீடு வந்து சேர்ந்தாள். தலையணையைப் பிரித்து, பஞ்சிற்குள் கடிதத்தைப் புதைத்து வைத்து விட்டு மறுபடியும் முன்பிருந்தாற்போலவே தைத்து விட்டாள். யாருக்கும் ஒன்றும் தெரியாது. சில மணி நேரத்திற்குள் அவளுக்குத் தன் வீடே அயலார் வீட்டைப்போல் தோன்ற ஆரம்பித்து விட்டது.

ஞாயிற்றுக் கிழமை பகல் நேரத்தில் வாசந்தி மிகவும் அன்புடன் தன் தாயிடம் பேசிக்கொண்டிருந்தாள். அண்ணிக்கு ஏதாவது தெரிந்துவிடப் போகிறதே என்ற அச்சத்தால் அவளிடமிருந்து சற்று விலகிய இருந்தாள். இந்தப் பகல் நேரம் எப்படியாவது கழிந்தால் போதும் என்று பரபரப்புடன் இருந்தாள். அண்ணன் போக்ராம் இன்று முழுதும் காணவில்லை. இரவில்தான் வருவான். அவனுடைய சுபாவம் கெட்டு விட்டது. பணம் வந்த நாளிலிருந்து எந்த வீட்டில் இளம் பெண் இருப்பாளோ, அந்த வீட்டில்தான் தேநீர் அருந்துவான், வெற்றிலை போடுவான். டல்புரியாவில் யாராலோ விலக்கி வைக்கப்பட்ட ஒரு பெண்ணுடன் அவன் தொடர்புகொண்டிருந்தான். தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக அவளுக்குப் பணத்தையும் வாரி வழங்கினான். இந்த விஷயம் அனேகருக்குத் தெரியும், தருலதாவிற்கும் தெரியும். இப்போதெல்லாம் தருலதா மிகவும் வருத்தமாகக் காணப்பட்டாள்.

குழந்தைகளின் முகங்களைப் பார்த்துத்தான் மன அமைதி யடைந்து வந்தாள். வாசந்தி சென்றுவிட்டால் தருலதா தனிமையாக இருக்க நேரிடும். மனக் குறையைச் சொல்லிக்கொள்ளக் கூட வேறு ஒருவரும் கிடைக்க மாட்டார்கள். வாசந்தி மாலையில் சாப்பிட முடியாமல் தவித்தாள். அவளைப் பல கவலைகள் வதைத்தன. பகல் நேரத்திலேயே ஒருவர் பார்வையிலும் படாமல் ஒரு பொட்டலத்தைக் கட்டி ஒரு மூலையில் ஒளித்து வைத்திருந்தாள். அதில் தனஞ்சயனின் கடிதம் இருந்தது. தலையணைக்குள் தங்க நகைகளையும் வைத்துக் கொண்டாள். ஏனென்றால் வீட்டிலிருக்கும் போது எல்லா நகைகளையும் அணிந்து கொள்ளக் கூடாது. எல்லோருடைய கவனமும் அவளுடைய பக்கம் செல்லும். நகையின்றிச் சென்றால், தனஞ்சயனால் உடனே நகை பண்ணிப் போட முடியுமோ, முடியாதோ! அவனிடம் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதும் வாசந்திக்குத் தெரியாது. அவனிடம் பணம் இருக்கும்; தன் வீட்டில் இன்னும் இரண்டு அறைகள் கட்டுகிறான் என்று நேற்றுத்தானே கிழவி ரூபா சொன்னாள். அப்பா! அவனுடைய ஆசையைத்தான் பாரேன். அவளை அரசி யாக்கிவிட்டுத்தான் மறு வேலை பார்ப்பான் போலிருக்கிறது!

சாப்பாட்டு வேளையில் பெரும்பாலும் போக்ராம் வீட்டில் இருப்பது கிடையாது. வீட்டிலுள்ள எல்லோரும் தூங்கச் செல்லும்போது அவன் கதவைத் தட்டுவான். இன்று கூடச் சுமார் பத்து மணிக்குத்தான் அவன் வந்தான். அவனுடைய குரலைக் கேட்டதுமே இன்று வாசந்திக்குக் கோபம் வந்தது. இவன்தான் எல்லாக் கஷ்டங்களுக்கும் காரணம்! தனஞ்சயனை மிகவும் சாதாரணமான மனிதன் என்று நினைத்து வெறுக்கும் மனிதன் அவனைவிடக் கெட்டவனாகத்தான் இருக்கவேண்டும்! அவனை வெறுக்கத்தான் வேண்டும். அண்ணனைப் பழி வாங்க நினைத்தாள் வாசந்தி. தனஞ்சயனுடன் ஓடிப்போய்விட வேண்டும் எனும் எண்ணம் இன்னும் தீவிரமாகி விட்டது. பிறந்த வீட்டின் மோகத்தைத் துறக்க அவளது உள்ளம் உறுதி பூண்டு விட்டது. இதிலிருந்து அவனுக்கு ஒரு படிப்பினை கிடைக்க வேண்டும். 'இளம் பெண்ணிற்கும் உள்ளம் என்று ஒன்று இருக்கிறது என்பதை அவன் தெரிந்து கொள்ளட்டும். அவளுக்கும் சொந்தமாகச் சில ஆசைகள் உண்டு. அதற்காகக் குடும்பத்தின் கட்டுப்பாடுகளையும் மீறிச் சுகமாக இருக்கும் உரிமை அவளுக்கு உண்டு என்பதை அவன் தெரிந்து கொள்ளட்டும்' என்று அவள் நினைத்தாள்.

இரவு நேரமாகிவிட்டது. மேகங்களைக் கண்டு அவளது உள்ளமும் நனைந்துவிட்டது. தனஞ்சயன் படகுடன் வரமாட்டானா? நிச்சயமாக வருவான். இரவின் மிகுதியும் இப்படியே இருந்தால் தேவலாம்; அதிக இருளிருக்காது; பாதையையும் எளிதில் புரிந்துகொண்டு நடந்து விடலாம். அதிக நிலவொளி இருந்தாலும் தீமைதான்!

அண்ணன் போக்ராம் அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்து விட்டான். தருலதாவும் தூங்கியிருப்பாள், ஏனென்றால் அறையின் விளக்கு அணைக்கப் பட்டு விட்டது. வாசந்தி தாயினருகே படுத்திருந்தாள். ஆனால் தாய்க்கு எளிதில் தூக்கம் வராது. வெகுநேரம் வரை ஏதாவது பாட்டை முனகிக்கொண்டே யிருப்பாள்—' உன்னையன்றி ஓர் கதி காண்கிலேனே! உன்னையே நம்பி உயிர் வாழ்கின்றேனே!' தாய் தூங்க ஆரம்பிப்பதற்குள் நள்ளிரவாகி விட்டது. வாசந்தி கதவைத் தாளிடவில்லை. சற்று நேரத்திற்கு முன்பு வாயிற்பக்கம் எட்டிப் பார்ப்பது போல் பார்த்துவிட்டுத் தாழ்ப்பாளைத் திறந்து வைத்திருந்தாள். தாளிட்ட ஓசை மட்டும் கேட்டது. ஆனால் தாளிடப்படவில்லை.

இன்று சேவல் முதல் கூவல் கூவாதா? ஏன் கூவாது? ஒன்றுமறியாதவளைப் போல் அவள் இப்படி யெல்லாம் எண்ணுகிறாள். இயற்கையின் கடமைகள் தவறுவதில்லை. சேவல், மைனா, குயில், குருவி, அணில் இவை யாவும் இயற்கையின் தோழர்கள். அவை யாவும் சந்திரனையும் சூரியனையும் பெண்டிரையும் போல் தத்தம் வேலைகளைச் செய்யத் தவற மாட்டார்கள். இன்றும் அந்தக் கடைக்காரன் வீட்டுச் சேவல் கூவும்—' கொக்கொரக்...கோ...'

மாட்டுக் கொட்டகையில் ஒரு கன்றுக் குட்டி ' அம்மா—அம்மா' என்று கத்திக்கொண் டிருந்தது. இரவு நேரம் கழிந்து விட்டது என்று அதுவும் சொல்கிறதா என்ன? அந்தக் கறுப்புப் பசுவின் கன்றுக்குட்டி எவ்வளவு அழகாக இருக்கிறது! நான்கே மாதங்கள் தானாகின்றன அது பிறந்து. அவள் முற்றத்திற்கு வந்தால் ஓடிவந்து அவளிடம் நின்று கொண்டுவிடும். அவளை முகர்ந்து பார்க்கும்; உள்ளங்கையை நக்கும். பாப்சிலா சென்று விட்டால், நம் வீட்டவர் நினைவிற்கு வருவர். இந்தக் கன்றுக் குட்டியின் நினைவும் வரும். ஆனால் வேறு வழியில்லை. மாயை வேறு, அன்பு வேறு, இல்லையா? இந்தப் பெரிய கேள்வியானது வாசந்தியை அமைதி குலையச் செய்து விட்டது.

இதைப்பற்றியெல்லாம் சிந்தித்தால் வேலை நடக்காது. மனத்தை உறுதிப் படுத்திக் கொள்ளும் நேரம் வந்துவிட்டது. அடே! பிராணிகளின் உலகம் விழித் தெழுந்து விட்டதே! சேவல் கூவவே இல்லையே. இரவும் முடியப் போகிறது. வண்டிச் சக்கரம் கல்லில் மோதிக் கொண்டாற்போல் ஓசை கேட்கிறது. 'சோந்தர்பாம்' கிராமத்து மக்கள் பட்டணத்தை நோக்கிச் செல்கின்றனர். நள்ளிரவு நிச்சயமாகக் கழிந்து விட்டது. அவர்கள் நட்சத்திரங்களைப் பார்த்து இரவு நேரத்தைக் கண்டு பிடிப்பார்கள். பெயர் தெரியாத சில பறவைகளின் குரல் வாசந்திக்குக் கேட்டது. நீலுவின் வீட்டு நாயும் குரைத்தது. காட்டு வெளியிலிருந்து ஓநாயின் குரலும் கேட்டது. அவளுடைய உள்ளம் பதைபதைத்தது உண்மை. யாருடனாவது ஓட வேண்டுமானால் அதற்கு மனோபலம் வேண்டும், தைரியம் வேண்டும். சற்றுக் குரூர சித்தமுள்ளவளாகக் கூட இருக்க வேண்டும்.

தாய், அண்ணன், அண்ணி, அவர்களுடைய சின்னஞ்சிறு குழந்தைகள்-எல்லோர் பேரிலும் இப்போது அவளுக்குச் சொல்லொணாத பாசம் மேலிடுகிறது. அவர்கள் பேரில் ஆசை அதிகரிக்கிறது. ரத்த பாசமாயிற்றே! அந்தப் பிணைப்பே அலாதிதான். இவர்கள் இந்த வயதில் கூட அன்பின் மதிப்பை உணர மாட்டார்கள்போலிருக்கிறது. அவளுடைய நன்மையில் அவர்களுக்கு மகிழ்ச்சி இருக்காதா என்ன? அண்ணன் போக்ராம் அவளிடம் அன்பு காண்பிக்கவில்லையா என்ன? அண்ணி அவனை வேறு காரணத்தால் கெட்டவன் என்று கருதுகிறாள். அண்ணனின் கடுமையான வார்த்தைகளைக் கேட்டு அம்மா கூடச் சொன்னாளே— 'பணம் அவனையே தடுமாறச் செய்து விட்டது. ஆள் தலைகீழாகி விட்டான்!' ஆயினும் தன் அண்ணனை அவளால் எப்படிக் கெட்டவன் என்று சொல்ல முடியும்? அவனிருந்திராவிட்டால் அப்பா இறந்ததும் வீடே சூனியமாகி யிருக்கும். சரிகைப் புடவையும், வாயல் புடவையும் இப்போது கட்டிக் கொள்கிறாளே, இது முடிந்திருக்குமா? யாருடைய வீட்டிலாவது வேலை செய்ய நேர்ந்திருக்கும். பணம் யாருக்குத்தான் வேண்டாம்? சோனுய் பரியா மக்கள் சொல்வார்களே, 'மீனைப் பார்த்து நாரை துள்ளும், பணத்தைப் பார்த்து மனிதன் துள்ளுவான்' என்று, அது எவ்வளவு உண்மையான வாக்கியம். பணம் சம்பாதிக்கத் தெரியாவர்கள்தான் 'பணம் எதற்கு?' என்று தம் பாண்டித்தியத்தைக் காண்பித்துக் கொள்வார்கள். நாளைக் காலை அண்ணி தருலதா அவளைக் காணமல்

தவித்துப் போவாள். விம்மி-விம்மி அழுவாள். பிறகு அன்பு இருந்த போதிலும் வாசந்தியைத் திட்டுவாள். 'பருவமடைந்த பெண்ணும், நீரில் வாழும் மீனும் ஒன்றுதான்' என்று சொல்வாள். ஆனால் தருலதா மிகவும் நல்லவள். இளமையில் அவள்தான் வாசந்திக்குத் தோழியாக இருந்தவள். அவளுடைய துக்கத்தைப் பகிர்ந்து கொண்டவள். பிறரிடம் வாசந்தியைப் பற்றி புகழ்ந்து பேசி எப்படிப் பெருமை கொள்வாள் தெரியுமா?

இந்த அம்மா! கட்டைபோல் கிடக்கிறாள். தாய் என்றால் சாமானியமா? பத்து மாதம் பத்து நாட்கள் சுமந்து பெற்று நம்மைச் சீராட்டி வளர்க்க எவ்வளவு பாடு பட்டிருப்பாள்! வாசந்தியை மையமாகக் கொண்டு அவள் எத்தனை கனவுகள் கண்டு கொண்டிருக்கிறாளோ! தன் இளம் பெண்ணைப் பார்க்கும்போதெல்லாம், அவளுக்குத் தன் இளமைப் பருவம் படம்போல் எதிரே வந்து நிற்கும். எத்தனை இனிய நினைவுகளை மனதில் மலர்களாகக் கோர்த்துத் தொடுத்துக் கொண்டிருப்பாளோ!

அடடா! இதென்ன தக்க தருணத்தில் அவளுடைய மனம் மென்மையாகிக் கொண்டே வருகிறது! வீடு புனிதத் தலம் போல் தோன்றுகிறதே! வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் மனத்திற்கு மிகவும் பிடித்தவர்களாகத் தோன்றுகின்றனரே! அவர்கள் பேரில் அன்பும் பெருக்கெடுத்துக் கிளம்புகிறதே. பிறந்த வீடு இரவின் நிசப்த வேளையில் இவ்வளவு மகிமை பொருந்தியதாகத் தென்படுகிறதே. அவள் சக்ரவ்யூகத்தில் சிக்குண்டவளைப்போல் தவித்தாள்.

அவள் திடீரென உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கினாள். கடைக்காரனின் வீட்டுச் சேவலும் கூவி விட்டது. முதல் கூவல்— 'கொக்கரக் கோ...'. நேரம் வந்து விட்டது. இதே கணத்தில் நான் என் உள்ளத்தை உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டும். பலவீனமான மனதுள்ளவர்களால் இம்மாதிரி செயலைச் செய்ய முடியாது. தனஞ்சயனும் கடிதத்தில் அப்படித்தானே எழுதியிருந்தான்: 'வீட்டையும், அம்மாவையும் மற்றவர்களையும் விடுவது எவ்வளவு கடினம் என்பதை நானறிவேன். ஆனால் நான் மட்டும் உனக்குச் சொந்தமில்லையா, அயலானா?'

கடிதத்தின் இவ் வார்த்தைகள் நொடிப் பொழுதில் அவளுக்கு மனோபலம் அளித்தன. இடது பக்கம் இடுப்பில் பொட்டலத்தை இடுக்கிக் கொண்டு, மற்றொரு கையால் தூங்கிக் கொண்டிருந்த தாயின் கால்களைத் தொட்டுக் கும்பிட்டாள். உதடுகளை அசைத்தபடி சத்தம் செய்யாமல் பேசினாள்; 'அம்மா! என்னை நீ மன்னித்துவிடு.

ஒருவருடம் வரைதான் உனக்கு வருத்தமாக இருக்கும். அதன் பிறகு மடியில் குழந்தையுடன் வந்தால், பெண்ணையும் மருமகனையும் பார்த்து உனக்கு மகிழ்ச்சி ஏற்படாதா?'

வாசந்தி மெதுவாக அடிவைத்து அறைக்கு வெளியே வந்தாள். கதவை மெல்லத் திறந்தாள். இலேசாகவும் ஒலி கூட ஓசை செய்ய வில்லை. பொட்டலத்தைத் தரையில் வைத்துவிட்டுத் தனக்குப் பிறப்பளித்த மண்ணைத் தொட்டுக் கும்பிட்டாள். ஒரு சிறிது மண்ணை எடுத்துத் தலையில் இட்டுக் கொண்டாள். பிறகு மனத்திற்குள் சொல்லலானாள், 'வீட்டின் லக்ஷ்மிதேவியே! நீ என்னை ஆசிகூறி அனுப்பு. குற்றத்தை மன்னித்துவிடு!'

வாசந்தி துளசியின் இலையை எடுத்து முகர்ந்து பார்த்தாள். இரு இலைகளைச் சட்டைக்குள் வைத்துக் கொண்டாள். மேலே ஒரு பார்வை பார்த்தாள். வானில் நிலா ஒளி வீசிக்கொண் டிருந்தது. சற்றும் மேகம் இருக்கவில்லை. சந்திரன் அவளையே பார்ப்பது போன்று அவள் நினைத்தாள்.

வீட்டிற்குப் பின்புறம், தோட்டத்தையும் தாண்டி டனுவா கட்டத்தை நோக்கி அவள் புறப்பட்டாள். வடக்கு-தெற்கு இரு புறத்துச் சக்திகளும் தனித்தனியே அவளை வெவ்வேறு திசைகளுக்கு இழுக்க ஆரம்பித்தன. ஆயினும் அவளுடைய உடல் கட்டத்தை நோக்கிச் சென்றுகொண் டிருந்தது. பாக்கு மரத்தின்மீது ஒரு அணில் உட்கார்ந்துகொண் டிருப்பதை அவள் நிலாவொளியில் கண்டாள். வெட்டுக்கிளி தன் சிறகினால் அஞ்சுசிச் செடியில் இனிமையான ஒலியைக் கிளப்பியது. மரங்கொத்திப் பறவை மரத்தைக் கொத்துவதை நிறுத்தி விட்டது. வாசந்தியைப் பார்க்கத் தான் அது அப்படிச் செய்ததோ! தலங்குக் கட்டத்தில் பக்தி இசை ஒலித்துக் கொண்டிருந்தது. பக்திப் பரவசத்தில் படகோட்டிதான் பாடுகிறானே — 'கண்ணனைப் பிரிந்த ராதை கண்ணீர்விட்டுக் கலங்கு கிறாள்!' கட்டத்தை நெருங்க இன்னும் சிறிது தூரம்தா னிருந்தது. மூங்கில் மரங்கள் கட்டத்தை, நதிக்கரையின் அந்த இடத்தை மறைக்கின்றன. நாவல் மரங்களி னிடையிலிருந்து வீசும் நிலவொளி அவளுடைய உடலின்மீது படுகிறது. அவளுடைய கால்கள் கட்டத்தை நோக்கிச் செல்லவில்லையா? கன்னங்களில் நீர் வழிந் தோடியது. மூச்சை பலமாக விட்டுக் கொண்டிருந்த வாசந்தியின் உடலை நிலவொளி நக்கிச் சுவைத்துக்கொண் டிருந்தது. முன்னே பல அடிகள் அவள் சென்றாள். மூங்கில் மரங்களையும் கடந்து விட்டாள். சோனாய் நதி கண்களுக்குப் புலப்பட்டது. ஒரு

படகின் மீது வெண்மையான உடையணிந்த ஓர் உருவம் நிற்பது தெரிந்தது. அந்த உருவம் தனஞ்சயனுகத் தானிருக்கவேண்டும். மற்ருெருவன் புகை பிடிப்பது தெரிந்தது. அவன் படகோட்டியாக இருக்க வேண்டும்.

திடீரென்று அவளுக்கு ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. கையிலிருந்த மோதிரத்தின்மீது அவளது பார்வை சென்றது. அவள் மோதிரத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். இந்த மோதிரம் மதுராவின் தாய் அவளுக்கு அணிவித்த தாயிற்றே. இதை அணிவித்துவிட்டு அவள் வாசந்தியைத் தனக்குரியவள் என்று நினைத்துச் சொன்னுள், 'இன்னும் இரண்டு நாட்களில் நாங்கள் உனக்கு உற்றவர்களாகிவிட மாட்டோமா என்ன ?'

அவளைத் தன் மருமகளாக்கிக் கொள்ள அவர்கள் எவ்வளவு ஆசைப்பட்டார்கள் ! மோதிரத்தில் பதிக்கப்பட்டிருந்த முத்து, நிலவொளியில் மின்னிற்று. முன்பின் அறியாத மதுரா எனும் இளைஞனின் நம்பிக்கைதான் ஒளிவிட்டாற்போலிருந்தது. நாளைக்கு அந்த மனிதனுக்கு அவமானம் ஏற்படாதா? அண்ணன் போக்ராம் நாளையிலிருந்து ''நான்கைந்து கிராமங்களில் எட்டிக்கூடப் பார்க்க முடியாமல் தவிப்பான். அவள் ஓடிவிட்ட துயரைத் தாங்க முடியாமல் தாய் இறந்துவிட்டால்? உன்னுல் தான் இந்தமாதிரி நடந்திருக்கிறது'' என்று நாளைக்குத் தருலதாவின் பேரில் அண்ணன் எரிந்து விழுவான்.

அவர்கள் படகின் மேலேறித் தன்னைப் பார்த்துவிடப் போகிருர்களே என்று எண்ணிப் பலாமரத்தின் பக்கம் அவள் மறைந்து கொண்டு நின்ருள். மோதிரத்தைக் கழற்றி எறிந்துவிட எண்ணிஞள். ஆனுல் அப்படிச்செய்ய முடியவில்லை. அவள் இந்து மதத்தவர் வீட்டுப் பெண்ணுயிற்றே! அது இறைவனைச் சாட்சியாகக் கொண்டு அவளுக்கு அணிவிக்கப்பட்ட மோதிரம். அன்று வெற்றிலைபாக்குத் தட்டின் முன் அவள் விழுந்து கும்பிட்டாள். எல்லாவித மங்களகரமான பொருள்களையும் வணங்குவது என்ருல் இறைவனை வணங்குவது என்று பொருள். அன்றிலிருந்தே தார்மிக முறைப்படி, அவள் வேருெரு வீட்டைச் சேர்ந்தவளாகிவிட்டாள். அவளால் அந்த ஆடவனை ஏமாற்றமுடியாது. இதுவரை தனஞ்சயன் அவளைத் தொட்டது கிடையாது. இன்னும் அவள் புனிதமான கன்னிதான்.

இந்த உணர்வு இன்னும் சிறிது நேரத்தில் தீவிர மாகிவிட்டது. எங்குமே பார்க்காமல் அவள் நேராக வீட்டுச் சுவற்றருகே ஓடிவந்து

விட்டாள். மெள்ளக் கதவைத்திறந்து பொட்டலத்தை மூலையில் ஒளித்து வைத்துவிட்டாள். பிறகு கதவை வேகமாக மூடினாள். தாய் விழித்துக் கொண்டாற்போல் தெரிந்தது. மகள் எழுந்து 'வெளிப் பக்கம்' சென்றிருக்கிறாள் என நினைத்து அவள் குரல் கொடுக்கவில்லை. வாசந்தி படுத்துக் கொண்டாள். உடல் நெருப்பாய்க் காய்ந்தது. சிறிது நேரத்தில் சேவல் இரண்டாம் குரல் கொடுத்தது. இதற்குள் படகை எடுத்துக்கொண்டு அவர்கள் பாப்சிலா திரும்பியிருப்பார்கள் என அவள் நினைத்தாள். இவ்வளவு பெரிய அவமானத்திற்குப் பிறகு படகோட்டியிடம் தனஞ்சயன் ஒன்றுமே கூறியிருக்க மாட்டான். காட்டில் துடிக்கும் இலைகளைப் போன்று அவளுடைய உதடுகள் துடித்தன. அவள் சிறு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழுதாள். தாய் விழித்துக்கொண்டு, "வாசந்தி, உனக் கென்னம்மா நேர்ந்துவிட்டது?" என்று கேட்டாள்.

அவள் அழுதபடியே பதிலளித்தாள், "அம்மா, உன்னைப்பற்றி நினைத்துக்கொண்டேன், வருத்தமாகி விட்டது. உன்னைவிட்டுப் பிறர் வீட்டில் நான் போயிருந்தால் எனக்கு எல்லாமே சூனியமாகத் தெரியும், அம்மா. எனக்கும் உயிர் நடுங்குவது தோன்றுது."

தாய் அவளுக்கு ஆறுதலளித்தபடி கூறினாள், "அசட்டுப் பெண்ணே! இதற்காகவா இப்படி அழவேண்டும்? உன் உடல் நிலைதான் கெட்டுவிட்டதோ என்று நினைத்தேன். கன்னிப்பெண் தாயை மட்டும் மகிழ்விக்கவா பிறந்திருக்கிறாள்? இந்தச் சிறிய விஷயம் கூட உன்னால் புரிந்துகொள்ள முடியவில்லையா?"

## பதினான்கு

அன்றிலிருந்து திருமணம் செய்துகொள்ள மனத்தை ஈடுபடுத்துவது வாசந்திக்கு எளிதாகி விட்டது. நாட்கள் அமைதியாகக் கழிந்து விட்டன. திருமண தினமும் வந்து விட்டது. அப்போது தான் வாசந்தி மதுரானைப்பற்றி அறியும் ஆவலைத் தெரிவித்தாள். அவனைப் பற்றி எல்லா விவரமும் அறிந்து கொண்டாள். அன்னியருடைய வீட்டில் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டும் என்று இடையிடையே தாயும் அண்ணியும் அவளுக்கு அறிவுறுத்தினர்.

'ஜோடனை' தினத்தன்று மாப்பிள்ளை வீட்டார் பெண்ணை ஆடை-ஆபரணங்களால் அலங்கரிப்பது வழக்கம். அந்த அணிக

ளுடனிருந்த வாசந்தி மற்றொரு உலகத்துச் சுகமான கற்பனையில் ஈடுபட்டாள். தன் மனத்தை மதுராவிடம் அவள் லயிக்கச் செய்து கொண்டிருந்தாள். பல தினங்களுக்கு முன்பு தாய் கூறிய அறிவுரைகளை இப்போது தன் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகக் கருதினாள். ஒருநாள் தாய் அவளிடம் கூறினாள், 'உண்மையில் நல்ல பெண்ணாக ஒருத்தியிருந்தால், அவளுடன் எப்படிப்பட்ட ஆடவனும் சுகமான இல்வாழ்க்கை நடத்துவான்...எந்நிலையிலும் பிறருடன் ஒத்துப் போகத் தெரிந்த பெண்ணால்தான் சுகமாக வாழ முடியும்.'

ஓமகுண்டத்திற் கருகே வரும்போது பெரும்பாலும் எல்லாப் பெண்களுக்கும் அழுகை வரத்தான் செய்யும். அருகிலிருக்கும் பெண்களும் கண் கலங்குவார்கள். வாசந்தியும் அப்போது அழுதாள். தருலதா, தாய் சுஜலா இருவர் கண்களிலும் கண்ணீர் நிரம்பி வழிந்தது. ஆனால் வாசந்தி மணமகனருகே அமர்ந்ததுமே வேறு பெண் போலாகிவிட்டாள். மதுராவின் மேல்வேட்டியும், அவளுடைய முந்தானையும் முடிச்சிடப்பட்டிருந்தது. மதுராவுடன் இரண்டறக் கலந்தவளைப் போன்று அவள் உணர்ந்தாள். புனிதமான மந்திரங்கள் உள்ளத்திற்குப் புதிய வாழ்க்கையைப் பற்றி உணர்த்தின. தூய்மையான தர்ப்பையினால் மதுராவின் ஒரு விரலும் வாசந்தியின் ஒரு விரலும் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. அக்கினியைச் சான்றாகக் கொண்டு இல்வாழ்க்கையில் அவள் பிணைக்கப்பட்டாள். ஓமக் கிரியைகள் முடிந்தன. வாசந்தியின் கன்னிப்பருவம் இறந்த காலத்தில் போய் மறைந்துவிட்டது. அவளுடைய மகுட்டில் குங்குமமும், தலையில் முகத்திரையும் நிரந்தரமாக வந்துவிட்டன. மாப்பிள்ளை வீட்டிற்குள் நுழைந்தவுடனே, தாய் தன் மருமகனுக்கு அளித்த பலவித அறிவுரைகளைக் கேட்டு வாசந்தி திடுக்கிட்டாள். முன்பின் அறிமுகமாகாத ஒருவரிடம் தன் மகனைப்போல் அம்மா பேசுகிறாளே! அவரும் கபடமின்றி சுஜலாவின் கால்களைத் தொட்டுக் கும்பிடுகிறார்! சுஜலா தலையின்மீது தன் கரத்தை வைத்து மௌனமாக ஆசீர்வதித்தாள். ஒரே தினத்திற்குள் இரு வீட்டார் அன்புப் பிணைப்பில் கட்டுண்டனர்.

ஓம அக்கினிக்கருகே அமர்ந்திருந்தபோது வாசந்தி மதுரா தன்னுடனிருப்பதை உணர்ந்தாள். முகம் முழுவதையும் மூடும்படி முத்திரை யில்லாவிடினும் பிறருக்கெதிரே அவளால் மதுராவைப் பார்க்க முடியவில்லை. மதுராவைப் பார்க்க அவள் மிகுந்த ஆவலுற்றாள். மதுராவிற்கும் அவளைப் பார்க்க அதே போன்ற பரபரப்பு

இருக்குமோ? முத்திரையின் வழியாக அவனுடைய கை-கால்கள் தான் தெரிந்தன. ஒரு முறை முகத்தை ஒரு கணம் பார்க்க முடிந்தது. ஆனாலும் எப்படி இருக்கிறான் மதுரா என்று அவளால் எண்ணிப் பார்க்க முடியவில்லை. ஆனால் இப்போது தன் வீட்டில் முகத்திரை அவ்வளவு நீளமாகப் போட்டுக்கொள்ளாததால் அவனை நன்றாகப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. முதலில் அவள் கேள்விப்பட்டிருந்த படியே அழகனாக இருந்தான் மதுரா. ஒரு சபைக்கு அழகு தரும் நிலையில் அவன் இருந்தான். முகத்தில் தூய்மையான சுபாவமும் இளமையும் பளிச்சிட்டன. முதல் பார்வையிலேயே அவன் அவளுக்கு உரியவனாகி விட்டான். சுமார் ஆறடி உயரம். சுறு சுறுப்பைக் காண்பிக்கும் உடற்கட்டு. பட்டுத் துணியாலான சட்டை, பித்தான்கள் திறந்திருந்தன. ஆகையால் கட்டுறுதியான உடல் சற்றே தென்பட்டது. மெல்லிய பட்டுச் சட்டையினூடே மார்பகத்து ஓரிரு ரோமங்களும் தெரியவந்தன. பார்க்க அந்த உருவம் ரம்மியமாக இருந்தது. திடீரென்று வாசந்தியின் உள்ளத் தில் ஒரு எண்ணம் எழுந்தது. மதுரா உண்மையில் மென்மையான சுபாவமுள்ளவனாகவும், பிறரிடம் அன்பு கொள்ளும் பண்புள்ளவனு மாக இருப்பான் என அவள் நினைத்தாள். மார்பகத்தில் ரோமங் களுடைய ஆடவர்களைப்பற்றி அப்படிச் சொல்ல அவள் கேட் டிருந்தாள். 'அகன்ற மார்பு' 'பரந்த நெற்றி' இவை ஆடவரின் சிறந்த லட்சணங்கள்.

கணவனுடன் விடைபெற்றுக் கொள்ளும் போது வாசந்தி மிகவும் மரியாதையுடன் அண்ணனை வணங்கினாள். நிலத்தின் மீது கண் ணீர்த் துளிகள் விழுந்தன. அவை துக்கக் கண்ணீர்த் துளிக ளல்ல; அண்ணன் பேரில் அளவற்ற நன்றியுணர்ச்சி கொண்ட அவள் வீட்டை விட்டுச் செல்லும்போது மன வருத்தமுற்றாள். 'நிலத்தில் தோன்றும் மனிதர் நல்லது—தீயது இரண்டும் கலந்து உடையவர்தான். ஆயினும் இந்த நிலமகள் மட்டும் புத்தம் புதிய அழகுடன் என்றும் இள நங்கையாய்க் காட்சியளிக்கிறாள்!' என வாசந்தி நினைத்தாள்.

பலரை அழவைத்துவிட்டுத் தானும் அழுதுவிட்டு வாசந்தி பல்லக் கின்மீது ஏறிக்கொண்டாள். மணமகனின் இடது பக்கம் அமர்ந்து கொண்டாள். புது வாழ்வைத் துவக்க வாசந்தி தர்கியால் கிரா மத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தாள். விரைந்து பறக்கும் குதிரைகள் பல்லக்கை இழுத்துச் செல்லும்போது அவள் தன் கிரா மத்தை நோக்கினாள். கிராமம் அவளை விட்டுத் தொலைவாகச்

சென்று கொண்டேயிருந்தது. ஆனால், தருலதா, அண்ணன் அம்மா, அண்ணனின் குழந்தைகள்—இவர்களை நினைத்து அவள் வருத்தமடைந்தாள். தாயும் தருலதாவும் நனைந்த கண்களுடன் இப்போதும் அவளைப்பற்றித்தான் பேசிக்கொண்டிருப்பார்கள். குழந்தைகள் இன்னும் விசித்து விசித்து அழுது கொண்டிருப்பார்கள். 'இன்றிலிருந்து வீடே சூனியமாகி விட்டது. அவள் வீட்டுக்கே ஒரு அணிகலனாக இருந்தாள்' என்று அண்ணன் யாரிடமாவது சொல்லிக் கொண்டிருப்பான்.

பல்லக்கின் பின்னால் வரும் மற்ற சுற்றத்தாரின் மகிழ்ச்சி ஆரவாரக் குரல்கள் கேட்டபோதிலும், 'காலி' (நாதசுவரம் போன்ற இசைக் கருவி) யின் இசை அவளுடைய வேதனையை அதிகப்படுத்திற்று.

திடீரென்று அவளுடைய விம்மல் மதுராவின் செவிகளில் பட்டது. அவன் அவளுடைய முதுகில் கையை வைத்தான். அவளுக்கு ஒரு நடுக்க உணர்ச்சி ஏற்பட்டது. இதுவரை தான் காணாத ஒரு ஆடவன் அவளைத் தொடுகிறான். அக்கினியைச் சாட்சியமாகக் கொண்டு அவன் அடைந்த உரிமை அது. அவன் கூறினான், ' அழாதே! எனக்கு வருத்தமாக இருக்கிறதல்லவா ?'' அவனுடைய குரல் இனிமையாக இருந்தது. வாசந்தியின் மனம் அமைதியடைந்தது. ஆம், இந்த ஆடவனால் அன்பை அளிக்க முடியும். நல்லவனாக இருக்கிறான். இவ்விதம் ஆறுதலளிக்காமலிருந்தால் அவளுடைய உள்ளம் சூனியமாக இருந்திருக்கும். ஆடவரின் ஒரு சொல், ஊக்குவிக்கும் ஒரு சொல் போதும். ஆயிரமாயிரம் காரியங்களைச் செய்ய அது உதவும். கிராம நடனத்தில் ருக்மிணிக்கு மன நிம்மதியளித்தது கண்ணபிரானின் ஓர் அன்புச் சொல்தானே! பட்டுப் பீதாம்பரத்தால் கண்ணபிரான் அவளது கண்ணீரைத் துடைத்துச் சொன்னானே, 'எதற்காக நீ வருத்தமடைகிறாய்? நான் விரைவில் உன்னை அழைத்துக்கொண்டு செல்கிறேன்' என்று.

மோராபூர் கிராமத்திலிருந்து கிழக்கே இரண்டு மைல் தொலைவில் அமைந்திருக்கும் தர்கியால் கிராமத்திற்கு வாசந்தி இதற்கு முன்பு இரு முறைகள் வந்திருந்தாள். அந்தக் கிராமமும் மோராபூரைப் போன்றுதானிருந்தது. சோணாய் நதி இங்கு திரும்பிப் பாய்ந்து கொண்டிருந்தது. அந்த ஒரு பேதம்தான் காணப்பட்டது. மதுராவின் வீட்டு வாசலிலேயே சோணாய் நதி ஓடிற்று. அவனுடைய வீடு வடக்கை நோக்கி இருந்ததுதான் அதற்குக் காரணம்.

திருமணமாகிய மறுநாளே வாசந்தி மாமி, மாமனார், நாத்திகள் எல்லோருடனும் பாசத்துடன் பழகினாள். பாரு, புத்லி-இரு நாத்தி

களும் மிகவும் உற்சாகம் மிகுந்த பெண்கள். 'கோபா' மைதானத்தில் மூன்று ஆடுகளைக் கொண்டு எல்லோருக்கும் விருந்தளிக்கப்பட்டது. மணமக்களைச் சாக்காகக் கொண்டு வேடிக்கைகளும் கேளிக்கைகளும் நடந்தன. இரவு வெகு நேரம்வரை எல்லாம் நிகழ்ந்து கொண்டிருந்தன. வாசந்திக்கு இது மிகவும் பிடித்திருந்தது, கிராம மக்களுக்கு அவள் மிகவும் பிடித்தவளாகிவிட்டாள். 'பெண் நல்ல லட்சணம். லக்ஷ்மி மாதிரியிருக்கிருள்' என்றனர் சிலர். 'பகீரத் சாஹெப்! உங்கள் மகன் அதிருஷ்ட சாலிதான்' என்று புகழ்ந்தனர் பலர். ஒரு பெண்மணி மாமியிடம் சொன்னுள், 'நல்ல பொருத்தமான ஜோடி. மானைப் போன்ற நீண்ட முகம் மிகவும் நல்ல லட்சணமாயிற்றே! அப்படிப்பட்ட பெண் நுழையும் வீட்டில் எங்கு பார்த்தாலும் சுபிட்சம் தான் நிரம்பியிருக்கும்!' மறைந்திருந்து மக்களின் இக் கருத்துக்களைக் கேட்டுக் கொண்டிருந்த வாசந்தி பூரித்துப் போனுள். அவளுக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டது. ஓர் ஆடவனைத் தன் அன்பினுலும் அழகினுலும் எளிதில் வசப்படுத்தி விடலாம் என அவள் நினைத்தாள்.

இன்று இரவு வாழ்வின் எல்லா இரவுகளைக் காட்டிலும் விசேஷமான சிறப்புத் தன்மை பெற்றதாயிற்றே! இந்த ஓரிரவுதானே எல்லோருக்கும் எப்போதும் நினைவில் அழியாமலிருக்கும். பலர் இந்த இரவுக்காக நம்பிக்கையுடன், கற்பனையுடன் காத்துக் கிடக்கின்றனர். இந்த இரவில்தான் இளம் பெண்கள், ஆடவரின் நம்பிக்கை, ஆசை, அன்பு, காமம் எல்லாம் சமுதாயத்தின் ஆமோதிப்பைப் பெற்று ஆனந்த நடனமாடுகின்றன!

மூன்று அறைகள் நிறைந்த அகல-நீளமான அறையில் இவ்வளவு அழகாகப் படுக்கையை யார்தான் ஜோடித்தார்களோ, தெரியவில்லை. ஊதுவத்தியின் நறுமணம் அவளது உள்ளத்தில் காதலுணர்ச்சியைக் கிளப்பி விட்டது. புத்லி, பாரு, மற்றும் அண்டை வீட்டுப் பெண் மூவரும் சேர்ந்து அவளைப் பிடித்து அறைக்குள் தள்ளினர். உயிரே போய்விடும் போல் வாசந்தி வெட்கத்தால் துடித்தாள். திடீரென்று எதிர்பாராத போது மதுரா உள்ளே நுழைந்தால் அவனுக்கும் இப்படித்தானே இருக்கும்? மெள்ளக் கூட அவனுடைய முகத்தை அவளால் பார்க்க முடியாது. அவளுக்குத் தருலதாவின் நினைவு வந்தது. அவளுடைய வாழ்விலும், அவளைப் போன்ற பலருடைய வாழ்விலும் இப்படி ஒரு நாள் வந்திருக்கும். இந்த ஒரு நாளை எதிர்பார்த்து ஏங்கும் காரணத்தாலும், அந்தக் கற்பனையினுலும் எத்தனையோ பெண்களுக்கு ஆடவர் தேவதை போன்று

காட்சியளிக்கின்றனர். அவள் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். வெளியே வெண்ணிலவு. நிலவொளி காட்டுச் செடி கொடிகளைக் கூட மல்லிகைத் தோட்டமாகி விட்டது. சற்றுத் தொலைவில் ஓடிக் கொண்டிருந்த சோனுய் நதி அவளுக்கு யமுனை போலும், தான் பிருந்தாவனத்தில் இருப்பது போலும் நினைத்தாள். ஆமாம், தன் கன்னிப் பருவத்தை இழப்பதற்கு முன்பு, இந்த முகூர்த்தத்தில் இப்படி நினைக்க நன்றாகத்தானிருக்கிறது. இப்படியே தன்னைத்தான் தேற்றிக் கொண்டாக வேண்டும். இதில்தான் புத்திசாலித்தனம் இருக்கிறது. தனஞ்சயனின் நினைவு வந்த போதிலும், அது தெளிவற்று ஸ்திரமற்று வந்து மறைந்து போய் விட்டது. காலம் எனும் வெள்ளத்தில் கலந்து எல்லையற்ற இடத்தில் போய்க் கலந்துவிடும்.

திடீரென்று அவளுடைய சிந்தனை வேகம் தடைப்பட்டது. சற்று வெட்கத்துடன் மதுரா அறைக்குள் வந்தான். கதவைத் தாளிட்டான். ஏற்றி வைக்கப்பட்டிருந்த விளக்கொளியை அதிகமாக்கினான். ஒரு முறை வாசந்தியைப் பார்த்தான். ஜிப்பா ஜேபியிலிருந்து இரண்டு காகிதத் துண்டுகளையும் ஒரு பவுண்டன் பேனாவையும் எடுத்து ஸ்டூலின்மீது வைத்தான். ஒரு முறை தன் தலையைத் தடவிக்கொண்டான். பிறகு ஜன்னலின் திரை வழியாக அறைக்குள் வந்த நிலவொளியைப் பார்த்தான்.

தருலதா கூறியபடியே வெற்றிலைத் தட்டை மதுராவின் கால்களில் வைத்து வாசந்தி அவனை வணங்கினாள். அவன் ஒன்றும் கூறாமல் தலையை அன்புடன் தடவிக் கொடுத்தான். தான் படுக்கையின் மீது அமர்ந்துகொண்டு, அவளை 'வா, உட்கார்' என்று அழைத்தான்.

பயம், சங்கோசம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு அவள் அவனருகே உட்கார்ந்து கொண்டாள். அவளுடைய விரலைப் பிடித்தபடியே, "என்ன, வீட்டைப் பற்றிய நினைவு வருகிறதா?" என்று கேட்டான்.

"இல்லை, வரவில்லையே!"

"என்னைக்கண்டால் உனக்குப் பயமாக இருக்கிறதா?"

"இல்லை."

ஆனால் வாசந்தியின் உடல் முழுதும் நடுங்கிக் கொண்டிருந்தது. குரல் வெளிவராமல் தொண்டையிலேயே சிக்கிக் கொண்டாற் போலிருந்தது. அவன் அவளை ஏதோ இந்திரஜாலத்தில் சிக்கவைத்து விட்டானா என்ன? தலை முகத்திரையை விலக்கிவிட்டு அவன் அவளுடைய முகத்தையே பார்த்துச் சொக்கிக் கொண்டிருந்தான்.

அந்தப் பார்வையில் மோகத்தைவிட அன்பு அதிகமாகத் தென் பட்டது.

"வீட்டிலும் உன்னை இதே பெயரிட்டுத்தான் அழைப்பார்களா?" மதுரா கெட்டிக்காரன். எப்படியோ ஒரு கேள்வியைக் கண் டெடுத்து விட்டான்.

"ஆமாம், வேறு பெயரிட்டு என்னை அழைக்க மாட்டார்கள்."

"உனக்கு இந்தப் பெயரை யாரிட்டார்கள்?"

"என் சித்தி."

"ஆனால் எனக்கு இரண்டு பெயர்கள் உண்டே!"

"என்னென்ன?"

"கிராமத்தில் மதுரா. மற்ற இடங்களில் 'மன்தன் மண்டல்' இதுதான் எனக்குப் பிடித்த பெயர். மதுரா என்பது ஓரிடத்தின் பெயராயிற்றே. மனிதனுக்கும் இந்தப் பெயரை வைத்து விட்டார் கள் பார்!" தன் நகைச் சுவையைத் தானே ரசித்தபடி அவன் குலுங்கக் குலுங்கச் சிரித்தான்.

"நான் 'தன்' என்று கூப்பிடட்டுமா?"

"உம் பிரமாதமாக இருக்கும். கூப்பிடேன்!"

அவன் மிகுந்த அன்புடன் அவளுடைய முகத்தை வருடினான். அவள் நாணத்தால் முகத்தைத் திருப்பிக் கொள்ளவில்லை.

"நீ ரொம்பவும் அழகு.. இல்லை.. ரொம்ப ரொம்ப அழகாக இருக்கிறாய்!"

"உண்மையாகவா!"

"நம் திருமணம் நடந்ததே, அதைப் போல் உண்மை. இல்லை, தவறு செய்து விட்டேன். அழகாக இருப்பதை இத்துடன் பிணைக்கக் கூடாது. அதாவது—நீ அழகாக இருப்பது—சந்திரன் சூரியனைப் போன்ற உண்மை!"

"வக்கீலைப் போல் பேசுகிறீர்கள், என்னால் மறுத்துச் சொல்ல முடியவில்லை!"

"அதன் பலத்தால் தானே வாழமுடிகிறது! எத்தனைச் சிக்கல் களைச் சரிபடுத்த வேண்டியிருக்கிறது. வாயில் நல்ல வார்த்தை இல்லாவிட்டால் வாழ வழி கிடையாது!"

"அப்படியென்றால்?"

"நான் உயரமாக இருக்கிறேன். பழங்குடி மக்களைப் போல் இருக்கிறேனா?"

பெரிய துரையைப்போல் அழகாக இருக்கிறீர்கள்! கூட்டத்தையே அழகுபடுத்தும் உருவம்!"

"சேச்சே! நானு! கூரைமேல் காய்த்திருக்கும் பூசணிக்காய் போலல்லவா என் முகம் இருக்கிறது! மேலும் கீழும் ஒரேமாதிரியாக!"

"யார் அப்படிச் சொன்னுர்கள்?"

"நானே தான் சொல்கிறேன்."

"நீங்கள் சொல்லிவிட்டால் என்னவாம்?"

"உன்னைச் சிரிக்க வைக்க எனக்கு வேருெரு விஷயமும் கிடைக்க வில்லை."

"அதனுல் என்ன? அதற்காக உங்களையே நீங்கள் பழித்துக் கொள்ள வேண்டுமா என்ன?"

"அது எனக்குப் பிடிக்கிறது!"

அவர்களுடைய வேடிக்கைப் பேச்சு முடியும் தருணம் வந்தது. மதுராவின் இரு கரங்களும் அவளுடைய முகத்திலிருந்து கீழ்ப்பக்கம் நழுவின. இரவின் நிசப்தம் வாசந்தியை மதுராவின் பக்கம் ஈர்த்தது. அவளுக்கு முதலில் மிகவும் விசித்திரமாக இருந்தது. உடலில் ரத்த ஓட்டம் வேகமாக அதிகரித்த போதிலும் ஆத்ம சமர்ப்பணம் செய்வது மிகவும் கடினமாக இருந்தது. விபரீதமான நிலையில் அவளிருந்தாள். ஆனுல் அவனுக்கு உரிமையிருக்கிறதே! அவளுக் கும்தான்.

அவள் தன் முகத்தை மூடிக்கொண்டாள். விரல்களின் இடை வெளியிலிருந்து பார்த்தாள். எதிரே பெஞ்சியின்மீது இரண்டு டம்ளர் நிறையப் பால் வைக்கப்பட்டிருந்தது. மாமியாரின் கட்டளைப் படி பாரு வைத்திருந்தாள். இன்றிரவு இருவரும் பால் சாப்பிட்டாக வேண்டுமா? இந்த இரவில் ஏற்படும் களைப்பையும், இனிய சிரமத் தையும் போக்கிக் கொள்ளத்தான் பால் சாப்பிடச் சொல்கிருர் களோ? உள்ளத்தில் ஒளிந்து கிடக்கும் ஆசைக்கு இன்றைய நாணம் நிறைந்த இரவில் நீதி சம்பந்தப்பட்ட ஒப்புதல் கிடைக்கிறது. இதுவும் சந்திரனையும், சூரியனையும் போன்று உண்மையானது.

அவள் மூச்சுத் திணறக் கூறினுள், "தன்! விளக்கை..." முகத் தோடு முகம் சேர்த்து அவன் கேட்டான், "விளக்கை என்ன செய்ய வேண்டும்?"

வெட்கத்தை விட்டு அவள் பேசினுள், "வெட்கமாக இருக்கிறதே விளக்கைக் கொஞ்சம்..."

அவன் விளக்கை அணைத்துவிட்டான். ஜன்னலின் வழியாக வந்து கொண்டிருந்த நிலவொளிதான் அறையின் இருளை லேசாகக் குறைத்துக்கொண் டிருந்தது. இந்த இருள் முதல் சந்திப்பின் நாணம், தயக்கம் எல்லாவற்றையும் போக்கி விட்டது. புத்துணர்ச்

சியின் சுவையைப் பருகிக்கொண்டிருக்கும் இரு உயிர்களின் தூய்மையான உள்ளத்தையும், அதன் செயலையும் காமத்தின் வேகம் வந்து ஆக்கிரமித்துக் கொண்டது. ஓருடல் மற்றோருடலின் அருகே வேகமாகச் சென்றது. ஈருடலின் ஒரே விதமான திருப்தி எனும் உணர்வு இரவின் நிசப்தத்தையும், இருளையும் இன்னும் அதிக ரகசியமானதாக, போதையளிக்கக் கூடியதாகச் செய்தது. நில வொளி வண்ணம் நிறைந்ததாகக் காணப் பட்டது, ஈருடல் ஒன்றா கும் துடிப்பு புருஷன், பிரகிருதி இவர்களுடைய படைப்பின் இந்திர ஜாலம், ஒரேசந்தம், ஒரேராகம், உடலுடன் உடலைக் கலக்கச்செய்யும் பழமையான' தீவிரமான வேட்கை !......

## பதினைந்து

வாசந்தி வீடு முழுவதையும் மகிழ்ச்சியால் நிரப்பி விட்டாள். புத்லி, பாரு இருவரும் தங்கள் அண்ணியை விட்டு ஒரு கணங்கூடப் பிரிவதில்லை. மருமகளின் பணிவிடைகளையும் மரியாதையையும் பெற்ற பனிதாவும் பகீரதனும் அவளைப் புகழ்ந்தபடி இருந்தனர். திரு மணத்திற்கு முன்பெல்லாம் இரவு வெகுநேரம் வரை கிராமத்தில் மதுரா சீட்டாடிக்கொண் டிருப்பான். இப்போதெல்லாம் மாலை நேரத்திலேயே அவன் வீடு திரும்பி விடுகிறான். ஒரு நாள் மதுரா வாசந்தியையும் அவளுடைய நாத்திகளையும் பட்டணத்திற்கு அழைத்துச் சென்று சினிமா காண்பித்தான். திருமணமான மாதத் தில் இருவரும் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தார்கள். பேபேஜியா கிராமத்திலுள்ள சித்தியின் வீட்டிற்கு மதுரா தன் மனைவியை முதல் முறையாக அழைத்துச் சென்று காண்பித்தான். பிறகு மாகுரா, ரூபஹி, பாலுக்மாரி, கபோஹரா, ரஹா முதலிய இடங்களுக்கு வாசந்தியை அழைத்துச் சென்றான். 'ரஹா'வில் ஒரு சர்க்கஸ் கூட்டம் வந்திருந்தது. வாசந்தி அதிருஷ்டசாலிதான். அவளை மதுரா சர்க்கஸ் பார்க்கக் கூட அழைத்துச் சென்றான். மதுரா விற்குப் பெருமை தாங்க முடியவில்லை. தன் மனைவியின் அழகை எத்தனைபேர் புகழ்ந்து பாராட்டுகின்றனர்! ஹுஸேன் மண்டலின் தாய்கூட " மன்தன்! அவளைப் பார்த்தால் பெருமையாக இருக்கிற தடா. உங்கள் இருவரையும் பார்த்தால் சோனாய் நதியின் கரை யோரத்தில் களிப்புடன் வாழும் சக்ரவாகப் பறவைகளின் ஜோடி யைப் போலிருக்கிறதடா!" என்று பாராட்டினாள்.

திருமணத்திற்குப் பிறகு வாசந்தியின் தாய் அவளைப் பார்க்க வந்திருந்தாள். வீட்டைப் பார்த்து அவள் மிக்க மகிழ்வுற்றாள். தருலதாவும் உடன் வந்திருந்தாள். அவள் வாசந்தியைப் பல விதங்களில் கேலி செய்தாள். போக்ராம் பட்டணம் செல்லும் போதெல்லாம் வந்து வாசந்தியைப் பார்த்துவிட்டுச் செல்வான். வாசந்தி மிகவும் மகிழ்வுற்றுக் காணப்பட்டாள். நாற்புரங்களி லிருந்தும் சுகம் அவளை நாடி வந்தது. ஆனால் ஒரே ஒரு நிகழ்ச்சி தான் அவளை வருத்தமுறச் செய்தது. போக்ராம் தன் சீர்மை கெட்ட ஒரு செயலை இன்னும் விடவில்லை என்பதைத் தன் அண்ணியிட மிருந்து வாசந்தி தெரிந்துகொண்டாள். சுஜலாவிற்கும் இது பற்றித் தெரிந்து விட்டது. இதே கவலையில் அவளது நோய் அதிகரித்துக் கொண்டே போயிற்று. எப்போதும் இருமிக்கொண்டே யிருந்தாள். பட்டணத்து வைத்தியரிடமிருந்து போக்ராம் மருந்து வாங்கி வந்து கொடுத்தான். அவனிடம் கோபம் கொண்ட தாய் அவன் வாங்கி வந்த மருந்தைத் தொடாமலிருந்தாள். "என்னைப் பற்றி நீங்கள் ஏன் இவ்வளவு கவலைப்படுகிறீகள்? மரணமடையும் நாள் அருகே வருகிறது. மருந்தால் பின் என்ன பயன்? போக்ராம் வாங்கி வரும் மருந்தை நான் சாப்பிட மாட்டேன், தரு! வீட்டிற்குள் பாவச் செயல் நுழைந்து விட்டது. என்னைக் கடவுள் விரைவில் அழைத்துக் கொண்டு சென்று விட்டால் நன்றாக இருக்கும் என்று அவள் கூறுவாள்.

வயது முதிர்ந்தவர்கள் இவ்விதம் விரும்பினால் அதேபோல் இறந் தும் போய் விடுகின்றனர். வாசந்தி இவ்விதம் பலர் மறைந்திருப் பதைப் பார்த்திருந்தாள். தர்கியால் கிராமத்தில் அவள் இருக்கும் போது ஒரு வாய் நீர்கூட அவளிடமிருந்து வாங்கி அருந்தாமல் தாய் இறந்து விட்டால், அவளுக்கு மன நிம்மதி ஏற்படாது. இவ்விதம் நினைத்த வாசந்தி ஒருநாள் அழுது கொண்டே இதுபற்றி மதுராவிடம் தெரிவித்தாள். அதற்கு அவன், "இதையெல்லாம் எண்ணிக் கொண்டு ஏன் வீணாக வருத்தப் படுகிறாய்? நீ கொடுத்து வைத்தி ருந்தால் உன் விருப்பப்படியே நடக்கும். தாயின் பேரில் உண்மை யான அன்பிருந்தால் தக்க தருணத்தில் நீ அவளிடம் போய்ச் சேர்ந்து விடுவாய்" என்று கூறினான். அவனுடைய வார்த்தைகள் வாசந்திக்கு ஆறுதலளித்தன.

திருமணமாகி மூன்று மாதங்கள்தான் கழிந்திருந்தன. அதற்குள் வாசந்தியின் வாழ்வில் ஒரு சுழல் ஏற்பட்டு விட்டது. பயங்கரமான

புயல் அவளுடைய வாழ்வின் சுகத்தையே மண்ணோடு மண்ணாக்கி விட்டது.

பேச்சு காற்றைப் போல் பரவும் என்று சொல்வார்கள். கிராமத்து பலசரக்குக் கடைக்கு முன்பு சிலர் ஏதோ விவாதத்தில் மும்முரமாக ஈடுபட் டிருந்ததை ஒருநாள் மதுரா கவனித்தான். அவனும் கூட் டத்திற்கிடையே போய் நின்று கொண்டான். அவனை அங்கிருந்த யாருமே கவனிக்கவில்லை. பேச்சுத்தொடர ஆரம்பித்தது. முதல் நாளிரவு நேரத்தில் டல்புரியா கிராமத்து மக்கள் போக்ராமைப் பிடித் துக் கட்டிப் போட்டு விட்டனர். போலீசுக்குப் பயந்து பிறகு அவனை விட்டுவிட்டனர். டல்புரியாவைச் சேர்ந்த ஒரு அழகியுடன் -யாராலோ விலக்கி வைக்கப்பட்ட அந்தப் பெண்ணுடன்-இருக்கும் போது போக்ராம் கையும் களவுமாகப் பிடிபட்டு விட்டான்.

ஒரு செல்வந்தன் நடத்தை கெட்டிருப்பதைக் கண்ட மக்களுக்கு அவனைப் பற்றித் தூற்ற வாய்ப்புக் கிடைத்து விட்டது. வம்பளக்கும் பெண்டிருக்கு வெற்றிலை போட்டுக் கொண்டு உமிழ்ந்தபடியே பேச வாய்ப்புக் கிடைத்தது. மதுரா நின்று கொண்டிருந்த இடத்திலேயே ஒருவன் கூறினான், " ஆமாம், போக்ராம் தான்! இரண்டு காசு சம்பாதித்து விட்டானாம். தரையில் கால்கள் பதிய மாட்டேன் என்கின்றன. பஞ்சமா பாதகத்திற்கு அஞ்சாதவனைப்பற்றி யார் கேட்பது? புதுப் பணம் வேறு. அவனுடைய தங்கையைத்தான் மதுரா திருமணம் செய்துகொண் டிருக்கிறான். அவள் மட்டும் அண்ணனுக்குக் குறைந்தவளா என்ன? பாப்சிலா கிராமத்தில் மருந்து விற்றுக்கொண்டு திரியும் ஒருவனுடன் அவளுக்குத் தொடர்பு ஏற்பட்டு விட்டது. ஒருநாள் இரவில் அவள் ஓடக்கூடத் தயாராகி விட்டாளாமே!" மற்றொருவன் "இதெப்படி உனக்குத் தெரிந்தது?" என்று கேட்டான்.

"சோனாய் நதியின் அக்கரையிலிருக்கும் படகோட்டியின் மனைவி உயிருடனிருக்கும் வரை ஒற்றர்கள் எதற்கு?" என்று பதிலளித்தான் மூன்றுமவன்.

மதுராவினால் அதற்குமேல் ஒன்றும் கேட்கமுடியவில்லை. எவரும் பார்ப்பதற்கு முன்னமே அவன் கூட்டத்தை விட்டகன்று வந்தான். வீட்டிற்கு வந்தவுடனேயே அவன் விசித்திரமாக நடந்து கொண் டான். வாசந்தியிடம் கடுமையாகப் பேசினான், "உன் அண்ணன் புகழ் எங்கும் கமழ்கிறதே, கேட்டாயா?"

"என்ன?"

"பெரிய மனிதன் டல்புரியாவில் கையும் களவுமாகப் பிடிபட்டு விட்டானும். இது போதாது. பெண் வேடம் போட்டு ஊர்வலத்தில் அழைத்து வந்திருக்க வேண்டும்!"

"தெளிவாகச் சொல்ல மாட்டீர்களா?"

"உன் நடத்தை கெட்ட அண்ணனை டல்புரியா மக்கள் பிடித்துக் கட்டி வைத்திருந்தார்களாம்!"

வாசந்திக்குப் புரிந்து விட்டது. பாவம் அண்ணியின் நிலைமை என்ன ஆகியிருக்குமோ என்று அவள் வருந்தினாள். அதற்கும் மேல் மதுரா நடந்து கொண்ட முறை அவளை அதிகமாக வருத்த முறச் செய்தது. 'இவ்விதம் அவர் பேசவே மாட்டாரே! அண்ணனுக்கு நேர்ந்த அவமானத்தை எந்தத் தங்கையால்தான் பொறுத்துக் கொள்ள முடியும்? ஏதாவது உபாயத்தால் மதுராவுக்கு ஆறுதலளிக்க வேண்டும். ஆனால், இன்று ஏன் இப்படிக் கடுமையாக நடந்து கொள்கிறார்!'

அன்றிலிருந்து மதுரா முற்றிலும் மாறிவிட்டான். தனஞ்சயனை அவன் அறிந்திருந்தான். அதனால்தான் அவனுக்கு அவ்வளவு வருத்தமாக இருந்தது. தர்கியாலைச் சேர்ந்த கலியாவின் வீட்டோருக்கும் மதுராவின் வீட்டவருக்கும் நெடுங்காலப் பகை மூண்டிருந்தது. கலியாவின் மகன் சம்பக் இரண்டு தினங்களுக்குப் பிறகு பலர் முன்னிலையில் மதுராவைப்பற்றி ஏளனமாகப் பேசினான். எல்லோரும் தனகாந்த் கூறியதை ஆமோதிப்பவர்கள் போல் நடந்து கொண்டனர்.

இப்போதுதான் மதுராவிற்கு அவர்கள் பேசிய பேச்சிற்கு விளக்கம் புரிந்தது. மதுராவின் சொல்லும் செயலும் வாசந்தியின் வாழ்வில் ஏதோ விபத்து வரப்போவதை முன் கூட்டியே அறிவித்தன. இப்போதெல்லாம், திருமணமாவதற்கு முன்பு செய்தது போல் மதுரா நேரங்கழித்து வீட்டிற்கு வர ஆரம்பித்தான். வாசந்தியைப் பார்க்காமல் திரும்பிப் படுத்துக்கொள்வான். வீட்டில் இருக்கும் சிறிது நேரத்திலும் ஏதோ சிந்தித்தபடியே இருப்பான். புத்லி, பாரு இருவரும் வீட்டில் சத்தம் செய்தால் காலனைப் போல் பயங்கரமாகி விடுவான். வேலை செய்வதிலும் சலிப்புத் தட்டி விட்டது. உடையணிவதிலும் ஒரு விதமான அலட்சியம். வேலையினின்றும் ஓய்வு பெற்றவனைப் போல் உடையணிந்து கொள்வான். வாசந்தியின் வேண்டுகோள், விருப்பம் எதையும் லட்சியம் செய்வது கிடையாது. தண்மதியம் போன்ற குளிர்ந்த உள்ளம், சித்திரை மாதத்து வெயிலைப் போன்று கடுமையாகி விட்டது. ஒவ்வொரு

பேச்சிலும் குற்றங் கண்டு சீறி விழுவான். "ஒரே சட்டையை எத்தனை நாட்கள் அணிவீர்கள்? இதை அணிந்து கொள்ளுங் களேன்" என்று கூறிப் புதிய சட்டையைக் கொடுத்தால், அதை வாங்கி வீசி எறிவான். "வெளிப்பகட்டிற்காக அன்புடனிருப்பது எனக்குப் பிடிக்காது. எனக்கு ஒன்றும் வேண்டாம், போ" எனப் பதிலளிப்பான்.

"சாப்பிட உட்கார்ந்ததுமே ஏன் எழுந்து விடுகிறீர்கள்? இன்னும் இரண்டு பிடி சாப்பிடுங்களேன்" என்று ஒரு நாள் வாசந்தி கூறினாள்.

"வைத்தியனைப் போல் உபதேசம் செய்யாதே! நீ நன்ருகச் சாப்பிட்டுக் கொழுத்துக்கொள்' என்று மதுரா பதிலளித்தான்.

"பகல் நேரம் பொறிந்து தள்ளும் வெயிலில் நீங்கள் எங்கே செல்கிறீர்கள்? நாள் முழுதும் வீட்டிலேயே தங்க மாட்டேன் என்கி றீர்கள்" என்று ஒரு நாள் வாசந்தி கேட்டாள்.

"என் மீது ஆட்சி செலுத்தவா நீ வந்திருக்கிருய்? உன்னைக் கேட்டுக் கொண்டுதான் நான் வெளியே செல்ல வேண்டுமா என்ன? எங்கள் குடும்பத்து ஆடவர், பெண்களின் சொற்படி நடப்பது கிடையாது. இது நினைவிலிருக்கட்டும்!" என்று மதுரா பதில ளித்தான்.

மதுராவின் வார்த்தைகள் கடுமையாக இருந்தன. அவன் பேசிய முறையோ, இன்னும் கடுமையாக இருந்தது. வாசந்தியால் மதுராவை முன்போல் மாற்றியமைக்க முடியவேயில்லை. ஒரு நாள் அவள் வாய்விட்டழுதாள். பாருவும் புத்லியும் கேட்டுக்கொண்டு பேசாமல் இருந்து விட்டனர். பனிதா பகீரதன் இருவரும் கேட்டும் கேட்காதவர்போல் இருந்து விட்டனர். காரணம் சதிபதிகளின் சண்டை எப்போது துவங்கும் எப்போது முடியும் என்பது யாருக்கும் தெரியாது. அதற்குக் காரண காரியமும் எவராலும் கண்டு பிடிக்க முடியாது. ஆகையால் இதில் தலையிடுவது ஆபத்து. சதிபதிகள் ஒரு கணத்தில் சண்டையை மறந்து சேர்ந்து விடுவர் என்பதும் யாவரும் அறிந்த உண்மை.

வாசந்தியின் அழுகையால் மதுராவின் உள்ளம் இளகவில்லை. அவன் ஆத்திரத்துடன் எழுந்தான், "நீலியைப் போல் அழுது விட்டால் போதுமா? என்னை இப்போது தூங்க விடப் போகிருயா இல்லையா?" என்று கத்தினன். அவள் விசித்தபடியே வேதனை நிரம்பிய குரலுடன் கேட்டாள். "நான் என்ன குற்றம் செய்தேன்? என் பேரில் ஆணை, சொல்லுங்கள். நான் தவறு செய்திருந்தால்,

திருத்திக் கொள்கிறேன். சொன்னால்தானே தெரியும். என்னை வருத்தப் படுத்துவதால் உங்களுக்கு என்ன லாபம்?''

மதுரா ஒன்றும் சொல்லவில்லை. வருத்தத்துடன் பெருமூச் செறிந்தான். வெளியே நின்று கொண்டு புகை பிடித்தவண்ண மிருந்தான். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அறைக்குள் வந்த அவன் தனக்குத் தானே பேசிக்கொள்பவன் போல் கூறினான். ''என் மனத்தில் உள்ளதை உள்ளபடி உரைத்தால் என்னுடன் நீ வாழ்வதென்பது இயலாமற் போய்விடும். பெண்கள் ஆடவரை முட்டாள்கள் எனக் கருதுகின்றனர். மிகவும் சாமர்த்திய சாலிகள் கூட சிக்கிக் கொண்டு விடுகின்றனர் என்பதை அவர்கள் அறிவதில்லை.''

இதைக் கேட்டதுமே வாசந்தியின் தலை 'கிர்ர்' என்று சுற்றியது. காதுகள் நெருப்பாய்க் கொதித்தன. அவள் தன் சுய நினைவை இழந்து விடுவாள் போல் தோன்றிற்று. உடம்பு முழுதும் காய்ச்சல் அடித்தாற் போல் சூடாகிவிட்டது. வாய் தன்னையு மறியாமல் மூடிக் கொண்டது. மறுபடியும் மதுராவிடம் ஏதாவது கூறினால் பயனொன்று மிருக்காது என அவள் அறிந்துகொண்டு விட்டாள். துரதிருஷ்டம்தான் அவளுக்கு வழித்துணை போலும்! மிகவும் சிரமப் பட்டு ஒருவனை உதறித் தள்ளிவிட்டு மற்றொருவனுடன் மன நிம்மதி யுடன் அவள் வாழ்ந்து வந்தாள்.

இல்வாழ்வில் எந்தக் காரணத்தால் சங்கடம் நேரிடும் என்று அவள் அஞ்சினாளோ அதுவே இப்போது வந்துவிட்டது. தனஞ்சயனுடன் உள்ளம் சற்று ஒன்றியது உண்மைதான். ஆனால் இளமையின் கவர்ச்சியின் காரணமாக ஏற்பட்ட நிகழ்ச்சி அது. இதைக் கூறினால் மதுரா தன் மீது கொண்டுள்ள சந்தேகத்தை விட்டு விடுவாரா? அழுதுகொண்டே அவள் எல்லாவற்றையும் அவனிடம் கூறிவிடுவாள். மன்னிக்கும்படிப் பிச்சை கேட்பாள். அவர் மிகவும் நல்ல சுபாவ முள்ளவராயிற்றே. சில மாதத்திற் குள்ளேயே அவளிடம் அவர் அன்பை வாரிப் பொழிந்து விட்டார். இது பொய்யல்ல, அழியா உண்மை.

ஆனால் ஆயிரம் முயன்று பார்த்தும் அவளால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. துணிவும் ஏற்படவில்லை. பயங்கர விளைவை நினைத்த மாத்திரத்தில் அவளுடைய தொண்டை அடைத்துக் கொண்டது. மூச்சு வாங்கும் நிலையில் அவள் அறைக்கு வெளியே வந்தாள். கை நிறைய நீரை எடுத்துத் தலைமேல் விட்டுக்கொண்டு வந்து படுக்கையில் படுத்துக்கொண்டாள். கணவனும் வந்து

படுத்துக் கொண்டான். அகன்ற மென்மையான படுக்கை அவனுக்கு முட்களைப்போல் தைத்தது.

சில தினங்களுக்குப் பிறகு பகீரதன் வீட்டிற்கு ஒரு மனிதன் வந்து வாசந்தியின் தாய் மிகவும் நோய் வாய்ப்பட் டிருப்பதாகக் கூறினான். டாக்டர் ஊசிபோட்டுக்கொண் டிருப்பதாகவும் இரவெல்லாம் மக்கள் கண் விழித்துக்கொண்டு அவளிடம் அமர்ந்திருப்பதாகவும் செய்தி வந்தது. சுஜலா மகளையும் மருமகனையும் காண ஆவலாக இருந் தாள்.

இதைக்கேட்டு வாசந்தி கலவரமடைந்தாள். பனிதாவும் பகீரத னும் வாசந்தியை அவளுடைய தாயிடம் அழைத்துச் செல்லும்படி மகனுக்குக் கடுமையான கட்டளை விடுத்தனர். ஆனால் அவன் அசையா உறுதியுடன் பதிலளித்து விட்டான்–''என் மனைவியை அழைத்துச் செல்லவோ, செல்லாமலிருக்கவோ எனக்கு உரிமை உண்டு. இது பற்றிப் பேச யாருக்கு உரிமை இருக்கிறது ?'' அவன் பெற்றோரையும் மதிப்பதை விட்டுவிட்டான். உறவு முறிந்து விடப் போகிறதே என்று அஞ்சி பகீரதன் தானே சுஜலாவைக் காணச் சென்றான். அன்று மாலை வீடு திரும்பியதும் கூறினான், ''பல நோய் கள் சேர்ந்து வந்திருக்கின்றன. டாக்டரின் ஊசியால் சற்று குண மடைந் திருக்கிறார்கள்.''

''இவர்கள் ஏன் வரவில்லை என்று கேட்டிருப்பார்களே, அதற்கு நீங்கள் என்ன பதிலுரைத்தீர்கள் ?'' என்று பனிதா கேட்டாள். ''மதுரா ஊரில் தானிருக்கிறான். வண்டியில் அனுப்ப ஏற்பாடு செய்ய முடியவில்லை. அதனால்தான் அனுப்பவில்லை'' என்று பதிலளித்ததாகக் கூறினான் பகீரதன்.

இதைக்கேட்ட வாசந்தியின் மனம் சற்றே அமைதியடைந்தது. ஆனால் மதுராவிற்கு ஆத்திரம் மூண்டெழுந்தது. ஒரு பெண்ணிடம் ஒரு ஆடவன் கொடுமையாக நடந்து கொள்வானா என்ன ? நோய் வாய்ப் பட்டிருக்கும் தாயைக் காணச் செல்லக் கூட அனுமதிக்காத அளவிற்கு அவன் அவ்வளவு குரூர மனம் படைத்தவனல்ல. ஆயி னும் அன்றிரவு வாசந்தி அழவில்லை. ஆனால் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. பொழுது விடிந்தவுடனே படுக்கையறையி லிருந்தபடியே உறுதி ஒலிக்கும் குரலுடன் அவனிடம் கூறினாள், ''நான் என்ன தான் குற்றம் செய்திருந்தாலும் சரி. அதற்காக என் தாய் என்னைக் காணாமலிருக்க அவள் என்ன தவறு செய்துவிட்டாள்? விலைக்கு வாங்கிய அடிமையைப் போல் என்னை நீங்கள் நடத்துகிறீர்கள்.'' அவனும் அதே உறுதியுடன் பதிலளித்தான்-''நான் உன்னைப்

பிடித்துக் கட்டிவைத்திருக்கிறேனு என்ன ? போயேன். திரும்பி வராவிட்டாலும் பரவாயில்லை.''

‘‘அப்படியானல் ஏன் மணம் செய்து கொண்டீர்கள்?''

‘‘ஆம், தவறு செய்து விட்டேன்.''

‘‘உங்களுக்கு என் பேரில் ஏதாவது பெரிய சந்தேகம் உண்டாகியிருக்கிறதா?''

‘‘சந்தேகப்படுவதற்குத் தேவை கிடையாது. இரண்டு காதுகள் இருந்தால் போதுமே.''

இந்த வார்த்தைகளை மதுரா தனக்குள் சொல்லிக கொண்டான். திடீரென்று சிந்தனையாளரைப் போல் ஆக அவன் நினைத்தான். தெளிவாகப் பேசி விடவேண்டும் என்று அவன் கருதினான். அவனுடைய வாய்வார்த்தைகள் அவ்வளவு கடுமையாக வெளி வந்துகொண்டிருந்தன.

வாசந்தி கூறினுள், ‘‘ஒன்றுக்குப் பத்தாகப் பிறர் கூறக் கேட்பதை விட என்னிடமிருந்தே கேட்டு விடுங்கள்.''

மதுரா உடனே அவளைப் பார்த்தபடி நின்றான். அவள் பேசுவது உண்மைதானு என்று ஊகிப்பதற்காக அவளது வாயையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தான். அவளைப் பார்த்தால் அவனுக்கு இரக்கமும் தோன்றிற்று. அவளைப் பேச அவன் அனுமதித்தான்.

துடி துடிக்கும் அவளது வாழ்வின் ஒரே ஆதாரம் மதுராதான் என்றறிந்த வாசந்தி அவனிடம் எல்லாவற்றையும் கூறினுள். தனஞ்சயனுடன் அவளுக்கிருந்த நட்பு பற்றியும் அதனுல் அவளுடைய கற்புக்கு இழுக்கு வரவில்லை என்பது பற்றியும் அவனுக்கு எடுத்துரைத்தாள். அது எப்படி முடிவுற்றது என்றும், நதிக்கரை வரை சென்று எப்படித் திரும்பி ஓடிவிட்டாள் என்றும் கூறினுள். கதையை முடித்த பிறகு அவள் மனம் விட்டு அழுதாள், மதுராவின் கையைப் பிடித்து உலுக்கியபடி அவனைப் பல முறைகள் கேட்டாள், ‘‘நீங்கள் என்னை மன்னித்து விட்டீர்களா, சொல்லுங்கள். என் மீதிருந்த சந்தேகம் தீர்ந்ததா ?''

மதுரா கற்சிலை போன்று அசைவற்றிருந்தான். கண்கள் மட்டும் கண்ணீரால் நிரம்பிவிட்டன. பனியன் முழுதும் வியர்வையினுல் நனைந்து விட்டது. அவன் ஒன்றும் சொல்லாமல் எழுந்து விட்டான். முன்பை விட அவனுடைய மனம் அதிகமாக நொந்து விட்டது என்று வாசந்தி தெரிந்து கொண்டு விட்டாள். சுய நினைவிழந்த அவள் தரையில் போய்ப் படுத்துக் கொண்டாள்,

முற்றத்திலிருந்து சைக்கிளை எடுக்கும் ஓசையைக் கேட்டு அவள் ஓடோடி வெளியே வந்தாள். கரும்புச் சாறு எடுக்கப்படும் செக்கி னருகேயிருந்த சைக்கிளை எடுத்த மதுரா காற்று நிரப்பிக் கொண் டிருந்தான்.

"காலை வேளையில் ஒன்றும் சாப்பிடாமல் எங்கே செல்கிறீர்கள்?" என்று அவள் கேட்டாள்.

வேறுபக்கம் பார்த்துக் கொண்டே மதுரா, "ரொம்பத் தொலைவு போக வேண்டும். எனக்கு மிகவும் வேலை யிருக்கிறது." என்று பதிலளித்தான்.

"என் பேரில் ஆணையிட்டுக் கூறுகிறேன். இன்று செல்ல வேண்டாம். நானொரு கெட்ட கனவு கண்டேன்."

"உம், நான் செல்லாவிட்டால், சர்க்கார் நீ கண்ட கனவிற்காக என்னை விட்டு விடுவார்களா என்ன?"

அவளுடைய வார்த்தைக்குச் செவி மடுக்காமல் அவன் சைக்கி ளின் மீது அமர்ந்து கொண்டான். வேலை யொன்று மில்லாமலேயே அவன் வெளியே கிளம்புகிறான் என்று புரிந்து கொள்ள வாசந்திக்கு நேரம் பிடிக்கவில்லை.

மளிகைக் கடைக் கெதிரே நால்வர் இருந்தனர். "நலந்தானா மண்டல்? எந்தப் பக்கம் செல்கிறாய்?" போன்ற கேள்விகளுக்குப் பதிலளிக்காமலேயே மதுரா சைக்கிளை வேகமாக ஓட்டினான். மக்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ள ஆரம்பித்தனர்.

"இரண்டு நாட்களில் ஆள் எப்படி வற்றி உலர்ந்து விட்டான் பார்; எல்லா விஷயமும் இவனுக்குத் தெரிந்திருக்கும். தெரிந்து கொண்ட பிறகு மன நிம்மதியுடன் வாழ முடியுமா என்ன?"

"உண்மைதான். அவன் உள்ளம் நெருப்பாய் எரிந்து கொண்டி ருக்கும். பாவம், எப்படி இருந்தவன் எப்படி யாகிவிட்டான்? முக க்ஷவரம் செய்து கொள்வதில்லை, தலையை வாரிக் கொள்வது கிடை யாது; யாருடனும் பேசுவதும் இல்லை. இப்போதெல்லாம் டிபுடி ஆபீசில் தன் வரவைத் தெரிவிக்கக் கூடப் போவதில்லையாமே!"

மதுரா கற்கள் நிறைந்த பாதையில் சென்று கொண்டிருந்தான். அவனுடைய உடல் நெருப்பாய்க் கொதித்தது. பலவிதக் கவலை களால் அவன் புற உலகையே மறந்திருந்தான். இதுவரை பிறரு டைய பேச்சை அவன் நம்பவில்லை. வாசந்தியிடம் கடுமையாக நடந்து கொண்ட போதிலும், அந்தரங்கமான அன்பு அவனுக்கு அவளிடம் இருக்கத்தான் செய்தது. இப்போதும் அவளிடமிருக்கும் அன்பின் காரணமாகத்தான் தன் வசமிழந்து தவித்தான். அவனு

டைய வாழ்க்கையில் இடம் பெற்ற முதல் பெண் அவள். ஆனால் இன்று அவளுடைய வாயிலிருந்தே மற்றொரு ஆடவனுடன் அவள் நெருங்கிப் பழகியதைக் கேட்டு அவன் மனமுடைந்து போனான். உடல், உள்ளம் எல்லாவற்றின் இனிய சுகத்தையும் அவள் நிச்சயம் தனஞ்சயனுக்கு அளித்திருக்க வேண்டும். பெண்ணானதால் அதையெல்லலாம் அவளால் கூறமுடியவில்லை. அவ்வளவு உயர்ந்த தைரியம் அவளிடம் இருக்க முடியாது. எப்படிப்பட்ட தந்திரசாலியான பெண்? கபடமாக நடந்துகொள்ள அவளுடைய அழகு அவளுக்கு உதவி புரிகிறது?'' என்றெல்லாம் அவன் எண்ண ஆரம்பித்தான். சொல்ல முடியாத சங்கடத்தில் அவன் சிக்கிக் கொண்டான். நம்மையே வதைக்கும் பிரச்சினையாகவல்லவோ இது இருக்கிறது. அவனுடைய கனவுகள், இனிய ஆசைகள், எதிர்காலக் கற்பனைகள் அனைத்தும் ஒரு குற்றமும் புரியாமலிருக்கும் போதே தவிடுபொடியாகி விட்டன. அடிக்கடி ஒரே ஒரு எண்ணம் அவனுடைய உள்ளத்தில் தோன்றிக்கொண்டே யிருந்தது. இனி இதற்கும் மேல் என்ன நடக்க விருக்கிறது? அவளுடைய வாயிலிருந்தே காதல் கதையை கேட்டாகி விட்டது. அதை நம்பித்தானாக வேண்டும். ஒரு கணவன்—ஒரு ஆடவன், இதை எப்படிப் பொறுத்துக் கொண்டிருப்பான்?....

இன்று பாதையில் மோட்டார் வண்டிகள் அதிகமாகச் சென்றுகொண்டிருந்தன. பஸ்களும் ஓடிக்கொண் டிருந்தன. தலங்குக் கட்டத்தில் சந்தை வேறு கூடும் நாள் அது. வேன், டீசல் டிரக்குகள், ஜீப்புகள் முதலியன வேகமாகப் பறந்துகொண் டிருந்தன. தூசியின் காரணமாக வருவதும் போவதும் கடினமாக இருந்தது. மதுராவிற்கு அப்படியொன்றும் முக்கியமான வேலை இல்லை. அவன் சும்மா அந்தப் பக்கம் வந்தான். அந்தக் கடைத்தெருப்பக்கம் வந்தால் தனஞ்சயனைச் சந்திக்கலாமே என்று அவன் விரும்பினான். ஆனால் அவனைக் காண முடியவில்லை. பாப்சிலாவில் ஒரு பாலம் அமைக்க வேண்டி வந்தது. அது விஷயமாகத்தான் தனஞ்சயன் ஷில்லாங்கு சென்றிருந்தான்.

மத்தியான நேரத்தில் அவன் வீட்டை நோக்கிப் புறப்பட்டான். அந்தப் பக்கம் சென்றாலே அவனுடைய உள்ளக் கிளர்ச்சி அதிகரித்தது. என்ன சுகத்தைக் காண அவன் வீட்டிற்குச் செல்கிறான்! வருத்தமடைந்த மதுராவைப் பழைய நினைவுகள் இன்னும் அதிகமான இருளில் கொண்டு சேர்த்தது. கற்கள் நிறைந்த ஒரு மைல் தொலைவை அவன் கடந்து விட்டான். சந்தை முடியும் நேரமும்

நெருங்கி விட்டது. மோட்டார்கள் வருவதையும் போவதையும் அவன் கவனிக்கவே இல்லை. மோட்டாரிலிருந்து கிளம்பிய புழுதி அவனுடைய பார்வையை முற்றிலும் மறைத்து விட்டது. கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொள்ளவோ, அல்லது முகத்தைக் கைக்குட்டையால் மூடிக் கொள்ளவோ அவன் மறந்தே போய் விட்டான். மோட்டார் செய்யும் சத்தத்தையும் அவனால் கவனிக்க முடியவில்லை. தியான யோகியைப் போன்று அவனுடைய கவனம் வேறெங்கோ போய்விட்டது. பாதையில் செல்லும் முறையைக் கடைப்பிடிக்காமல் சைக்கிளை ஓட்டியதால் மோட்டார் ஓட்டிக் கொண்டிருந்த பலருக்கு அது இடைஞ்சலாக இருந்தது. வண்டியை நிறுத்தி அவனைப் பலர் திட்டவும் செய்தனர் ஆனால் மதுரா அந்த வார்த்தைகளை லட்சியம் செய்யவில்லை. அவன் எங்கு சென்றிருந்தான், எங்கு சென்று கொண்டிருக்கிறான், எதற்காகச் சென்று கொண்டிருக்கிறான் என்பது அவனுக்கே தெரியவில்லை. ஒரே ஒரு கவலைதான். அந்தக் கவலைக்கு மருந்தே கிடையாது. அந்தக் கவலை அதிகமாக ஆக, சூழ்நிலையின் சிக்கல்கள் அதிகரித்துக் கொண்டே வந்தன.

முடிவில் எது நேர்ந்து விடுமோ என்று பயந்தானோ, அதுவே நேர்ந்து விட்டது. சற்று நேரத்திற்கு முன்பு மேசல் டிரக்கிலிருந்து கிளம்பிய புழுதி அவனை மறைந்துவிட்டது. வேகமாக வந்து கொண்டிருந்த வண்டியிலிருந்து தப்ப, பிரேக் பிடித்தும் பயனற்றுப் போய்விட்டது. சைக்கிளுடன் மதுரா டிரக்கின் கீழ் சிக்குண்டுவிட்டான். டிரக் சற்று தூரம் சென்றபிறகு நின்றது. டிரைவர் கீழே இறங்கிப் பார்த்தான். மூன்று சதுர மீட்டர் இடம் ரத்தத்தால் நனைந்து காணப்பட்டது. மனித உருவே தெரியாதபடி மதுரா காயமடைந்திருந்தான். தலையில் பலத்த அடி பட்டிருந்தது. எவ்வளவு பயங்கரமான காட்சி! வண்டியால் நசுக்கப்பட்டதால் உடனே அவனது உயிர் பிரிந்து விட்டது. சைக்கிள் தூள் தூளாகி விட்டது.

திடீரென்று பிரேக் பிடிப்பதும் விபத்திற்கு அறிகுறிதான். அதன் ஓசையும் அரக்கனின் கூக்குரலைப் போன்று காணப்பட்டது. டிரைவர் பதைபதைத்து விட்டான். இறந்தவனைக் குறித்து மிகவும் அனுதாபப்பட்டான். விபத்தின் பயங்கரக் காட்சி அவனைச் சுய உணர் விழக்கச் செய்துவிட்டது. மக்களின் கூட்டத்தைக் கண்டதும் தான் அவன் சுய உணர்விற்கு வந்தான். கிராம மக்கள் சாமானிய மானவர்க ளல்லர். அவனை அடித்துத் தோரணம் கட்டிவிடு

வார்கள். ஆகையால் அவன் சற்றும் தாமதிக்காமல் டிரக்கைச் செலுத்த முற்பட்டான். அவனுக்கு வருத்தமாகத்தா னிருந்தது. ஆனால் இறந்துபோனவரை நினைத்து நொந்து என்ன பயன்? உயிர் பிழைத்தவர் தப்பித்துக் கொள்ள வேண்டுமே!

விபத்து நடந்த இடத்தில் மக்கள் கலவரம் செய்தனர். அங்கு வந்த ஓரிரு பஸ்களை நிறுத்தி விபத்தின் காரணத்தை மக்கள் கேட்டறிந்து கொண்டனர். சடலத்தை யாரென்று கண்டுபிடிப்பது சிரமமாக இருந்தது. கையிலிருந்துதான் இறந்தவன் மதுராதான் என்று தெரிந்து கொள்ள முடிந்தது. கையில் கட்டப்பட்டிருந்த ஃபேவர்-லுபா கடிகாரம் இன்னும் ஓடிக்கொண் டிருந்தது. சட்டை போட்டுக் கொண்டிருந்ததிலிருந்தும் கையிலிருந்தும் மக்கள் ஊகித்துக் கொண் டனர். ஓரிருவர் மதுராதான் இறந்து விட்டார் என்று உறுதி கூறினர். அந்தப் பயங்கரமான காட்சியைப் பார்த்த பலர் கண்களை மூடிக் கொண்டு விலகிச் சென்றனர்.

போலீசார் வந்து விட்டனர். விபத்து நேர்ந்த இடத்தை நன்கு பரிசோதித்துப் பார்த்தனர். முறிந்த இடதுகை விரலில் மோதிரம் காணப்பட்டது. இதனால் இறந்தவரைக் கண்டுபிடிப்பது சுலப மாயிற்று. ஆனால் விபத்திற்குக் காரணமான அந்த மோட்டாரைப் பிடிப்பது இயலாத காரியமாகி விட்டது. செய்தி காற்றைப் போல் நாற்றிசைகளும் பரவியது. மோராபூரிலிருந்து போக்ராம் வந்து போலீசார் காண்பித்த மோதிரத்தைப் பார்த்தான். சவப் பரி சோதனைக்குப் பிறகு சடலம் வீட்டிற்கு அனுப்பப் பட்டது. வாசந்தி பித்துப் பிடித்தவளைப் போல் ரத்தத்தால் நனைந்திருந்த சடலத்தின் மீது விழுந்து அழுதாள், மூர்ச்சித்துப் போனாள். வீட்டிலுள்ள எல்லோரும் அதே நிலையில் தானிருந்தனர். பக்கத்து வீட்டுப் பெண் கூட மதுராவின் மரணம் குறித்து சொல்லொணா துயரடைந்தாள். மூர்ச்சித்திருந்தபோது வாசந்தியின் நெற்றிக் குங்குமத்தை யாரோ அழித்தனர். கையிலிருந்த வளைகளையும், காதுகளிலிருந்த குண்டலங் களையும் களைந்தனர்.

இறுதிச் சடங்கின் போது மதுராவின் நண்பன் மீனாதரன் வருத் தம் தோய்ந்த குரலில் கூறினான், "நண்பனின் மரணம் விபத்தால் நேர்ந்தது என்று நான் கருதமாட்டேன். தற்கொலை புரிந்து கொள்ள அவன் புதிய உபாயத்தைக் கையாண்டிருக்கிறான். நான் என் நண்பனை நன்கறிந்தவன். அவன் என்னென்ன எல்லாம் என்னிடம் கூறியிருக்கிறான் தெரியுமா! என் நண்பன் உண்மையில் மகாத்மா. தான் இறந்தும் பிறருக்குத் தீங்கிழைக்காத வகையில்

தற்கொலை செய்து கொண்டான் எனும் பழியிலிருந்து குடும்பத்தைக் காப்பாற்றியிருக்கிறான். இறக்க நிச்சயித்த பிறகு எப்படி இறக்கப் போகிறேன் என்று பிறருக்குச் சொல்வதால் என்ன பயன்? இறந்தவனுக்கு உயிருடனிருக்கும் மக்களிடம் பற்றேது, பாசமேது?''

இவ்விதம் கூறிவிட்டு மீனுதரன் கைக்குட்டையால் முகத்தை மூடிக்கொண்டான். அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் நிரம்பி வழிந்தது. தனிமையில் சென்று மனம் விட்டு அழலாம் என்றே என்னவோ, அவன் ஒரு பெருமூச் செறிந்த வண்ணம் சிதைக் கருகிலிருந்து கிளம்பிச் சென்று விட்டான்.

மெதுவாகக் கூறிய மீனுதரனின் வார்த்தைகளை ஓரிருவர் கேட்டனர். ஆனால் ஒருவரும் விசேஷமான ஆர்வம் காண்பிக்கவில்லை. இப்படிப்பட்ட பயங்கர நிலைமையைக் கண்ட மக்களுக்கு பகீரதனின் குடும்பத்தோரிடம் மிகுந்த அனுதாபம் உண்டாயிற்று. ''இப்படித் தாறுமாறாக இம்மாதிரி நிலைமையில் பேசுவது எவ்வளவு அறிவீனம் என்று மக்கள் கருதினர். இறந்தவரை இனி மகான் என்று தான் எண்ண வேண்டும்.''

## பதினாறு

பகீரதனும் பனிதாவும் வாசந்தியை அன்புடன் பாதுகாத்து வந்தனர். நிரம்பிய இளமைப் பருவத்தில் அவளுக்கு நேர்ந்துள்ள நிலைமையை நினைத்து, வேறெந்த விதமான வருத்தமும் அவளுக்கு நேராதவண்ணம் கிழவனும் கிழவியும் அவளைக் கவனித்து வந்தனர். இதுபற்றி அவர்கள் மிகவும் சாக்கிரதையாகவே இருந்தனர். வாசந்தியின் காரணத்தால் குடும்பம் மிகவும் ஒற்றுமையாக இருந்தது. மருமகளின் முகத்தைப் பார்த்து மகனைப் பிரிந்த வருத்தத்தைக் கிழவனும் கிழவியும் மறக்க முயன்றனர். இறுதிச் சடங்குகளுக்குப் பிறகு வாசந்தி தன் பிறந்தகத்துக்குச் சென்று விட்டாள். செல்வதற்கு முன்பு பகீரதன், ''மகளே! நீ அங்கேயே இருக்க விரும்பினாலும் சரி, இருந்துகொள். அதற்காக நாங்கள் வருத்தமடைய மாட்டோம்'' என்றான்.

வாசந்தி பதிலளித்தாள், ''அப்பா, திருமணமான பிறகு பெண்ணிற்குப் பிறந்தவீட்டில் இருக்க உரிமை கிடையாது. எந்தச் சொத்தின் அடிப்படையில் நான் அங்கே இருப்பேன்?''

மருமகளின் வார்த்தைகள் பகீரதனுக்கு ஆறுதலளித்தன. நான்கு மாதக் கர்ப்பவதியாக அவள் இருக்கிருள் என்று பனிதா பகீரதனிடம் கூறினுள். பகீரதன் தன் பேரனின் முகத்தைப் பார்க்கப்போகும் நம்பிக்கையில் இருந்தான். ஒரு குழந்தை இருந்தால், இவ்வுலகில் மதுராவின் பெயரைச் சொல்லிக் கொண்டிருப்பான். வாசந்தி பனிதாவுடன் தன் பிறந்தகத்தில் நான்கே தினங்கள்தான் இருந்தாள். போக்ராமும் தருலதாவும் அவளை மோராபூரிலேயே இருக்கும்படி மிகவும் வற்புறுத்தினர். அவள் அவர்களுடைய இரக்கம் நிறைந்த வேண்டுகோளை ஏற்கவில்லை. பணிவுடன் தன் விருப்பத்தைத் தெரிவித்து விட்டு அவள் பனிதாவுடன் தர்கியால் திரும்பிச் சென்று விட்டாள்.

தாயின் நிலைமை மிகவும் கவலைக்கிடமாக இருந்தது. பழைய நோயே தொடர்ந்து வாட்டியதால் அவள் திடீரென்று இறக்கவில்லை. வீடு திரும்பும்போது தாய் வாசந்தியிடம் கூறினுள், "மகளே நீ திரும்பிச் சென்றுவிடு. அங்கு இருப்பதாக நீ நிச்சயித்திருப்பது குறித்து எனக்கு மிகவும் மன நிம்மதியாக இருக்கிறது. மாமியையும் மாமனுரையுமே உன் பெற்றேர்கள் என்று எண்ணிக் கொள். நான் இன்னும் எத்தனை நாட்கள் உயிருடனிருப்பேனே! அந்த ஊரிலிருந்த என் ஆதாரம் போய்விட்டது. இந்த வருத்தத்துடன் நான் உயிர்தரிக்க விரும்பவில்லை. மகளே, எப்போதாவது முடிந்தபோது வந்துகொண்டிரு."

தாயை வணங்கிவிட்டுக் கண்ணீர் உதிர்த்தபடியே வாசந்தி திரும்பிவந்தாள். வருத்தத்திஞல் போக்ராமின் வாயிலிருந்து வார்த்தைகளே கிளம்பவில்லை. தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த போக்ராம், வாசந்தி பனிதாவுடன் செல்வதைப் பார்த்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். வாசந்தியின் மாமி சூழ்நிலையையே இன்னும் வருத்தமுறச் செய்துவிட்டாள். முதல் முறையாக வாசந்திக்கு அண்ணன்மீது அன்பு சுரந்தது. போக்ராம் இப்போது திருந்தியிருப்பான். டல்புரியாவைச் சேர்ந்த பெண்ணுடன் கெட்ட தொடர்பு நின்று விட்டது போலும்! விதை விதைப்பதும், அறுவடை செய்வதும் போலவே, சோனுய் பரியா கிராமத்து மக்களும் அதன் பருவகாலங்களுடன் கூடவே தம் கடந்த காலத்து வருத்தங்களை மறந்து விடுகின்றனர். சோனுய் பரியா மக்கள் பரந்த உள்ளம் படைத்தவர்கள். பயிர்த் தொழில் முடிந்த பிறகு கண்ணபிரானைப் பூசிக்கின்றனர். சோனுய் நதியின் நீரோ, என்றும் புதுமையானது. அதன் மக்களின் கருத்தும்

நூதனமானது. அதன் உணர்ச்சித் துடிப்பும் நவீனமானது. அதன் உள்ளமும் புதுமை ததும்பியதாக இருக்கும். சுவைமிக்க புதுமை வெள்ளத்தின் வேகத்தில் போக்ராமின் கடந்தகால அபவாதம், களங்கம் என்று சமுதாயம் நிச்சயித்த அவல நிலை, போக்ராமின் கடந்தகாலக் கதை, வாசந்தியின் துடிப்பு - எல்லாவற்றையும் மறக்கச் செய்துவிட்டது. ஆனால் வாசந்தி, இயற்கையின் எழில் மிகு லாவண்யத்திலும், உயிர்த்துடிப்பு மிக்க நிலத்திலும் நூதனமாக இருக்க விழைய வில்லை. இப்போது அவளுடைய விருப்பம், அவளுடைய மாமன்-மாமியின் விருப்பத்தோடு ஒன்றிவிட்டது. ஒரே ஒரு குழந்தை வேண்டும் என்று அவள் மிகவும் விழைந்தாள். துரதிருஷ்டத்துடன் பிறந்த அவளுக்கு எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்பட உரிமை ஏது, உள்ளத் தெம்புதான் ஏது ?

குடும்பத்தினர் எல்லோரிடமும் அவளுக்கு எதிர்பார்த்ததற்கு மேல் மரியாதை கிடைத்து வந்தது. பாருவும், புத்லியும் அவளைச் சிரிக்க வைக்க அரும் பாடுபட்டு வந்தனர். பகீரதன் அவள் சாப்பிடும் உணவில் அக்கறை கொண்டார். பனிதா அவளைத் தன்னருகில் தூங்கவைத்து விட்டுத்தான் மன நிம்மதியுடன் உறங்குவாள். கிழவி பனிதா இரவு நேரங்களில் வாசந்தியின் தலையை அன்புடன் வருடியபடியே கிருஷ்ணனைப் பற்றிய சுலோகங்களைப் பாடுவாள்.

ஆனால் இவற்றால் வாசந்தி மன நிம்மதி அடையவில்லை. ஒரு விஷயம் அவளை அடிக்கடி துன்புறுத்தியது. தன் பிழை காரணமாகத்தான் மதுரா இறந்து விட்டான். சோனாய் பரியா மக்களிடையே தொன்று தொட்டு இருந்து வரும் நம்பிக்கைதான் அவளுடைய நினைவிற்கு வந்தது. அவள் கன்னியாக இருக்கும்போதே இதைப்பற்றி அவளுடைய தாய் கூறியிருக்கிறாள். 'பெண்ணின் உள்ளத்தில் பாவ எண்ணங்கள் நுழைந்தால்தான் கணவனுக்கு ஆபத்து நேரிடும்' என்பாள் அவள். உண்மைதான், வாசந்தியின் வாழ்வும் ஒரு தவறான பாதையைத் தழுவிச் சென்று கொண்டிருந்தது. அவளுடைய உள்ளத்திலும் தீய எண்ணம் குடி கொண்டு விட்டது. ஒரு நாள் தனஞ்சயனுடன் ஓடிவிட அவள் துடித்தாள். ஆனால், இறந்த பிறகும் மதுரா குற்றம் புரிந்ததாக அவள் நினைக்கலானாள். சிறந்த குறிக்கோளை மனத்தில் கொண்டு அவள் குற்றத்தை ஒப்புக்கொள்ள நினைத்தாள். மதுராவிடம் இருந்த அன்பினால் அப்படிச் செய்யத் தீர்மானித்தாள். ஆனால் அவன் அவளைச் சற்றும் புரிந்து கொள்ள முயற்சிக்கவில்லை. மன்னிக்கும்படி மன்றாடிக்

கேட்டுப் பார்த்தாள். அதையும் அவன் ஒப்புக் கொள்ளவில்லை. மன்னித்து அவனால் மகானாக முடியவில்லை, கருணை நிரம்பிய அவளுடைய வேண்டுகோளின் அடிப்படையில் ஒரு அமைதியான நல்லுலகைச் சமைக்க அவள் நினைத்தாள். ஆனால் அதைக் காண அவன் கொடுத்து வைக்கவில்லை. சாதாரணமாகக் காட்டப்படும் இரக்கத்தைக்கூட அவன் அவளிடம் காட்டவில்லை. தன் ஆணவத்தையாவது காண்பித்திருக்கலாம். அவளை வீட்டைவிட்டு வெளியே அனுப்பி விட்டுத் தன் போக்கில் வாழ்க்கையை நடத்த முற்பட்டிருக்கலாம். ஏன் அவன் அப்படிச் செய்யவில்லை? பித்தனைப்போல், வருத்தமடைந்து, தன்னைத்தான் வருத்திக் கொள்ளும் வழியைத் தேர்ந்தெடுத்தான். கவலை எல்லையை மீறி விட்டதால்தான் ஒருவேளை விபத்துக்கு ஆளாக நேர்ந்ததோ என்னமோ? அவளை வீட்டைவிட்டுத் துரத்திவிட்டு அவன் உயிருடனிருந்தால் அவளுக்கு மன நிம்மதி கிடைத்திருக்கும். நெற்றியில் குங்குமப் பொட்டாவது இட்டுக் கொண்டு இருக்கலாமே! முறிந்த உறவு ஒருநாள் கூடவாவது வாய்ப்பு இருந்திருக்கும். சந்தேகம் ஒரு மனிதனை இப்படி நிலைகுலையச் செய்தால், இவ்வளவு வேதனைக்கு ஆளாக்கிவிட்டது என்றால், பின்பு அவனிடம் ஆடவருக்கேற்ற மனோபலம் எங்கே? தன்னம்பிக்கை எங்கே? வீர உணர்ச்சி எங்கே?...

வருத்தக் கண்ணீரை வற்ற வைத்துக்கொண்டு மாதங்கள் பறந்தன. இப்போதெல்லாம் வாசந்தியை ஒரு கவலையும் வாட்டுவது கிடையாது. இப்போது அவளுக்கு ஒரே ஒரு கவலைதானிருந்தது. நல்லபடியாகக் குழந்தை உலகிற்கு வரவேண்டுமே என்பதுதான் அது. சாப்பிடுவதில் அவளுக்கு நாட்டமே இல்லை. மூச்சு விடுவதும் சிரமமாக இருந்தது. தூக்கமும் சரியாக வரவில்லை. வயிற்றில் அடிக்கடி வலி உண்டாயிற்று. கடுகெண்ணெயை வயிற்றில் தேய்ப்பாள். எப்போதும்போல் வாசந்தியால் உட்கார்ந்து—எழுந்திருக்க முடிவதில்லை.

வீட்டில் அவளை மிகவும் கருத்துடன் கவனித்து வந்தனர். மெல்லிய அரிசி கொண்டு சாதம் சமைத்து வாசந்திக்குக் கொடுத்தனர். இரண்டு மாதங்களாகப் படுக்கச் செல்லும் முன் ஒரு கோப்பை பால் குடித்து வந்தாள். பகீரதன் பட்டணம் சென்று பல விதமான அயல்நாட்டு மருந்துகளை வாங்கி வந்தான். ஆஸ்டோ கால்சியம், அயர்ன் டேப்லட் போன்ற பலவித மருந்துகள். மருந்துகளை பனிதாவிடம் கொடுத்துவிட்டு பகீரதன் சொல்வான்—

'நேரம் தவருமல் மருந்தைக் கொடு. இதனுல் பிரசவம் சுகமாக உண்டாகிவிடும். குழந்தையின் எலும்புகள் பலமுள்ளதாக இருக்கும். பத்து மாதங்கள் முடிந்ததும் இந்த மருந்தைக் கொடுக்க வேண்டும்; மறந்துவிடாதே.'

இதே நேரத்தில் மற்ருெரு நிகழ்ச்சியும் நடந்து விட்டது. மோரா பூரிலிருந்து ஒரு மனிதன் வந்து, 'வாசந்தியின் தாய் இறந்து விட்டாள்' என்னும் செய்தியை அறிவித்தான். வாசந்தியை அழைத்து வரும்படி போக்ராம் அவனை அனுப்பியிருந்தான். தாய் மரண மடைந்த செய்தி கேட்டு அவள் தேம்பித் தேம்பி அழவில்லை. அவள் தன் வாழ்வில் இதைவிடப் பெரிய துக்கத்தை சகித்துக் கொண்டிருக்கிருள். ஒன்றன்பின் ஒன்ருக வந்த துக்ககரமான நிகழ்ச்சிகள் அவளுடைய வாழ்க்கையின் முறையையே மாற்றி யமைத்து விட்டன. தாய் இறந்துவிட்டாள்; நல்லதுதான். வய தாகிவிட்டது. நோய் அவளைக் கொஞ்சமாகவா வாட்டி வதைத் தது? கிழவி தன் வாழ்க்கையில் எத்தனையோ வருத்தங்களை அனுப வித்து விட்டாள். தான் இறக்கும்போது, தன் மகளுக்கு நேர்ந்த சொல்லொணுத் துயரத்தையும் ஏற்றுத் தாங்கிக் கொண்டுவிட்டாள். உயிருடனிருந்தால் இன்னும் எத்தனை எத்தனை கஷ்டங்களைச் சகித்துக் கொள்ள நேரிடுமோ, யார் கண்டார்கள்? வாழ்க்கையில் துக்கங்களை அனுபவிக்க வென்றே பலர் பிறந்து வைக்கின்றனர்!

தாயின் மரணச் செய்தி வாசந்தியின் மனத்தில் இந்த எண்ணங் களைக் கொண்டு வந்தது.

என்னதான் இருந்தாலும் இந்தப் பிறவியில் 'அம்மா' என்று இனி அவளால் யாரையும் அழைக்க முடியாது. அந்த வருத்தத்தில் அவள் சிறிது நேரம் அழுதுகொண்டிருந்தாள்.

இறந்தவர் வீட்டிற்கு, துக்கம் விசாரிக்க, பகிரதனும் பனிதாவும் தான் சென்றனர். போக்ராமுக்கும் தருலதாவிற்கும் வாசந்தி வர இயலாத காரணத்தைத் தெரிவித்தனர்.

தாயின் மரணத்தின்போது வாசந்தி வராதது குறித்து யாரும் தவருக எண்ண மாட்டார்கள். கர்ப்பிணி ஏழாம் மாதத்திலும், ஒன்பதாம் மாதத்திலும் வெளியே செல்லக் கூடாது என்பதை யாவரும் அறிவர். இந்தக் கட்டுப் பாட்டை மீறிஞல் தாய்க்கு மட்டுமல்ல, பிறக்கப்போகும் குழந்தைக்கும் ஆபத்து நேரிடும் என்பது மக்களின் கருத்து.

தாயின் கர்ம நாளன்று பெரியோரை வணங்கி, தாய் நற்கதி யடைய இறைவனைப் பிரார்த்திக்கக் கூட, இறந்த ஆத்மாவின் ஆசியைப் பெறக் கூட வாசந்தி கொடுத்து வைக்கவில்லை.

# பதினேழு

வாசந்தி இன்னும் பத்து மாதத்துப் பூரண கர்ப்பவதியாகவில்லை. அதற்குள் பிரசவ வேதனை எடுத்து விட்டது. வீட்டார் அனைவரும் அவளைக் கவனிப்பதிலேயே ஈடுபட்டிருந்தனர். பனிதா அவளை ஒரு தனி அறையில் இருக்கச் செய்தாள். உத்திரத்தில் கட்டப் பட்டிருந்த கயிற்றின் மறு நுனியை பனிதா வாசந்தியிடம் கொடுத் திருந்தாள். கயிற்றை இழுத்துக்கொண்டே வாசந்தி வலியைப் பொறுத்துக் கொண்டாள். "மகளே கவலைப்படாதே, வலி விரை வில் தீர்ந்து விடும்" என்று ஆறுதல் மொழி கூறிய வண்ணம் பனிதா அவளருகே அமர்ந்திருந்தாள்.

பகீரதனுக்கும் மன நிம்மதி யிருக்கவில்லை. சைக்கிளில் சமூவா கிராமத்திற்குச் சென்றுன். ஓஜா ஒரு கோப்பை நீரை மந்திரித்துக் கொடுத்தான். அதில் ஒரு சிறிதளவு தலையில் தெளித்துக் கொண்டு மிகுந்ததை வாசந்தி குடித்தாள். அப்படியும் பலனில்லை. வாசந்தி அறைக்குள்ளிருந்தது வலி தாங்காமல் கத்துவதைக் கேட்டுக் கொண்டு பகீரதனல் சும்மா இருக்க முடியவில்லை. கிராமத்திற்குச் சென்று, வைத்தியரை அழைத்துக்கொண்டு மருந்தையும் வாங்கி வரத் தனித்தனி ஆட்களை அவன் அனுப்பி வைத்தான். வீட்டிற்கு வந்து அவன் பார்த்தான். வாசந்தி வலி தாங்க முடியாமல் மூர்ச்சித்திருந்தாள். பகீரதன் சொல்லொணு வேதனையடைந்தான்.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு பகீரதன் அனுப்பி வைத்த ஒரு சிறுவன் வந்து சேர்ந்தான். தலங்குக் கட்டத்துப் பெண்மணி ஒருத்தி மந்திரித்துக் கொடுத்த சிறு கயிற்றை அவன் கொண்டு வந்திருந்தான். பனிதா அதை வாசந்தியின் இடுப்பில் கட்டினுள். சற்று நேரத்தில் அவள் சுய நினைவிற்கு வந்தாள். அவளுடைய துடிதுடிப்பு அதிகரித்திக் கொண்டே இருந்தது. செய்தி கேட்ட செவிலித்தாய் கபிலீ வந்தாள். இப்போது பகீரதன் சற்றே அமைதி யடைந்தான். வாசந்தியினருகே சிறிது நேரம்வரை அமர்ந்து கபிலீ அவளுடைய உடல் நிலையைப் பரிசோதித்துப் பார்த்தாள். நிலைமை சற்றுக் கவலைக் கிடமானதுதான் என்று அவள் புரிந்து கொண்டுவிட்டாள். வயிற்றின் அடிப் பாகத்தில் அடிக்கடி வலிப் பதால் மூர்ச்சையடைகிருள். அப்படி அதிக நேரம் நேர்ந்தால் தாயின் உயிருக்கே ஆபத்துண்டாகும் என்றறிந்த கபிலீ வேறெவ ருடைய ஆலோசனையையும் லட்சியம் செய்யாமல் குழந்தையைத்

தானே வெளியே கொண்டுவர முயற்சித்தாள். தன் கையாலேயே குழந்தையை வெளியே கொண்டு வந்து விட்டாள். ஆண்பிள்ளை என்று பனிதா எல்லோரிடமும் கூறினுள். ஆனுல் வெளியே வந்த குழந்தை அழவேயில்லை. வாசந்தி எல்லா வேதனையையும் மறந்து தன் செல்வத்தை மகிழ்ச்சியுடன் பார்த்தாள். ஒரு நொடியில் எல்லா வருத்தங்களும் பறந்தோடி விட்டன. மன நிறைவுடன் அவள் தன் இரு கண்களையும் மூடிக் கொண்டாள். ஆனுல் குழந்தை அழவேயில்லை. 'குவா-குவா' என்று அது அழும் குரலில் தான் எவ்வளவு இனிமை இருக்கும்! வாசந்திக்கு அது தேனினும் இனியதாக இருக்குமே! பேரனை எதிர்பார்த்துக்கொண் டிருக்கும் பனிதா-பகீரதன் இருவருக்கும் கூடப் பேரனின் முதல் குரல் மகிழ்ச்சி யைத் தரும்.

வெகு நேரமாகிவிட்டது. கபிலீக்குச் சந்தேகம் வந்தது. குழந் தையின் மார்பில் கைவைத்துப் பார்த்தாள். மார்பு துடித்துக் கொண்டுதா னிருந்தது. கையில்தான் நாடி சரியாகத் துடிக்கவில்லை.

வீட்டின் கூரை மீது ஏறிக் கொண்டு, தகர டப்பாவை அடித்து இரு சிறுவர் சத்தம் செய்தனர். இப்படிச் செய்தால் மௌனமாக இருக்கும் குழந்தை விழித்தெழும் என்பது மக்கள் நம்பிக்கை. அதுவும் பயனற்றுப் போயிற்று. கபிலீ வெளியே வந்து கூறினுள். "பகீரத்! ஒரு காரியம் செய்யேன். குழந்தை இப்படி இருப்பது குறித்து பயப்பட வேண்டாம். பிறந்ததுமே கருவத்துடன் சில குழந்தைகள் இந்த உலகிற்கு வருகின்றன. அதன் தகப்பன் அதற்கு ஏதாவது பரிசு கொடுத்து அதைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டால் சரியாகிவிடும். ஆனுல் இதுதான் பிறக்கும்போதே தகப்பனை இழந்து அதிருஷ்டக் கட்டையாகப் பிறந்திருக்கிறதே, நீதான், அப்பாவின் சார்பில் ஏதாவது செய்யவேண்டும், வா!"

கட்டுப்பாடு, முறை, சங்கோசம் எல்லாவற்றையும் விட்டு விட்டு கபிலீ கூறியபடி பகீரதன் பிரசவ அறைக்குள் நுழைந்தான். வாசந்தி சுய நினைவில் இருந்தாள். அவள் முகத்திரையை இன்னும் இழுத்துப் போட்டுக் கொண்டான். கட்டையைப் போல் கிடக்கும் பேரனைப் பகீரதன் பார்த்தான். தொலைவிலிருந்த குழந்தையருகே இரண்டு பொன் காசுகளை வைத்துவிட்டு, "ராஜா! கருவத்தை விட்டு விடு-கண்ணைத் திறந்து பார்-தாத்தாவிடம் இப்படி இருக் காதே" என்று கூறினுன்.

இவ்விதம் கூறிய கிழவன் பேரனைப் பார்த்த வண்ணமிருந்தான். அழும் லட்சணமோ, கண்களைத் திறக்கும் அறிகுறியோ தென்பட

வில்லை. ஐந்து நிமிடங்கள் கழித்துக் குழந்தை திடீரென்று அசைந்தது. அழ முயற்சித்தும் குரல் வெளியே வரவில்லை. விட்டு விட்டு விக்கல் கிளம்பிற்று. வாசந்தி பயத்தால் அலறினாள். பனிதா குழந்தையின் மார்பில் கை வைத்துப் பார்த்தாள். அது தன் இரு கண்களையும் ஒரு முறை அகல விரித்தது. பிறகு நிரந்தரமாக மூடிக் கொண்டது. சற்று நேரம் வரை தங்கியிருந்த உயிர் கடிதே பிரிந்து விட்டது. பிரசவ அறையில் தீப்பிடித்தாற் போலிருந்தது! மரத்தின் இலைகள் கூட உதிர்ந்து விடும்படி எல்லோரும் அழுதனர். அக்கம் பக்கத்து மக்களும் அமைதியாக இருக்க முடியவில்லை. வீட்டு வாசலில் மக்களின் கூட்டம் கூடிவிட்டது.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு வீடு சற்றே அமைதியடைந்தது. குழந்தையை வாசந்தியின் மடியிலிருந்து எடுத்துச் செல்லும்போது மறுபடியும் கூக்குரல் ஒலிக்க ஆரம்பித்தது. பனிதாவினால் வாசந்தியின் மடியிலிருந்து குழந்தையை எடுக்க முடியவில்லை. அவள் அதை எடுக்க முயற்சிக்கும்போது வாசந்தி அதை எடுக்க விடாமல் தன் மார்போடு இறுக அணைத்துக் கொண்டாள். முடிவில் இதயமற்ற கபிலீதான் குழந்தையை அவளிடமிருந்து பிடுங்கிக் கொண்டாள். வாசந்தி உருண்டு-புரண்டு அலறினாள்—"என் கண்ணே! நானும் உன்னுடன் உயிரை விட்டுவிடுகிறேன்! அம்மா, அப்பா, என்னையும் இவனுடன் சேர்த்துப் புதைத்து விடுங்கள்" என்று கூறி அழுதாள்.

பனிதாவினால் இதைச் சகிக்க முடியவில்லை. அவள் பிரசவ அறைக்குள் சென்றாள். இறந்த குழந்தையைக் கைகளில் ஏந்திக் கொண்டு பகீரதன் இடுகாட்டை நோக்கிப் புறப்பட்டான். கோடரியும் மண்வெட்டியும் எடுத்துக்கொண்டு இருவர் அவனைத் தொடர்ந்து சென்றனர். இந்நிலையில் வாசந்தியை விட்டு விட்டுக் கபிலீ வீடு திரும்பவில்லை. குழந்தை இறந்து போன காரணத்தைப் பற்றிச் சிந்தித்த வண்ணம் பிரசவ அறையைச் சுத்தம் செய்தாள். மாலை நேரமாகி விட்டது. பனிதா முதலில் பேச்சைத் துவக்கியதால் கபிலியும் செல்வதற்கு முன் தன் மனதிலுள்ள எண்ணத்தை வெளியிட்டாள்.

"கபிலீ! கடவுளும் எங்களை எப்படிச் சோதிக்கிறார், பார். குழந்தை வயிற்றில் இருக்கும்போது மதுரா போய்விட்டான். அவளுடைய தாய் இறந்து போனாள். இப்போது இந்த துக்கம் வேறு வந்திருக்கிறது" என்று கூறினாள் பனிதா.

"நீ சொல்வது சரிதான், அம்மா. வயிற்றில் குழந்தை இருக்கும் போது அதன் நலனிற்காகத் தாய் மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும். ஆனால் அவள் பெருந் துக்கத்தைச் சகித்துக் கொள்ள நேர்ந்தது. எத்தனை இரவுகளைத் தூக்கமின்றி அழுதபடியே கழித்தாளோ.. கிழ வயதில்தான் தாய் இறந்தாள் என்றாலும் அவளது மரணம் வாசந்திக்கு அதிக வருத்தத்தைக் கொடுத்திருக்கும். இம்மாதிரி நிலையில் கர்ப்பிணியின் உயிருக்கே ஆபத்து நேரிடுவதுண்டு. ஆனால் அவள் எப்படியோ தப்பித்துக் கொண்டாள். குழந்தை இறப்பது சகஜம். இதை எந்த வைத்தியனாலும், ஞானியாலும் தடுத்து நிறுத்த முடியாது. வயிற்றி லிருக்கும்போதே அதன் நிலைமை மோசமாகியிருக்கிறது; இம்மாதிரி சமயங்களில் இறந்த குழந்தை தான் பிறக்கும்."

கடைசியில் கபிலீயின் குரல் நடுங்கிற்று. பனிதா கண்ணீரை மறைக்க முயற்சிக்கவில்லை. அழுதபடியே கூறினாள், "போதும். இனி ஒன்றும் விளக்க வேண்டாம். இத்துடன் நிறுத்திவிடு."

வாசந்தி இரண்டு தினங்களாகப் படுக்கையிலிருந்து எழுந்திருக்கவேயில்லை. மூன்றாம் நாள் கண்களைத் திறந்து மேலே பார்த்தபடி இருந்தாள். பனிதா அவளை எழுந்து உட்காரும்படிக் கூறினாள். ஆனால் அவள் கேட்கவேயில்லை. இடைவிடாமல் வற்புறுத்திய போதிலும், தண்ணீர் கூட அருந்த மறுத்து விட்டாள் சாப்பிடாமலிருந்ததை பனிதா தவறாகக் கருதவில்லை. முதல் மூன்று தினங்கள்வரை ஒன்றும் சாப்பிடாமலிருப்பது நல்லதுதான். பிரசவத்தால் நாடியின் ஓட்டம் சற்று பலவீனமாக இருக்கும். கண்டதையெல்லாம் சாப்பிட்டுவிடக் கூடாது. ஒருநாள் இரண்டு நாள் என்று பத்து நாட்களும் கழிந்து விட்டன. தண்ணீரைத் தவிர வாசந்தி வேறொன்றும் சாப்பிடவேயில்லை. எழுந்து உட்காரக் கூட உடலில் தெம்பிருக்கவில்லை. வீட்டிலுள்ள எல்லோரும் மிகவும் கவலையுற்றனர். போக்ராமுக்குச் செய்தி அறிவிக்கப்பட்டது. போக்ராமும் தருலதாவும் வந்து வாசந்தியை மிகவும் தேற்றினர். ஆனால் அவள் அசையாமல் இருந்து விட்டாள். அவள் உண்ணாவிரதமிருந்து இறந்துவிட நிச்சயித்திருக்கிறாள் என்று எல்லோரும் கருதினர். பெரியவர்களாலும்தான் அவளை எவ்விதம் ஆறுதல் சொல்லித் தேற்றமுடியும்? அவளைச் சுற்றி இருள் கவ்விக்கொண் டிருந்தது. 'பெண் உயிருடனிருந்தால் வேறொரு குழந்தையின் முகத்தைக் காண முடியாதா என்ன? ஒரு குழந்தை இறந்து விட்டால், சாப்பாடில்லாமல் மடிந்து விடுவதா என்ன?' இவ்விதமெல்லாம் நம்பிக்கை

யூட்டி அவளுக்கு ஆறுதலளிக்கவும் வழிகிடையாது. அவள் ஏன் இவ்விதம் மடிய விரும்புகிருள் என்பது எல்லோருக்கும் தெரியும். கிராமத்து மக்கள் ஹரியின் பெயரை உச்சரிக்கத் தொடங்கினர். அவளுடைய வாழ்க்கையில் தோன்றிய முதல் குழந்தையும் கடைசிக் குழந்தையுமான அந்தச் சேயிடம் அன்பு செலுத்த வழியில்லாததால் பித்துப் பிடிப்பது கூட இயற்கைதான். ஆனல் வருத்தத்தின் காரணமாகப் பத்துப் பதினைந்து தினங்கள் வரை எப்படிப் பசி எடுக்காமலிருக்க முடியும்? பசியே எடுக்காத நோய் அவளுக்கு வந்துவிட்டதோ?

வீட்டிற்கு வைத்தியர் அழைக்கப் பட்டார். இது மன நோய்தான் என்று அவரும் கூறிவிட்டார். ஆயினும் பகீரதனிடம் பல விஷயங்கள் சொல்லிச் சென்ருர். பன்னிரண்டு நாட்கள் கழிந்தன. இப்போதெல்லாம் அவள் தன் போக்கில் வாசற்படியில் உட்கார்ந்து கொள்வாள். ஏற்கனவே பலவீனமான உடல், இப்போது அவளைக் காணச் சகிக்க முடியாது. அவ்வளவு இளைத்துப் போயிருந்தாள். அவள் உலகத்தைச் சற்றும் சட்டை செய்யாமல் இருந்தாள். எதையும் கேட்காமல், பேசாமல் இருக்கும் நோய் அவளைப் பற்றிக் கொண்டாற் போல் அவள் காணப்பட்டாள். வாசற்படியில் உட்கார்ந்து வாசந்தி உயரப் பார்த்துக் கொண்டே யிருப்பாள். கண்களுக்குப் புலப்படாத நட்சத்திரங்களுடன் நட்புப் பூணுபவள் போல் பார்த்துக் கொண்டிருப்பாள்.

வாசந்தி முதலில் மாமி-மாமன் சொற்படி கேட்டு வந்தாள். இப்போது அவர்களுடைய வேண்டுகோளின்படி நடப்பதில்லை. இதனல் அவர்களுடைய கவலை அதிகரித்தது. ஆனல் அவளிடம் கோபம் கொள்வதில்லை. பாவம், அவள் இன்னும் எத்தனை துக்கங்களைத்தான் சகித்துக் கொள்வாள்!

போக்ராம் மிகுந்த கவலையுற்ருன். அவன் தன்னையே குற்றவாளியாகக் கருதி வந்தான். அவனுடைய குற்றத்தினல்தானே வாசந்தியின் வாழ்வில் இப்படி ஒரு திருப்பம் ஏற்பட்டது. இந்த மாதம் அவனுக்குச் சற்றும் ஓய்வு கிடையாது. காண்டிராக்ட் எடுத்துக் கொண்ட எல்லா வேலைகளையும் இதே மாதத்தில் முடித்தாக வேண்டும். தங்கையின் வீட்டில் ஒருநாள் தங்கிவிட்டுத் திரும்பி வந்தான். தருலதா மட்டும் இன்னும் ஒருநாள் அதிகமாகத் தங்கினுள். வீட்டில் குழந்தைகளின் தொல்லை வேறு அவளைத் துன்புறுத்தியது. ஆதலால் வாசந்தியை விட்டு விட்டு அவள் திரும்பிச் செல்ல நேர்ந்தது.

இரண்டு தினங்களுக்குப் பிறகு நடந்த ஒரு சம்பவம் எல்லோரையும் திடுக்கிடச் செய்தது. பகீரதன் முற்றத்தில் ஒரு மூலையில் உட்கார்ந்து கயிறு பின்னிக்கொண்டிருந்தான். காலை பத்து மணியிருக்கும். வாசந்தி எப்போதும்போல் வாசற்படியில் உட்கார்ந்திருந்தாள். மூன்று முறை சைக்கிளின் மணியோசை கேட்டது. வாசந்தியும் அந்தப் பக்கம் பார்த்தாள். பகீரதனும் பார்த்தான். ஆனால் யாரென்று புரிந்துகொள்ள முடியவில்லை. எங்கு பார்த்திருக்கிறோம் என்ற நினைவும் வரவில்லை. இறந்துபோன தன் குழந்தையைப் போலவே அழகான உருவம் தென்பட்டது. இளைஞன் வெண்மையான பாண்டும் சட்டையும் அணிந்திருந்தான். பார்ப்பதற்குப் பட்டணத்து டாக்டரைப்போல் காட்சியளித்தான். அவன் டாக்டராகத்தானிருக்கவேண்டும். ஏனென்றால் சைக்கிளின் பிடியில் டாக்டரின் பை தொடங்கிக்கொண்டிருந்தது.

வந்த இளைஞன் மூங்கில் தட்டியில் சைக்கிளைச் சாத்தினான். யாரையும் விசாரிக்காமல் நேரே உள்ளே வந்தான். அவனைக் கண்டதுமே வாசந்தி விரைந்து உள்ளே சென்று விட்டாள்.

முன்பின் தெரியாத ஒருவன் உள்ளே வந்து உட்காருவதைக் கண்ட பகீரதன், "நீ யாரப்பா?" என்று கேட்டார்.

"நீங்கள் என்னை யாரென்று தெரிந்து கொள்ளும் தகுதியை நான் பெறவில்லை. ஆயினும் நீங்கள் கேட்கிறீர்கள். அதனால் சொல்கிறேன். நான் பாப்சிலாவில் இருக்கும் தனஞ்சயன்" என்று அவன் பதிலளித்தான்.

"ஆமாம். பெயர் கேட்டிருக்கிறேன். இன்று சுவர்க்கமே என் வீட்டிற்கு வந்து விட்டாற் போலிருக்கிறதே. நீயே வீடு தேடி வந்தது நல்லதாய் போயிற்று. போக்ராம் உனக்கு ஏதாவது செய்தி அனுப்பினானா?"

தனஞ்சயன் பொய் பேசினான், "இல்லை, இந்த வழியாக வந்தேன்" கேள்விப்பட்டிருந்தேன்; பார்த்துவிட்டுப் போகலாமே என்று தோன்றிற்று. வயிற்றுக்கு ஒன்றும் சாப்பிடாவிட்டால், மருந்து சாப்பிட்டு என்ன பயன்?"

தனஞ்சயன் சற்று நம்பிக்கை யிழந்தவனைப் போல் பேசினான். அவன் மனம் கனத்திருந்தது. அவன் முன்பிருந்ததை விட அதிகம் கம்பீரமாகத் தோற்றமளித்தான். பகீரதன் மிக்க நன்றியுணர்ச்சியுடன் அவனை உற்று நோக்கினான். தனஞ்சயன் நல்ல உடையணிந்திருந்தான். ஆனால் தலை கலைந்திருந்தது. முகக்ஷவரம் கூடச் செய்து கொள்ளவில்லை. ஏதோ ஒரு பயங்கரமான துக்கம்

அவனுடைய அழகிய கண்களின்ஒளியையும், முகத்தின் சோபை யையும் அபகரித்து விட்டது.

"முதலில் அவளைப் பார்க்கிறாயா, மகனே?"

"அழைத்து வாருங்கள்."

பகீரதன் உள்ளே சென்று கூறினான். பின்பு தனஞ்சயனிடம் வந்தான். இத்தனை தினங்களுக்குப் பிறகு இன்றுதான் வாசந்தி மாமியுடன் பேசினாள்.

"மகளே! அவரை அனுப்பிவிடுகிறேன். அவர் யாருடைய வீட்டிற்கும் தானாகவே வரத் தயங்குவதில்லை," என்றான் பகீரதன்.

"உனக்கு அவனைத் தெரியுமா?"

"ஏதோ ஒரு காலத்தில் தெரிந்திருந்தது."

"பாவம், அவன் என்ன குற்றம் செய்து விட்டான்? வைத்தியம் செய்யத் தெரியும். நீ வெளியே வரமாட்டேன் என்கிறாய். பிறர் ஒருவருமே நம் வீட்டிற்கு வரக் கூடாதா என்ன?"

வாசந்தி சுய உணர்விற்கு வந்தாள். தனஞ்சயன் இங்கு வந்தது சரியல்ல. அன்று அவள் அவனுடன் ஓடிப்போகாமல் என்ன தவறு செய்தாளோ, அதைவிடப் பெரிய குற்றத்தைத் தனஞ்சயன் செய்திருக்கிறான். கணவன் இறந்த பிறகு எல்லாவற்றையும் துறந்து இருக்கும் இந்த நிலையில் தனஞ்சயனிடம் விபரீதமாக நடந்து கொண்டால் அவள் பிடிபட்டு விடுவாள். "எல்லோருடைய எதிரி லும் வருகிறாய், இவனெதிரே மட்டும் ஏன் வரக் கூடாது?" என்று மாமி வற்புறுத்திக் கேட்பாள். தனஞ்சயனின் துணிச்சல் அவளுக் குப் பிடித்திருந்தது. ஆனால் உள்ளத் தெம்பு அவனிடமிருந்தது. அதனால்தான் பிடிபட்டு விடுவோமோ என்ற அச்சத்தைக் கூட உதறிவிட்டு அவளுடைய துக்கத்தில் பங்கு கொள்ள வந்திருக் கிறானோ?

முடிவில் அவள் மாமியுடன் தனஞ்சயன் உட்கார்ந்திருந்த அறைக்கு வந்தாள். சிறிய ஸ்டூலின் மீது அமர்ந்து கொண்டாள். முகத்திரையை நெற்றிவரை இழுத்து விட்டுக் கொண்டாள். கால் விரலால் கிளற ஆரம்பித்தாள்.

தனஞ்சயன் பிரமித்துவிட்டான். அவளை அவன் நன்கு பார்த் தான். அவள் மிகவும் மெலிந்திருந்தாள். முன்பிருந்த முகத்தின் சாயலே இல்லை. அவளது உடலில் எஞ்சியிருந்த அழகும் மென்மை யும் அப்போது கூட அவனைக் கவர்ச்சிகரமாக வைத்திருந்தது. அவளது முகச் சோபை அப்போது கூட மனத்திற்கு மகிழ்வூட்டு வதாக இருந்தது. நட்சத்திரங்களைப் போன்று பளிச்சிட்ட

கண்களின் பளபளப்பை வேதனை பறித்துக்கொண்டிருந்தது. கருணை நிரம்பிய முகத்தில் மகனை இழந்த தாயின் மகிமை பொருந்திய உருவம்காணப்பட்டது.

தனஞ்சயன் ஒன்றும் கேட்காமலிருப்பதைக் கண்ட பகீரதன், நாமிருப்பதால் பேச இருவருக்கும் சங்கோசமாக இருக்கிறது போலும் என நினைத்து வெளியே வந்தான். பனிதாவிற்கும் சங்கேதமாகத் தெரிவித்தான்.

வாசந்தி முதலில் பேசினாள். "நீங்கள் இப்படிச் செய்வீர்கள் என்று என்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை"

தனஞ்சயன் மிகவும் மென்மையான குரலில் கூறினான். "ஆமாம் தவறு என் மீதுதான். ஆயினும் என்னால் வராமலிருக்க முடியவில்லை. மனிதன் கதியற்றவன், தெரியுமா? திறமையற்றவனும் கூட. மனிதனால் தளைகளை முறித்துக்கொள்ள முடியாது. நான் உனக்குத் தகுந்தவனில்லை என்று எண்ணமோ, நீ என்னை விட்டுவிட்டாய். அப்படியிருந்தும் நான் உன்னைக் குறை கூற மாட்டேன்; உன்னிடம் வந்திருக்கிறேன்."

வாசந்தி விசித்தாள். "என்னை மன்னித்து இவ்விதம் துன்புறுத்த ஏன் வந்தீர்கள்? இப்போது காலம் கடந்து போய் விட்டது."

"தெரியும்".

"என்ன தெரிந்தது?"

"நீ நல்ல குலத்தைச் சேர்ந்தவர்களின் மருமகள் என்று தெரியும்!"

"ஆமாம், நான் ஒரு இந்துக் குடும்பத்துக் கைம்பெண். ஒரு நாள் அக்கினியின் முன்பு உட்கார்ந்திருந்தேன். நெற்றியில் குங்குமம் தரித்துக் கொண்டேன். ஒருவருடைய மனைவியுமானேன். என் உடலில் ஒரு ஆடவனின் வாடை இருக்கிறது. அப்படியிருந்தும் நீங்கள் என்னை மன்னித்து விட்டீர்களா? எவ்வளவு வியப்புக்குரிய விஷயம்! நான் ஒரு சாதாரணமான பெண், தெரிந்ததா? என்னைப் பற்றி எண்ணி எண்ணி உங்கள் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு முன் எதிர்காலம் ஒன்றிருக்கிறது. என்னை இப்படியே வாழ விட்டுவிடுங்கள்."

"வாசந்தி!"

"சொல்லுங்கள்!"

"நான் உன்னைப் பார்க்க மட்டும்தான் வந்தேன்."

"நல்ல வேளை."

"ஆனால், உன்னை நீ நாசமாக்கிக் கொள்ள ஏன் இந்த உபாயத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறாய்? பிறருக்குத் துன்ப மளிப்பதில்

உனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறதா என்ன ? ஒரு பிடி சாதம் என்ன பாவத்தைச் செய்து விட்டது? இதற்கு முன்பு கூட உன்னிடம் நான் கூறியிருக்கிறேன். மரணத்தைத் தேடுவதிலோ, மரணத்தை வரித்துக் கொள்வதிலோ, கௌரவம் கிடையாது. இவ்வுலகில் உயிர் வாழ்வதுதான் பெரிய சாதனை. இதில்தான் மனிதனுடைய கௌரவம் இருக்கிறது.''

தனஞ்சயனின் கண்கள் நனைந்து விட்டன. வாசந்தியும் இரு முறை கண்ணீர் உதிர்த்து விட்டு அமைதி யடைந்தாள். அவள் பதிலளித்தாள், ''நான் வாக்களிக்கிறேன்! நான் உயிருட னிருப்பேன். ஏழு சக்கிரவ்யூகத்தில் சிக்குண்டாலும் உயிர் வாழ்வேன். இவ்விதம் நான் உயிர் வாழ்வதற்கு வேறு காரணம் ஏதாவது உங்களால் தர முடியுமா.'' ?

தனஞ்சயனால் உடனே பதிலளிக்க முடிய வில்லை. அவன் கீழே பார்த்தபடியிருந்தான். இறைவன் வழிபாட்டிலும், பிறருக்கு உதவி புரிவதிலும் தன்னைத்தான் ஈடுபடுத்தி வாசந்தியால் எஞ்சிய தினங்களை அமைதியுடன் கழிக்க முடியும் என்று அவன் கருதினான். ஆம், நிச்சயமாக அவ்விதம் செய்ய முடியும். இந்துப் பெண்கள் தொன்று தொட்டு அவ்விதம் வாழ்ந்து வந்திருக்கின்றனர். உள்ளத்தில் புல்லாங்குழல் ஊதும் கண்ணனை நிறுவிக்கொண்டு மீரா உயிர் வாழ்ந்திருக்க விழைந்தாள். இன்னிசையின் இந்திர ஜாலத்தால் ரசிக உள்ளத்தைக் கவர்ந்தாள். இப்படி எத்தனை எத்தனையோ உதாரணங்கள் உள்ளன.

வாசந்திக்குப் பதிலுரைக்கலாம் என்று கருதி அவன் தலை நிமிர்ந் தான். இதற்கிடையில் வாசந்தி பேசாமல் எழுந்து உள்ளே சென்று விட்டாள். உள்ளேயிருந்து அவளுடைய குரல் கேட்டது, ''அம்மா, நான் சாப்பிடுகிறேன்.'' அவளுடைய வாயிலிருந்து அந்த வார்த்தையைக் கேட்ட எல்லோருடைய முகங்களிலும் மழ்கிச்சி தாண்டவமாடிற்று. அவள் துக்கத்தைச் சமாளித்துக் கொண்டு விட்டாள் என்றுதான் இதற்குப் பொருள். அனைவரும் தனஞ்சயனுக்கு நன்றியறிவித்தனர்.

பகீரதன் அவனுடைய கைகளைப் பிடித்தபடி கூறினான், ''மகனே! நீ பிரமாதமான காரியத்தைச் சாதித்து விட்டாயப்பா. இறைவன் உனக்குப் புகழளிக்கட்டும்.''

தனஞ்சயன் கம்பீரமான குரலில் பதிலுரைத்தான், ''அவள் சாதம் சாப்பிட விரும்புகிறாள். முதலில் சாதம் கொடுக்கக் கூடாது. இத்தனை தினங்களுக்குப் பிறகு சாப்பிடுவதால் ஜீரணமாகாது.

முதலில் எலுமிச்சம்பழரசம் கொடுத்துப் பாருங்கள். அது வயிற்றில் தங்கினால் மாலைக்குச் சாதம் கொடுக்கலாம்.'' இதைக் கூறிவிட்டுத் தனஞ்சயன் கண நேரங்கூடத் தங்கவில்லை. பனிதாவும் பகீரதனும் அவனை உள்ளே வரும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டனர். ஆனால் அதைக் கேட்காமல் அயலான்போல் அவன் மாறி விட்டான். மறுபடி இங்கு வரும் வாய்ப்பு இருக்கக் கூடாதே என்று அவன் இறைவனை வேண்டிக் கொண்டான்.

# பதினெட்டு

ஒரு வாரம் கழிந்து விட்டது. திரும்பிப் பார்ப்பதற்குள் பதினைந்து தினங்களாகி விட்டன. தர்கியால் கிராமத்துப் பக்கம் தனஞ்சயனின் நிழல்கூடப் படவில்லை. வாசந்தி யாரிடமிருந்து அவனைப் பற்றி அறிந்து கொள்வாள்? யாருக்காவது சந்தேகம் ஏற்பட்டால் விஷயம் ஒன்றுக்குப் பத்தாகப் பரவி விடும்.

ஆனால் ஒருநாள், கேட்காமலேயே அவளுக்கு தனஞ்சயனைப் பற்றி தகவல் கிடைத்தது. சோனாய் பரியா கிராமத்து மக்கள் எல்லோரும் ஒரு மனதாகத் தனஞ்சயனின் வீரச் செயலைப் பாராட்டிப் பேசினர்.

நடந்த நிகழ்ச்சி இது தான் :

காண்டிராக்ட் வேலையில் அளவுக்கு மீறிப் பணம் சம்பாதித்த போதிலும், போக்ராமின் பேராசை தணியவில்லை. பணத்தாசை அவனைப் பேயாட்டம் ஆட வைத்தது. தாயின் மரணமும் தங்கையின் சோகம் நிறைந்த வாழ்க்கையும் அவனைச் சில தினங்கள் வரை அடக்கி வைத்திருந்தன. பணம் சம்பாதிப்பது எளிது என்று நினைத்து அவ்விதம் இருந்தானோ என்னமோ! ஆனால் இப்போது சில தினங்களாகக் கபூர் சந்த், ராம் மிலாப், ஹர்வீர் பாடியா; சுனத் புக்கன் போன்றவர்கள் நகரத்துப் புகழ் பெற்ற செல்வந்தராகி விட்டனர். அவர்கள் என்ன தொழில் செய்கின்றனர் என்பது ஒருவருக்குமே தெரியாது. அவர்களுடைய சேர்க்கையால் போக்ராமின் குணம் இன்னும் அதிகமாகக் கெட்டுவிட்டது. இப்போதெல்லாம் போக்ராம் மது அருந்த ஆரம்பித்து விட்டான். பட்டணத்தில் எத்தனை தினங்களிருப்பானோ, அதுவரைதான் அவனுடைய நேரம் நிம்மதியாகக் கழிகிறது! நல்ல ஓட்டலில் தங்குவது, மது அருந்துவது, பணம் கொடுத்துப் பெண்டிரது நட்பைப் பெறு

வது போன்ற போகச் செயல்களில் ஈடுபடுவதையே அவன் பணத்தின் மிகச் சிறந்த பயனாகக் கருத ஆரம்பித்து விட்டான். இதுவரை சம்பாதித்த பணத்தில் அவனது மனம் நிறைவு பெறவில்லை. சுனத் புக்கன், ராம் மிலாப் இருவரையும் போல், ஒரு பெண்ணைக் கொல்லும் சதித் திட்டத்தில் போக்ராம் இறங்க ஆரம்பித்து விட்டான். ஹர்வீர் பாடியாவைப் போல் சினிமா தியேட்டர் நிறுவத் திட்டமிட்டான். பேராசை அவனுடைய மன நிம்மதியைக் குலைக்க ஆரம்பித்தது. மனிதனின் சிறந்த உணர்ச்சிகளுக்கு அவனுள்ளத்தில் இடமே கிடையாது. சோனாய் பரியா கிராமம் நல்லதோர் உள்ளத்தை இழந்து விட்டது. முள்ளில்லாத மீன்களுக்கிடையே இருக்கும் முள் மீனைப் போலிருந்தது நிலைமை. விவசாயத் தொழிலின் அவல நிலைமையும், நாட்டின் நலிவடைந்த முன்னேற்றமும் கிராம வாழ்க்கையின் பொறுமை நிறைந்த பண்பும்தான் அவனைப் போன்ற புதிய மனிதனைப் படைத்திருக்கின்றன. அவனைப் போன்ற ராகு—கேதுக்கள் தாம் சோனாய் பரியா மக்களின் நேர்மையை விழுங்கப் பார்க்கின்றனர். அநீதி, சோனாய் பரியாவிற்குள் நுழைந்து விட்டது உண்மை தான். ஆனால் இன்னும் ராகு அதனை விழுங்கத் தன் வாயை அகலமாகத் திறக்க முற்படவில்லை. காரணம் சோனாய் பரியா மக்களது உள்ளத்தில் தெம்பு உண்டு. அவர்களுக்கென்று ஒரு கலாச்சாரமும் சரித்திரச் சிறப்பும் உண்டு. சோனாய் நதி வளம் குறையாதது, அழகு குன்றாதது. அங்குள்ள வாழ்க்கை கீதத்தில் தாளத்தோடு சேர்ந்த லயம் சோபித்தது. தலங்குக் கட்டத்தின் மீது ஒரு பலமான மரப் பாலம் அமைக்கப் பட்டது. அங்கிருந்து பாப்சிலா வழியாகச் சென்றால், கற்கள் நிரம்பிய பாதை ஒன்று உருவாக்கப் பட்டிருப்பதைக் காணலாம். அது முதலில் போடப்பட்ட தென்புறத்துப் பாதையுடன் இணையும். புதிய பாதையில் வேலை துவங்கி விட்டது. காண்டிராக்ட் வேலை கபூர் சந்த், ஹர்வீர் பாடியா, சனத் புக்கன், போக்ராம்—இந் நால்வருக்கும் கிடைத்தது. இந்தப் புதிய அரசாங்கப் பாதை மிகவும் நீண்டதாக இருக்கும். கூஞ்சியிலிருந்து டீங் கடைத்தெரு வரை அது தொடர்ந்து செல்லும் பாதை. பஸ்ஸில் செல்லும் பயணிகள் 'பர்தோபா'விற்கு (ஒரு புனிதத் தலம்) போக மிகவும் வசதியாக இருக்கும். முன்புபோல் சேற்றிலும் சகதியிலும் அவதிப் படாமல் செல்லலாம்.

பாப்சிலாவில் ஓர் அரசாங்க வைத்திய சாலை அமைக்கப்பட இருந்தது. கட்டடத்தை நிறுவும் வேலை போக்ராமுக்குக் கிடைத்திருந்தது. அந்த வைத்தியசாலை புகழ் பெற்று விட்டால், தனஞ்சயனின்

ஹோமியோபதிச் சிகிச்சைக்கு ஒருவரும் செல்ல மாட்டார்கள். அவனுடைய தினசரி வாழ்க்கையே திண்டாட்டத்தில் மாறி விடும் என்று போக்ராம் நினைத்தான். ஆனால் தனஞ்சயன் அப்படிக் கருதவில்லை. ஹாத்திசுங், ஜாஜோரி போன்ற இடங்களிலும்தான் இரண்டு அரசாங்க வைத்திய விடுதிகள் இருக்கின்றன. அங்கு அவன் தன் தொழிலை நடத்தவில்லையா என்ன? இன்றும் கிராம வைத்தியரின் பெருமை குன்றவில்லை. ஆனால் நல்ல பாதை நிறுவ ஆரம்பித்ததுமே, சோனுயின் வடக்குப் பகுதியில் வாழும் மக்கள் அபின் அதிகமாகச் சாப்பிட ஆரம்பித்து விட்டனர் காண்டிராக்டர்களின் பெருமை அந்த அளவுக்கு அதிகரித்து விட்டது. தனஞ்சயன் பாப்சிலாவில் அமைதிப்படை யொன்றைத் திரட்டினான். தலங்குக் கட்டத்திலிருந்து ஜல்மயி கிராமம் வரை இரவு நேரத்தில் அவர்கள் காவல் காக்க முற்பட்டனர். ஒரு நாள், இரவு நேரம். ஒரு சிறு படகு பாப்சிலாவின் கட்டத்தில் வந்து இறங்கிற்று. எல்லாச் சாமான்களும் கரையில் இறக்கி வைக்கப்பட்டன. சற்று நேரம் கழித்து ஒரு மாட்டு வண்டியும் அங்கு வந்து நின்றது. அமைதிப் படையின் பார்வை அதன் மீது விழுந்தது. ஏழெட்டு மூட்டைகளுக் கிடையே போக்ராம் இருப்பதை அமைதிப் படையினர் கண்டனர். இரண்டு ஜவான்களும் உடனிருந்தனர். அவர்களுடைய கைகளில் ஒவ்வொரு தடி இருந்தது. அடிதடிக்கு அஞ்சாத போக்கிரிகள் என்று அவர்களுடைய முறுக்கி விடப்பட்ட மீசையிலிருந்தே தெரியவந்தது. மென்மையான சுபாவம் சிறிதும் இல்லாத முரட்டு ஆசாமிகள் அவர்கள். அவர்களுடைய முகங்கள் எஃகினால் செய்யப் பட்டாற் போலிருந்தன.

அமைதிப் படையினரில் ஒருவன் கேட்டான், "இந்த மூட்டைகளில் என்ன இருக்கின்றது?'

"அயல் நாட்டு மண்", போக்ராம் பதிலளித்தான்.

"மண்ணைக் கொண்டுவர இரவு நேரந்தான் கிடைத்ததா? பகலில் கொண்டுவர முடியவில்லையோ?"

"ஆமாம், டிஸ்பென்சரியை இன்னும் சில நாட்களுக்குள் கட்டி முடித்தாக வேண்டுமே. நாளைக்குப் பாதை நிறுவும் வேலையில் ஈடுபட்டு விடுவேன். ஆதலால்தான் இப்போது கொண்டு வருகிறேன். இப்போதே கொண்டுவரா விட்டால், மேஸ்திரிகளுக்கு நாளை முழுவதும் வேலையிருக்காதே. சும்மா உட்கார்ந்திருப்பார்கள்."

"காண்டிராக்டர் சார், இனிய வார்த்தைகளால் மழுப்ப முடியாது. இந்த மூட்டைகளுக்குள் நிச்சயமாக வேறு ஏதோ இருக்கும் என்று

நாங்கள் சந்தேகிக்கிறோம். அவற்றை இப்போது இங்கேயே வையுங்கள். நாளைக்குப் பரிசோதித்துப் பார்த்த பிறகு நீங்கள் எடுத்துச் செல்லலாம்.''

''என்னப்பா பேசுகிறாய்? பாப்சிலாவில் மண் கிடையாதா என்ன? நான் சிமெண்டுடன் மண்ணைக் கலந்து கொண்டுவந்திருப்பதாக நினைக்காதே!''

''மண் கொண்டுவந்திருக்க மாட்டீர்கள். அது எங்களுக்கும் தெரியும் காண்டிராக்டர் சார். நீங்கள் அப்படி ஒன்றுமறியாதவரா என்ன? இது கறுப்புநிற மண்ணாக இருக்குமோ என்றுதான் நாங்கள் சந்தேகப் படுகிறோம். இந்தப் பேச்சுடன் இரு சாராருக்குமிடையே வாத விவாதம் முற்ற ஆரம்பித்தது. வாய்ச் சண்டை கைச் சண்டையாக மாறி விடப்போகிறதே என்று கருதி ஓர் இளைஞன் தனஞ்சயனை அழைத்துவரச் சென்றான். போக்ராம் பல முறை மன்றாடிக் கேட்டும் அவர்கள் விடவில்லை. அமைதிப் படையினரில் ஒருவரைத் தனியே அழைத்து போக்ராம் கூறினான், ''இன்றிரவு சிமெண்ட் 'பிளாக்' ஆகிவிட்டால் எனக்கு மாபெரும் நஷ்டம் வந்து விடும். கொஞ்சம் பணம் தருகிறேன், பெற்றுக்கொள்.'' இதைக் கேட்ட அமைதிப் படையினருக்குச் சந்தேகம் நிரூபிக்கப்பட்டு விட்டாற் போல் இருந்தது.

தனஞ்சயன் வந்தான். அவன் அமைதிப் படையினரின் தலைவரைத் தனியே அழைத்துக் கேட்டான், ''நீங்கள் போக்ராமின் சட்டைப் பையைப் பரிசோதித்தீர்களா? அவனிடம் பிஸ்டல் கூட இருக்கலாம்.'' அவர் ''பார்க்கவில்லை'' என்று பதிலளிப்பதற்கு முன்னமேயே தனஞ்சயன் ஒரு பாய்ச்சல் பாய்ந்து போக்ராமைக் கீழே தள்ளினான். கூடவே அமைதிப் படையின் நான்கு இளைஞர்கள் மற்ற இரண்டு போக்கிரிகளையும் சூழ்ந்து கொண்டனர். ஒருவன் மாட்டுக் கொம்பால் செய்யப்பட்ட ஊதலை ஊதினான். கைகலப்பு ஆரம்பித்துவிட்டது. தனஞ்சயனுக்கும் போக்ராமுக்கும் இடையே குத்துச் சண்டையே ஆரம்பித்துவிட்டது. கிராமத்து மக்கள் அந்தக் காட்சியைக் காண ஓடோடியும் வந்தனர். தனஞ்சயன் போக்ராமின் மார்பின்மீது உட்கார்ந்து அவனது சட்டைப் பையிலிருந்த பிஸ்டலை எடுத்து அவனைக் குறிப்பார்த்துச் சுட முயற்சித்துக் கொண்டிருந்தான். தனஞ்சயன் மூச்சுத் திணறக் கூறினான், ''உன்னைக் கொன்று சோணாய் நதியில் எறிந்து விடட்டுமா?''

போக்ராம் பேசமுடியாமல் பேசினான், ''என்னை மன்னித்து விடு தனஞ்சயா.''

தனஞ்சயன் கர்ஜித்தான், "பேடிப்பயலே! வெட்கமில்லையா உனக்கு? பயப்படாதே; எங்களைப் போன்றவர்கள் மனிதர்களைக் கொலை செய்யமாட்டார்கள். எங்களால் அது முடியவும் முடியாது. உன் போன்றவர்களைக் கொல்லத்தான் நினைக்கிறோம் ஆனால் முடிவதில்லை. உன் போன்றவர்களிடம் உள்ளத் துணிவு கிடையாது. கோழைகள்."

கிராமத்து மக்கள் உடனே போக்ராமையும் இரண்டு போக்கிரிகளையும் பிடித்துக் கட்டிப் போட்டனர். மறு நாள் காலையில் போலீசுக்கு செய்தி அனுப்பப்பட்டது. மதுபான இலாகாவைச் சேர்ந்த அதிகாரியும் வந்திருந்தார்.

அவர் முதலில் தனஞ்சயனிடம், "மூட்டையைப் பரிசோதித்துப் பார்த்தீர்களா"? என்று கேட்டார்.

"இல்லை" என்று தனஞ்சயன் பதிலளித்தான்.

"அப்படியானால் ஏன் அவற்றைப் பறிமுதல் செய்தீர்கள்?"

அதிகாரியின் போக்கிலிருந்து அவர் போக்ராமுக்கு வேண்டியவர் போல் காட்சியளித்தார். தனஞ்சயன் புரிந்து கொண்டு விட்டான். அவன் பணிவுடன் பதிலுரைத்தான், "தங்கள் உள் பாதுகாப்புத் துறையும் எங்கள் அமைதிப் படையும் ஒன்றுதான். எங்கள் வழக்கப்படி இரவு நேரத்தில் சந்தேகிக்கத் தகுந்தவர்கள் கிராமத்திற்குள் செல்வது கிடையாது. நள்ளிரவில் இவர்கள் சிமெண்டு மூட்டைகளை எடுத்து வருவதன் நோக்கம் என்ன? படகில் அவற்றைக் கொண்டு வந்திருக்கின்றனர். இருவருடைய கையில் தடிகள், ஒருவரிடம் 'பிஸ்டல்' எதற்கு?"

அதிகாரி ஒன்றும் கூறவில்லை மக்களுக்கு மிகுந்த ஆர்வம் உண்டாயிற்று. எல்லோர் முன்னிலையிலும் மூட்டைகளைப் பரிசோதித்தாக வேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தினர். அவ்விதமே செய்யப்பட்டது. இரண்டு மூட்டைகளிலும் இரண்டு அபினிப் பொட்டலங்கள் இருந்தன. அதிகாரி அவற்றை நிறுத்துப் பார்க்க விரும்பவில்லை. நிறுக்கும் கருவி இல்லை என்று கூறிவிட்டார். ஆனால் மக்கள் சிறு தராசு ஒன்றை எங்கிருந்தோ வாங்கி வந்து விட்டனர். ஒரு கிலோ அபினி இருந்தது. போக்ராமும் உடன் வந்திருந்த இரண்டு முரட்டுப் பேர்வழிகளும் கைது செய்யப்பட்டனர். நகர் முழுதும் செய்தி அறிவிக்கப்பட்டது. இந் நிகழ்ச்சி சோனுய் பரியா மக்களைப் பரபரப்படையச் செய்தது. அவர்கள் கூடிக் கூடிப் பேசிக் கொண்டனர். வீரக் கதையின் கதாநாயகனாக தனஞ்சயன் மாறிவிட்டான். போக்ராமின் கெட்ட பெயர் காற்றைப் போல்

பரவியது. கள்ள வியாபாரத்தில் போக்ராம் ஈடுபட்டிருக்கிறன் என்று மக்கள் ஏற்கனவே கேள்விப்பட் டிருந்தனர். ஆனல் வாய் திறந்து கூற எவருக்கும் துணிவு இருக்கவில்லே. காரணம் சோனுய் பரியாவில் போக்ராம்தான் மிகுந்த செல்வந்தன். அவன் தன் பராக்கிரமத்தின் பலத்தால் யாருக்கும் தீங்கிழைக்கும் வல்லமை படைத்திருந்தான். கிராமத்தில் அநேகர் அவனிடம் கடன் வேறு வாங்கியிருந்தனர். இப்போது மக்கள் மெதுவாக அவனேக் கண்டித்துப் பேச ஆரம்பித்து விட்டனர். அவனேக் கண்டால், தலேயைக் குனிந்துக் கொண்டுதான் அவர்கள் பேசுவர். இப் போது அவனுடைய வீடு அரண்மனே போலல்லவா மாறி விட்டது. சாதாரண மக்கள் அவனுடைய வீட்டிற்குச் செல்வதற்கே அஞ்சினர்.

போக்ராம் ஏழு தினங்கள் வரை சிறையில் இருந்தான். நிலேமை மிகவும் மோசமாகிவிட்டது. வழக்குக் காகிதத்தில் போக்ராமின் பேரில் குருவின் பார்வை இருந்தது. ஆனல் கிராம மக்கள் சாட்சி கூறிய பிறகுதான் நிலேமை கவலேக் கிடமாகி விட்டது. அவனுக்கு இரண்டாண்டு சிறைவாசம் அளிக்கப்பட்டது. உடன் வந்திருந்த இருவருக்கும் ஆறுமாதச் சிறைத் தண்டனே அளிக்கப்பட்டது. காரணம் அந்த அபினிக்கு அவர்கள் உரியவர்களல்ல. போக்ராம் தான் அதற்கு உரியவன். சிறை செல்வதற்கு முன் தருலதாவும் குழந்தைகளும் அவனேச் சந்திக்க வந்தனர். அவனுடைய கண்கள் கலங்கவில்லே. முகத்தில் உறுதி பிரதிபலித்தது. கூட்டில் பிடி பட்ட சிங்கம் பழி வாங்கத் துடிப்பது போலிருந்தது அவனது பார்வை. தருலதா அழுதாள். அவனுடைய பேச்சிலிருந்தும் பார்வையிலிருந்தும் இனி அவன் திருந்தி விடுவான் என்ற நம்பிக்கை இருக்கவில்லே. அதனுல்தான் அவளுக்கு அழுகை வந்தது. சிறை செல்லும் முன் செக்குப் புத்தகத்தின் சில பக்கங்களில் தன் கையொப்பமிட்டுச் சித்தி மகன் முகுடனிடம் போக்ராம் கொடுத் தான். அவனிடம், " இந்தக் கிராஸ் செக்கை வைத்துக்கொண்டு இரண்டாண்டுகள் வரை வீட்டைக் கவனித்துக் கொள். பணத்திற் காவது வேறெதற்காவது தேவையிருந்தால் சனத் புக்கனிடம் சொன்னல் போதும். எல்லாம் சரியாகி விடும் " என்று கூறினன்.

வாசந்தி நடந்தது முழுவதையும் கேட்காவிட்டாலும், அதன் அர்த்தத்தை மட்டும் புரிந்துகொண்டு விட்டாள். தன் அண்ணியை நினேத்து அவள் மிகவும் வருத்தமுற்றுள். ஆயினும், எந்தப் புதிய வார்த்தை சொல்லி அவளது மனத்தைத் தேற்ற முடியும்? தருலதா

வும் இவ்வளவு அவமானத்தைச் சகித்துக் கொண்டு தர்கியால் திரும்பி யாரிடம் தன் கதையை எடுத்துக் கூறி ஆறுதலடைவாள்! வாசந்தி தருலதாவை அழைத்துவர எப்படி மோராபூருக்குச் செல்வாள்! போக்ராமின் தங்கை என்று அவளுக்குச் சொல்லிக் கொள்ளப் பிடிக்கவில்லை. இந்தப் பிறவியில் இனி பிறந்தகம் செல்லத் தான் கொடுத்து வைக்கவில்லை என்று கருதினாள். இவ்வளவு வருத்தத்திற் கிடையிலும் தனஞ்சயனை நினைத்து, அவனைப் பற்றி மக்கள் புகழ்ந்து பேசுவதைக் கேட்டு அவளுடைய உள்ளம் மின்னொளி போல் பளிச்சிட்டது. வாசந்தி மறுபடியும் கவலைப் படுவதைக் கண்ட கிழவன் பகீரதன் வருத்தமடைந்தான். ஒரு நாள் அவன் கூறினான் :

"வாசந்தி அண்ணனைப் பற்றி நினைப்பது வீண். அவனைச் சூழ் நிலையும் வயதும்தான் கெடுத்து விட்டன. அண்ணன் கெட்டவனாக இருந்தால் தங்கையும் யாராவது கெட்டவள் என்று நினைத்து விட முடியுமா என்ன? இது தான் உன் வீடு. நாங்கள் தான் உன் தாய்-தந்தையர். நாங்கள் கெட்டவர்களாக இருந்தாலோ அல்லது நாங்கள் உன்னை கெட்டவள் என்று நினைத்தாலோ தான் நீ வருத்தப் பட நியாயமிருக்கிறது."

கிழவனது பேச்சைக் கேட்டு வாசந்தியின் உள்ளம் அமைதி யடைந்தது. உலகிலேயே கிழவன் பகீரதன் தான் மாபெரும் ஞானி போல் அவளுக்குக் காட்சியளித்தான். "இனி வருத்தப்பட மாட்டேன்" என்று கூறிய வாசந்தி ஆவலை அடக்க முடியாதவளாய் அவனிடம் ஒரு கேள்வி கேட்டாள், "அப்பா, எனக்குப் புரியாத ஒரு விஷயத்தைப் பற்றி நான் உங்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமா?"

"சொல் மகளே!"

"போக்ராம் எனக்காக எவ்வளவோ செய்திருக்கிறான். எனக்குத் திருமணம் நடத்தினான். நான் அவனை விட்டுப் பிரியப்போகும் தினத்தன்று மிகவும் வருத்தமுற்றான். வீட்டிலேயே அவனால் இருக்க முடியவில்லை, நான் கணவனை இழந்த போதும், குழந்தையை இழந்த போதும் என்னைப் போலவே வருத்தமடைந்தான். அவனது மனம் அத்தனை மென்மையானது. ஆனால் அதே போக்ராம் இப் படிப்பட்ட கெட்ட செயல்களில் ஏன் ஈடுபட்டான்? ஒருவரையுமே நல்லவர் என்று முழுமையுடன் நம்பக்கூடாதோ என்னமோ?

வாசந்தி கேள்வி கேட்கும் முறையைக் கண்ட பகீரதன் என்ன சொல்வதென்றே புரியாமல் நின்றான். வாழ்க்கை முழுவதும் வருத்

தத்தையே அனுபவித்ததனால் இவளுடைய அறிவு மலர்ந்து விட்டது என்று அவன் நினைத்தான். அவள் உண்மையை அலசி ஆராய முயற்சிக்கிறாள் போலும்! ஆனால் அந்தப் பரம்பொருளைத் தவிர வேறு எது இவ்வுலகில் உண்மையானது? கிழவன் மெள்ள பதிலுரைத்தான், "மகளே, இந்த முதிர்ந்த பருவத்தில் கூட என்றால் நீ கேட்கும் இந்தக் கேள்விக்குப் பதிலுரைக்க முடியவில்லை. என்னிடம் கல்வியறிவு என்று சொல்லிக் கொள்ளும்படி என்ன இருக்கிறது? கடவுள் பேரில் பக்தி உள்ளவன் நான். அதனால்தான் இந்த வாழ்க்கையை அதிகத் தவறுகள் செய்யாமல் கழித்து விட்டேன். நல்ல சாஸ்திர நூல்களைப் படியம்மா. அவைதான் உள்ளத்து ஐயப்பாடுகளைத் தீர்க்கும் சக்தி படைத்தவை. மன வருத்தத்தையும் அவற்றால்தான் போக்க முடியும்."

"படிக்கிறேன் அப்பா! ஆனால் தற்சமயம் என் உள்ளம் அமைதி குலைந்து கிடக்கிறது."

"மகளே, ஒவ்வொரு மனிதனுக்கும் இரு உள்ளங்கள் இருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். அதனால்தான் எப்போதும் அருகில் இருப்பவரின் உள்ளத்தைக் கூடப் புரிந்து கொள்ள முடிவதில்லை. நிலத்தை வெகு ஆழமாகத் தோண்டினால்தான் நிலக்கரியும் எண்ணெயும் கிடைக்கின்றன. ஆனால் மனிதனது மனத்தின் ஆழத்தை நம்மால் கண்டுபிடிப்பது கடினம். இரண்டு உள்ளங்கள் இருப்பதால்தான் ஒருவரைப்பற்றி மற்றொருவர் அறிய அவ்வளவு ஆவல் கொள்கின்றனர். குற்றம்—குணம் இரண்டும் கொண்டவன் மனிதன். மிகவும் கெட்ட மனிதனிடம் கூடச் சில நற்குணங்கள் காணப்படுகின்றன. கொலைகாரனுக்குக்கூட ஒரு எருது இறந்தால் அழுகை வரக்கூடும். நல்ல குணங்களை அழுத்திக் கொண்டு கெட்ட குணங்கள் மேற்பட்டால்தான் மனிதனுடைய இயல்பு களங்கமடைந்து விடுகிறது. அவன் தானே தன் அழிவிற்கு காரணமாகி விடுகிறான். போக்ராம் அப்படித்தான் ஆகிவிட்டான். ஆகையால் மகளே, மனதை உறுதிப் படுத்திக் கொள்ள இறைவனிடம் நம்பிக்கை வேண்டும். காமம், லோபம், ஆசை இவற்றிற்கு எல்லையே கிடையாது. அதனால்தான் மனிதன் சுகமடைவதில்லை. சாஸ்திரங்கள் கூறுவது எவ்வளவு சிறந்தது தெரியுமா? ஆசையற்று, சுயநல மற்று இறைவனிடம் பக்தி கொள்ள வேண்டும். அப்போதுதான் மனம் நிம்மதியடையும். அகந்தையும் நம்மை விட்டு விலகும். சங்கர மாதவன் நமக்களித்த விலை மதிப்பிட முடியாத அருளுரையை இன்று ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகுகூட அசாமைச் சேர்ந்த எந்தத்

தலைவராலும் அளிக்கமுடியவில்லை. அவருடைய அருளுபதேசங்களின் மகிமையையாவது நாம் அறிந்து கொண்டிருக்கிறோமா என்பது சந்தேகம்தான்.''

தனக்குத்தானே பேசிக்கொள்வது போல பகீரதன் இவ்விதம் சொல்லிக் கொண்டே சென்றான். வாசந்தி அங்கிருப்பதைக் கூட மறந்து முணு முணுக்கத் துவங்கினான்.

'செயலில் நம்பிக்கை யுண்டானல்
சிந்தையில் கடவுள் வாழ்ந்திடுவான்.
அகந்தையற்றவனே
ஆண்டவனை அடைவான்.'

வாசந்தியின் மனம் சற்று நிம்மதியடைந்தது வீடே ஒரு புனிதத் தலம் போல் அவளுக்குத் தோன்றியது. அவள் தந்தையின் அருகிலிருந்து எழுந்தாள். எதிரே பாய்ந்து கொண்டிருந்த சோணை நதியை உற்றுப் பார்த்தாள். குளிர்காலத்தில் அதன் வேகம் சற்று நிதானமாகி விடும். முன்போன்ற அலட்சிய வேகம் கிடையாது. தண்ணீர் படிகம் போன்று தெளிவாக இருந்தது. இதுவும் சோணை நதியின் புதிய உருவம்; இந்தப் புதிய வடிவில் ஒரு பெருமை இருந்தது. ஆசையற்ற ஞானியைப் போன்ற வடிவம் இது. மார்கழி மாதத்துக் கடுங் குளிரும், உலர்ந்த மரங்களும் கூட சோணை நதியின் இந்த அழகைச் சிறிதும் களங்கப் படுத்தவில்லை.

ஒரு நாள் பனிதா கூறினாள், ''நீ இப்படி வெள்ளைப் புடவை உடுத்திக் கொண்டிருக்கிறாயே அம்மா! அதனால்தான் உன் தந்தை மிகவும் வருத்தமாக இருக்கிறார். இம்மாதிரி உடை தரித்தால் உன் உள்ளத்தில் ஆசை இன்னும் அதிகரிக்கும் என்கிறார். சுகமோ, துக்கமோ—எல்லாவற்றிற்கும் அடிப்படை உள்ளம்தானே. இம்மாதிரி உடை அணிவதால் உன் உள்ளம் முன்பைவிட அதிகச் சஞ்சலமடையும். நீயும் பாருவைப் போன்று உடைகள் அணிந்து கொள். அப்போதுதான் எங்களுக்கு நிம்மதியாக இருக்கும். இளம் பெண் இப்படி வெள்ளை உடை அணிந்திருக்க நாங்கள் எப்படிப் பார்த்துக் கொண்டிருப்போம்?''

மறுநாளிலிருந்தே வாசந்தி சிறு பூக்கள் போட்ட புடவையை உடுத்திக்கொள்ள ஆரம்பித்தாள். கரைபோட்ட உடைகளை அணிந்து கொண்டாள். பாருவைப் போலவே தலையையும் அலங்கரித்துக் கொண்டாள். கைம்பெண் என்றால் குங்குமம் வைத்துக்

கொள்ளக் கூடாது, அவ்வளவுதான் என்று கூறும்படி மாறிவிட்டாள் வாசந்தி.

மார்ச்சு மாதம் முதல் வாரத்தில் ஒரு நாள் பென்ஷன் பணத்தைப் பெற்றுக் கொள்ள பகீரதன் பட்டணத்திற்குச் சென்றான். 'சங்கர வாக்யாம்ருதம்' எனும் பெரிய புத்தகம் ஒன்றையும் 'நாமகோஷா' வின் (அசாமிய சந்தக் கவிஞர் மாதவ் தேவ் இயற்றிய காவியம்) ஒரு பிரதியையும் வாங்கி வந்தான். அவற்றை வாசந்திக்குக் கொடுத்தான். வாசந்தி சிறுகச் சிறுக மகிழ்ச்சியுடன் காணப்பட்டாள். வீட்டில் அவளை யாரும் எந்த வேலையும் செய்யும்படி தொந்தரவு செய்வது கிடையாது. புத்தகம் படிக்கும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களில் முன்போல் வீட்டு வேலைகளிலும் பனிதாவிற்கு உதவி செய்து வந்தாள். வாசந்தியின் மன நிலையில் இந்த மாற்றத்தைக் கண்டு எல்லோரும் மகிழ்வடைந்தனர். முறிந்த வீடு மறுபடியும் சீர்பட்டது போன்றிருந்தது. வாசந்தி பாருவுடன் கிராமத்திற்குச் செல்ல ஆரம்பித்தாள். ஆன்மீகக் கூட்டங்களுக்கும் போய் நல்ல பிரசங்கங்களைக் கேட்கத் துவங்கினாள்.

ஒரு நாள் தருலதா எப்படி இருக்கிறாள் என்றும் பார்க்கச் சென்றாள். பாப்சிலாவில் இருக்கும் சித்திரையயும் கண்டு வந்தாள். ஆனால் உள்ளத்தில் நிலை ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்.

பகலும் இரவும் மாறி மாறி வருகின்றன. வாசந்தியைப் பொறுத்த வரை ஒரு குறிக்கோளு மின்றித் தேதிகள் மாறிக்கொண்டிருந்தன. தேதிகள் மறைந்து மாதமுடிவைக் கொண்டு வந்தன. புதிய மாதம், புதிய மகிமையைக் காண்பித்தது. ஆறு பருவங்களிலும் சோனாப் பரியா கிராமத்து மக்கள் புத்துணர்ச்சியுடன் தம் வேலைகளில் ஈடுபட்டு வந்தனர். சில சமயங்களில் திருமண உற்சவம், மற்றும் சில நேரங்களில் மூத்த மகனைப் பெற்றெடுக்கும் மகிழ்ச்சி. சிலருடைய உள்ளத்தில் காதல் துளிர்விடும் நேரம் வரும். எதிர் காலத்தில் சுகத்தை எதிர் நோக்குவது... தனிமையில் ஒரு ஏக்கம். இளமையின் இயற்கைத் துடிப்பை சமுதாய நீதி முட்டுக் கட்டை போட்டு நிறுத்துவது. இம்மாதிரி நிலையில் வாசந்தி தன் உடலையும் உள்ளத்தையும் அமைதி பெறச் செய்ய வேறு வழியைத்தான் நாட நேர்ந்தது. பாரு, புத்லி இருவருடனும் மகிழ்ந்திருப்பது, பனிதா பகீரதன் இருவரிடமும் மரியாதையுடன் நடந்து கொள்வது, பெரியவர்களின் அன்பிலும் அரவணைப்பிலும் தன்னை மறந்து வீட்டு வேலைகளில் ஈடுபடுவது, புத்தகங்களைப் படிப்பது இவ்விதம் நாட்களை வாசந்தி கழித்து வந்தாள். பனித்துளிகளால் முத்துக்களை உதிர்க்க முடி

யாது. வேதனை தினமும் அவளைக் கவ்வியபடியே இருந்தது. ஆதவனின் கிரணங்கள் உள்ளத்தை மகிழ்விக்க வில்லை. ஆதவன் மறையும்போது மஞ்சள் நிறமாய் மேகங்கள் தோன்றுகின்றன—உள்ளத்தின் ஆசையும், உடலின் துடிப்பும், இரவு நேரத்து மோன இச்சைகளும் வாசந்தியை முற்றிலும் விடவில்லை.

வாசந்தியின் உள்ளம் மெல்ல மெல்ல சஞ்சல முற்றது. மறுபடியும் அவள் வெண்மையான ஆடைகளை அணிய முற்பட்டாள். வீட்டு வேலைகளைச் செய்வதையும் விட்டு விட்டாள். விருப்ப மிருந்தால் புத்தகம் படிப்பாள்—ஆனால் முன்போலல்ல. திருவிழாக்களைக் காணச் செல்வதும் கிடையாது. அங்கு ‘ செல்வதால் வாசந்தியின் வருத்தம் அதிகரித்தது பெண்டிர் ஒன்று சேர்ந்து துதிப்பாடல் களைப் பாடுவதும் அவற்றைப் பற்றி பேசுவதும் உண்டு. மகனைப் பிரிந்து யசோதை வாடும் நிலையும், கண்ணனைப் பிரிந்து கோபி யர்கள் தவிக்கும் நிலையும் அவளது உள்ளத்தை நிலைகுலையச் செய்தன. வாசந்தியின் மனவருத்தம் இன்னும் தீவிரமாகத் துவங்கிற்று.

நாட்கள் கழிந்தன. வாசந்தி வெளியே செல்வதை நிறுத்தி விட்டாள். வாசல் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு சோனாய் நதியைக் கண்டு ரசித்தபடி இருந்தாள். எவருடனும் பேசுவதில்லை. பனிதாவும் பகீரதனும் கவலை யடைந்தனர். சோனாய் நதியின் மடியில் மாரிக்காலம் புரண்டோடி வந்தது. இயற்கையின் எழில் மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கும் பருவம் அது. சோனாய் பரியாவின் சின்னஞ்சிறு பறவை கூடத் தன் இனத்தோடு களிப்புடன் நீரில் மூழ்கி மூழ்கி எழுந்திருக்கும். மீன்கள் முட்டையிடும் நேரம் அது. ஆண் மீன் நன்றாகக் கொழுத்துக் காணப்படும். சோனாய் தன் முழு இளமை வனப்புடன் காட்சி தரும். இரு கரைகளும் வாசந்தியின் இளமைக்கு வேதனை தரும் வேளை. சோனாய் பரியாவின் இயற் கையும் மக்களும் அவளுக்கு மறந்தே போய்விடும். இடுகாட்டின் ஒரு சிறு புல் கூடத் தன்னைவிடச் சுகமாக இருக்கும் என்று அவள் கருதினாள். வாழ்க்கை இருக்கிறதே—அதன் ஆதாரத்தில் மட்டும் பெருமிதமாக அவள் ஏன் வாழக்கூடாது? தன்னைப் பிறர் அலட் சியப்படுத்துவதுதான் அவளால் சகித்துக் கொள்ள முடியாமல் இருக்கிறது. எது வழி என்று அவள் தேடிக்கொண் டிருந்தாள். வீட்டில் இருந்துகொண்டே கொடிய வைராக்கியத்தில்தான் அவள் வாழ்ந்து வந்தாள்.

# பத்தொன்பது

இரண்டு ஆண்டுகளுக்குள் எத்தனையோ மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன. சோனாய் பரியாவில் அமைக்கப்பட்ட கற்பாதை டங் பஜார் தெருவரை நீண்டுவிட்டது. தினசரி இரண்டு பஸ்கள் ஓட்டப் பட்டன. மக்களின் மனமும் மாறிவிட்டது. அவர்களைச் சுயநலம் கவ்விக் கொண்டது. திருமணமான பெண்களும், கன்னிகளும் புதுப் புதுக் கெட்ட பெயரைப் பெற ஆரம்பித்தனர். பஞ்சாயத்து நிறுவப் பட்டு விட்டது. அதன் அங்கத்தினர்கள் தலைவராவதற்காக அரும் பாடுபடத் துவங்கினர். கிராமங்களில் சண்டை பூசல்கள் அதிகரித் தன. அடிதடியும் நடந்தது. வன்முறை, பகை இவற்றின் காரண மாகக் கட்சிகள் அதிகரித்தன. வடக்குப் பக்கத்திலும் தெற்குப் புறத்தைப் போல் பூசல்கள் அதிகமாகி விட்டன. நல்லவர்களின் அறிவுரைகளை மக்கள் லட்சியமே செய்யவில்லை

பாப்சிலா சர்க்கார் வைத்தியசாலையில் எம். பி. பி. எஸ். டாக்டர் கள் வந்து விட்டனர். மீன் பிடிக்குமிடத்தைச் சர்க்கார் ஆயிரக் கணக்கான ரூபாய்க்கு ஏலம் போட்டுவிட்டது. வேறு இடங்களி லிருந்து வந்த சாமர்த்தியமான மீனவர்கள் சோனாய் பரியாவைச் சேர்ந்த மீனவர்களின் தினசரித் தொழிலைப் பறித்துக் கொண்டனர்.

சோனாய் பரியா மக்களின் பேச்சில் இப்போது வேறுபாடு தென் பட்டது. வேலை செய்யும் முறையும் புதுமையாகிவிட்டது. நகரத்தி லிருந்து தினசரிப் பத்திரிகைகள் வர ஆரம்பித்தன. கரும்புக் கடைக் கெதிரிலும், புத்தராலயத்திற் கெதிரிலும், பள்ளிக்கூடத்திற் கெதிரி லும் மக்கள் நின்று கொண்டு செய்தித்தாள் படிக்க ஆரம்பித்தனர். எம். எல். ஏ., மந்திரிகள் முதலியவர்களின் பெயர்களை மக்கள் யாவரும் அறிந்து கொண்டனர். அரசியலில் நடக்கும் சூழ்ச்சியைச் சோனாய் பரியாவின் பெரும்பாலான மக்கள் புரிந்து கொள்ள ஆரம் பித்தனர். இன்றைய மொழியில் சொல்லப் போனால், சோனாய் பரியாவிற்குள் 'பாலிடிக்ஸ்' நுழைந்து விட்டது. பென்ஷன் பெறும், ஓய்வு பெற்ற முதியோரின் ஒரு நிறுவனத்திற்குப் பகீரதன் தலை வனாக்கப்பட்டான். இந்த இரண்டாண்டுகளுக்குள் பாரு, புத்லி இருவருடைய திருமணமும் நடந்தேறியது. இப்போது கிழவன், கிழவி, வாசந்தி இம் மூவர்தா னிருந்தனர். மதுராவின் தம்பி நந்தேச்வர் சிறுவயதிலிருந்தே பட்டணத்தில் படித்து வந்தான். அவன் ஓவர்சியருக்குப் படித்துவிட்டு ஒரு ஜில்லாவில் வேலை

பார்த்து வந்தான். சோனாய் கிராம வாசியாக இருக்க அவனுக்கு இனித் தேவை கிடையாது.

சிறையிலிருந்து விடுதலையடைந்த போக்ராம் தன் பெரிய வீட்டை 'சமுதாய நல விடுதி'க்கு வாடகைக்குக் கொடுத்து விட்டான். பிறகு பட்டணத்தில் தனக்கென்று ஒரு வீட்டை கட்டிக் கொண்டான். தன் சொந்தப் பணத்தில் ஒரு அரிசிமில் வாங்கினான். ஒரு துணிக்கடையும் திறந்து வைத்தான். தருலதாவையும் பட்டணத்திற்கு அழைத்துச் சென்று விட்டான். அவர்கள் சோனாய் பரியாவின் வாழ்க்கையையே துறந்து விட்டனர்.

நாற்புறங்களிலும் ஏற்பட்டுள்ள மாறுதல்களைப்பற்றி வாசந்தி மக்கள் கூறத்தான் கேட்டிருந்தாள். நாத்திகளின் திருமணத்திற்குப் பிறகு அண்டை வீட்டார் கூட அவளைக் காண முடிவதில்லை. பகீரதனது வீட்டு நிலைமை மோசமாகி விட்டது. வாசந்தியின் அழகு மங்கி விட்டது. அழகிய கண்களின் ஒளி, வேதனை காரணமாக மழுங்கி விட்டது. சிற்பத்தில் காணப்படும் சிலை போன்ற அவள் எந்தக் கொடிய கொள்ளையினால் இவ்விதம் சிதைக்கப் பட்டாளோ என்னும்படி ஆகிவிட்டாள். இரண்டாண்டுகளாக ஒரு விதமான மாறுதலுமின்றி வாசந்தி நாட்களைக் கடத்தி வந்தாள். அப்படியே இருக்க அவள் பழகிக்கொண்டு விட்டாள். தம் சுக துக்கங்களைப் பிறரிடம் கூறி அழுதுகொண்டு அவர்களுடைய இரக்கத்திற்குப் பாத்திரமாக இல்லாமலிருத்தலே வாழ்க்கையின் மிகச் சிறந்த சாதனை என்று அவள் கருதினாள். வாழ்வின் சோதனைகள் அவளுக்குப் பெருந்தன்மையுடனும் கௌரவத்துடனும் வாழக் கற்று கொடுத்தன. ஆனால் ஒரு நாள் எல்லாம் தலைகீழாகக் கவிழ்ந்து விட்டது. மன்படி என்ற ஒரு பெண்மணி தான் வாசந்தியின் அத்தகைய நிலைக்குக் காரணமாக இருந்தாள். வாசந்தியின் உள்ளத்தில் புதிய ஆசை தளிர்விட்டது. அவளது உள்ளத்தில் உயிர்ப்புத் துடித்தது. மண்ணில் பிறந்து வளர்ந்த இந்த எலும்பு தசையாலான பெண்மணியின் உள்ளம்......

# இருபது

தர்கியாலிலிருந்து சுமார் இரண்டு கிலோ மீட்டர் தொலைவில், தோய் சக்லாவில் மன்படியின் வீடு இருந்தது. அவள் நான்கு குழந்தைகளுக்குத் தாய். கணவன் நோயாளி, வீட்டோடு கிடப்பவன். குடும்பப் பொறுப்பு முழுவதையும் மன்படிதான் கவனித்துவந்தாள். உத்தம் அதிகார் என்பவரின் வீட்டில் மாவரைத்தல், பாத்திரம் தேய்த்தல் போன்ற வேலைகளைச் செய்துவந்த மன்படி, இப்போது தன் வீடு சற்று தொலைவில் இருப்பதால் அந்த வேலையை விட்டு விட்டாள்.

பாரு, புத்லி இருவருடைய திருமணத்திற்குப் பிறகு பகீரதனின் வீட்டு வேலையைப் பனிதாவினால் செய்ய முடியவில்லை. வாசந்தி இஷ்டமிருந்தால் வேலை செய்வாள், இல்லாவிட்டால் அந்தப் பக்கமே எட்டிப் பார்க்க மாட்டாள். ஆகையால் பகீரதன் மன்படியை வேலைக்காக அமர்த்தினான். அங்கு அவள் அதிகாரின் வீட்டில் செய்து வந்த வேலைகளைச் செய்தாள். ஆனால் மாவுமட்டும் அரைப்பது கிடையாது. இரண்டு பசுமாடுகளைக் கறக்கும் வேலை, மாட்டுக் கொட்டகையைச் சுத்தம் செய்வது, பாத்திரம் தேய்ப்பது என்று எல்லா வேலைகளையும் மன்படி கவனித்து வந்தாள். நேரங் கிடைத்தால் கறிகாய் கூட நறுக்கித் தருவாள். காலையில் சூரியன் உதிக்கும்போது பகீரதனின் வீட்டிற்கு வந்து விடுவாள் மன்படி. பகல் நேரம் அங்குதான் அவளுக்குச் சாப்பாடு. பிறகு மாலையில் சூரியன் மறையும் முன்பு தோய்சக்லா சென்று விடுவாள். பனிதாவுக்கும் பகீரதனுக்கும் அவளை மிகவும் பிடித்திருந்தது. அவள் நினைத்தது உடனே அங்கு கிடைத்து விடும். மன்படி வந்த பிறகு தான் வாசந்தியின் முகத்தில் மகிழ்ச்சி தென்பட ஆரம்பித்தது. மன்படி அவளுடைய சூனியமான உள்ளத்தை நிறைவுறச் செய்து விட்டாள்.

மன்படி வாசந்திக்குத் தன் கிராமத்தைப் பற்றிக் கூறுவாள். அவளுடைய நாவிற்கு வந்தால் எந்த நிகழ்ச்சியும் புதிய மெருகுடன் வெளிப்படும். எப்போதும் ஓயாமல் பேசுவது அவளது வழக்கம். ஒவ்வொரு தினமும் வாசந்திக்குச் சொல்வதற் கென்று ஏதாவது புதிய கதையுடன் அவள் வருவாள். ஆனால் வாசந்தி அவளைக் கேட்கும் கேள்விகள் விசித்திரமாக இருக்கும். 'மன்படி! சோனாய் நதிக் கரையில் உட்கார்ந்து கொண்டு சிறுவர்கள் இப்போதும் மீன்

பிடிக்கிறார்களா? மழை நாட்களில் கருத்த மேகம் சூழ்ந்துகொண்ட தும் நதியில் மீன்கள் துள்ளிக் குதிக்கின்றனவா? பக்கத்துத் துலோபங்கா காட்டில் பறவைகளின் கலகல ஒலி கேட்கிறதா? மைதானத்தில் எருமைமீது உட்கார்ந்து கொண்டு இடையர்கள் பாடிக் கொண்டே செல்கின்றனரா? அறுவடை தின விழாவிற்கு வரும் பெண்களை யாராவது கள்ளத்தனமாகக் கடத்திக் கொண்டு ஓடி விடுகிறார்களா? என்று இம்மாதிரி பல கேள்விகள் கேட்பாள், ஆனால் மன்படி இந்தக் கேள்விகளின் உட்பொருளையே அறிந்து கொள்ளமாட்டாள். இவையெல்லாம் கிராமங்களில் நடப்பவை தானே—கேட்பானேன்!

வாசந்தியும் மன்படியும் பேசத் துவங்கி விட்டால் மாட்டுக் கொட்டகை, உக்கிராண அறை, வராந்தா எல்லா இடங்களிலும் பேச்சு நடக்கும். வெயில் வருமிடமெல்லாம் அவர்களிருவரும் உட்கார்ந்து விடுவர். ஏதாவது ரகசியமான பேச்சென்றால் உட் புறத்து அறையின் ஓர் ஓரத்தில் உட்கார்ந்து விடுவர். நூல் நூற்கும் இராட்டை, உடைந்த மூடிகள், டப்பாக்கள், மிகப் பெரிய உலர்ந்த சுரைக்காய்கள், முதலியவை அந்த அறையில் முன் பெல்லாம் வைக்கப் பட்டிருக்கும். இப்போது அவை ஒன்றும் கிடையாது. மூன்று உடைந்த நாற்காலிகளும், பாய்களும்தான் அங்கு இருந்தன. அந்தரங்கமான பேச்சு இந்த அறையில்தான் நடைபெறும். முதல் தினமே இந்த அறைக்குள் நுழைந்தவுடனேயே அவர்கள் இருவரும் நெருங்கிய தோழிகளாகி விட்டனர். இருவரும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டனர்.

"என்னம்மா! கடவுள் இப்படியும் உன்னைச் சோதிப்பாரா! எப் படித்தான் உன்னால் காலங்கழிக்க முடிகிறதோ, போ!" என்று ஆரம்பித்தாள் மன்படி.

"அதைப்பற்றிப் பேசாதே! இப்படியே இருந்து எனக்குப் பழகிப் போய்விட்டது. என்னைப் பற்றிப் பேசாமலிருந்தால்தான் இனி நான் உன்னுடன் பேச முடியும். என்னைப் பற்றி ஒன்றும் கேட்காதே!"

அன்றிலிருந்து மன்படி ஒரு கேள்வியும் கேட்பதில்லை. வாசந்தி யைப் பற்றித் தாறுமாறாகப் பலர் பேச அவள் கேட்டிருந்தாள். ஆனால் வாசந்தியிடம் ஒன்றுமே கேட்கவில்லை. வாசந்தி புரிந்து கொள்ள முடியாத புதிர்தான். ஆனால் கெட்ட பெண்ணல்ல. அவளுடைய போக்கு சுதந்தரமானது. "மன்படி! அந்தத் தோட் டத்திலிருந்து நான்கு சண்பகப் பூ கொண்டு வாயேன்" என்று ஒரு

நாள் கூறுவாள். "எதற்கு?" என்று மன்படி கேட்பாள்—"இரவில் தூக்கம் வராதபோது அதன் மணம் மனத்திற்கு மகிழ்வூட்டுகிறது" என்று பதிலளிப்பாள் வாசந்தி. மறுநாள், "மன்படி, சோணய் நதியின் சம்பவ்புகன் கட்டத்தில் கதம்ப மரம் இருக்கிறதே, அதற்கடியில் சிறுசிறு கதம்பச் செடிகள் முளைத்திருக்கும். ஒரு கதம்பச் செடியை நம் வீட்டுத் தோட்டத்தில் கொண்டு வந்து நட்டு வையேன்" என்பாள். "அப்படியே செய்து விடலாம்" என்று கூறிக் கதம்பச் செடியை நட்டுவிடுவாள் மன்படி. சிற்சில சமயங்களில் வாசந்தி இப்படியும் பேசுவதுண்டு. "மன்படி, நேற்றிரவு நான் களத்து மேட்டிற்கு வந்து வெகு நேரம் படுத்திருந்தேன். நிலவு காய்ந்து கொண்டிருந்தது. ஆகா! என்ன பிரமாதமாக இருந்தது தெரியுமா?" மன்படியும் கெட்டிக்காரியாயிற்றே. உதட்டைக் கடித்துக் கொண்டு சிரித்தபடி அவள் வாசந்தியைக் கேட்பாள், "கோபா—குபுனியைப் (அசாமியக் காதலர்) போலவா?" உடனே வாசந்தி, "நீ நாசமாய்ப் போக! உனக்கு வேறு உவமை கிடைக்கவில்லையா?" என்று அவளைக் கடிந்து கொள்வாள்.

குளிர் காலம். ஐப்பசி மாதம். தர்கியால் கிராமத்தில் ஒரே அமர்க்களம். இன்றிலிருந்து ராம யாத்திரைக்காகத் திருவிழா ஆரம்பித்து விட்டது. மாலை நேரங்களில் இந் நாட்களில் பகீரதன் வீட்டில் தங்குவதில்லை. தாளமும், இசையும், வாத்திய ஒலிகளும் வாசந்தியின் மாலை நேரத்து வேதனையைப் போக்குவது போலிருந்தது. வீட்டி லிருந்தபடியே எல்லா ஒலிகளும் செவிகளில் ஒலித்தன. பாடல்கள் உள்ளத்தை என்னமோ செய்து விடுகின்றனவே என வாசந்தி எண்ணினாள். பாடல்களை விளக்கும் அறிஞருடைய பேச்சும் உள்ளத்தைத் துடிக்க வைத்தது. "வீரந்த், விபின் விஹார விசாரத் இந்து ப்ரகாசி..." இசைக்குப் பிறகு 'தை தை தித் தித் தகட தாம் தை!...'

இந்தப் பருவத்தில்தான் வாசந்தியும் மன்படியும் மிகவும் நெருங்கிய நண்பர்களாயினர். வாசந்தி வருத்தத்துடன் கேட்டாள், "மன்படி, மாலை நேரத்தில் சந்திரன் ஆகாயத்தில் கிளம்பும் போது நீ தோய்சக்லா திரும்புகிறாயே, அப்போது உன் மனம் மகிழ்ச்சியால் துள்ளுகிற தல்லவா?"

"இதென்ன கேள்வி வாசந்தி! அந்த நாள் இப்போது எப்படி வரும்? நான்கு குழந்தைகளுக்கு நான் தாய். வழியில் செல்லும் போது எத்தனையோ கவலைகள். குழந்தைகள் சாப்பிட்டார்களோ

என்னமோ, அவருடைய உடல் நிலை எப்படி இருக்கிறதோ, இப்படி எண்ணிக் கொண்டே பாதையைக் கடந்து விடுகிறேன்!''

'' இல்லை, நீ பொய் பேசுகிருய். இது குளிர்காலம்—வீட்டிற்குள் இருக்கும்போதே மரங்களும் செடிகளும் பூத்துக் காய்த்துக் குலுங்குவதை உணர முடிகிறதே. சோணுய் நதிக் கரையில் சகோரப் பறவைகள் மகிழ்ந்து கொண்டிருக்குமே! மாதவ் தேவ் காரணமில்லாமலா இம்மாதிரி எழுதியிருப்பார்—'ஜலர் யதேக் மல் யேஹேன் சரத் காலே ஸ்வபாவ்தே நிர்மல் ஹோவய்' (சரத் காலத்தில் நீரில் இருக்கும் களங்கம் கூட மறைந்து தெளிவடைந்து விடும்) ''

'' நாம் அவ்வளவு அறிவுடையவர்களல்ல, அவருடைய வார்த்தைகளைப் புரிந்து கொள்ள.''

சரத் காலத்தில் சோணுய் பரியா கிராமம் அப்பருவத்தில் மலரும் மலர்போல் காட்சியளித்தது. தானிய வயல்களும், மக்களின் மனமும் நிறைந்து காணப்பட்டன.

சோணுய் நதிக் கரையில் கருடன் தன் சிறகுகளால் காதல் கதை கூறிக்கொண்டு போவது போலிருந்தது. வாசந்தியின் உள்ளமும் பொங்கி வழிந்தது. புற உலகிற்குத் தன் உள்ளத்தைக் கொடுத்து வாங்கிக் கொள்ள உணர்ச்சி பொங்கியது. இரண்டு—மூன்று தினங்களுக்கு ஒரு முறைதான் மன்படி காதல் கதை கூறுவாள். 'யதுநாதனின் மகள் சம்பாவின் ஒரு கை வளையல் சோணுய் நதியிலிருந்து கிடைத்தது. தன் காதலன் சுதன் அருகே அமர்ந்திருக்க அவள் தன்னையே மறந்திருந்தாளாம். அதனுல் வளை நழுவி நதியில் விழுந்தது கூடத் தெரியவில்லையாம்.'

'தந்தை வெளியே சென்றிருந்தார். தாய் வீட்டு வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அந்த நேரம் பார்த்து தர்மேம்பர் வீட்டிற்கு வந்தான். மனமதியுடன் ஏதோ நடந்திருக்க வேண்டும். திரும்பிச் செல்லும்போது தர்மேம்பரின் உடையில் பல இடங்களில் குங்குமக் கறை படிந்திருந்ததாம்'

'ஜரென் மேதாவின் மருமகள் கைம்பெண்ணுயிற்றே. தன் ஒரு வயதுக் குழந்தையுடன் இப்படியும் கிளம்பலாமா? அவளை அழைத்துக் கொண்டு போனவன் எப்படிப்பட்டவன் தெரியுமா?...'

'நேற்றிரவு சுந்தரியின் வீட்டில் தட்டியைப் பெயர்த்துக் கொண்டு திருடன் உள்ளே நுழைந்து விட்டானும். மகன் வயலில் இரவு நேரத்தைக் கழித்து வந்தான். திருடன் சாமானைத் திருட வரவில்லை. அவன் அப்படிப்பட்ட திருடன்! உண்மை இன்னும் வெளிப்படவில்லை. உண்மையாவது உண்மை! மருமகள் வீட்டுக்

கதவைத் திறந்தே வைத்திருப்பாளாம். எவனோ ஒருவன்—யாராக இருக்கும். எப்போதும் வருபவன்தான்—வந்திருக்கிறான் போலிருக்கிறது. வீட்டிலிருந்தவர்களுக்கு ஏதோ சத்தம் கேட்டதாம் பார்க்க எழுந்தார்களாம் ஒரேயடியாக ஓட்டம் பிடித்து விட்டானாம்!

வாசந்தி இப்படிப்பட்ட கதைகளைக் கேட்டு மனத் திருப்தியுற்றாள். கடைசியாக மன்மடி கூறிய கதையில் வாசந்திக்கு முழு மன நிறைவு ஏற்படவில்லை. அந்தக் கதையின் காதலர் தம் முன் நிற்பது போன்று அவள் கருதினாள். அவர்களுக்காக அவள் மிகவும் மன வருத்த முற்றாள்.

“தோய் சக்லாவில் மகு இருக்கிறானே, அவனுடைய மகள்தான் கஞ்சன்மதி. அவள் அழகில் சிறந்த பவளக் கொடி. கிராமம் முழுவதும் அவளுக்காகக் கொந்தளிக்கிறது, தெரியுமா?”

“எப்படி?”

“இது பெரிய கதையம்மா! சோனாய் நதியில் ஒரு நொடியில் நீரில் ஒளிந்து கொள்ளும் பிராணி இருக்கிறதே ‘ஷிஹு’, அதைக் கூடப் புரிந்துகொண்டு விடலாம், ஆனால் பருவமடைந்த பெண்ணின் போக்கை எவராலும் புரிந்து கொள்ள முடியாதம்மா!”

“அப்படி என்னதான் நடந்து விட்டது?”

வயலில் வேலை செய்யும் ஹீரா கையுங்களவுமாகப் பிடிபட்டான் என்ற செய்தி மட்டும்தான் முதல் நாள் கதையில் மன்மடி கூறினாள். கடந்த இரண்டாண்டுகளாக ஹீரா மகுவின் வீட்டில் வேலை செய்து வந்தான். இளைஞன் மிகவும் நல்லவன். பயிர்த் தொழிலில் வல்லவன். அதனால் மகுவின் அன்பை வெகு எளிதில் ஹீரா பெற்று விட்டான். மகுபாயனின் ஒரு கை என்றே ஹீராவைச் சொல்லி விடலாம். ஹீராவின் உழைப்பால் தான் மகுவின் வயலில் விளைச்சல் ஆண்டுக்காண்டு அதிகரித்துக்கொண்டே வந்தது. சென்ற ஆண்டு விளைந்த கரும்பிலிருந்து வெல்லம் ஏராளமாகக் கிடைத்தது. ஆனால் நன்மையே தீமைக்கு அடிகோலி விட்டது. ஹீராவும் கஞ்சன்மதியும் அகப்பட்டுக் கொண்டனர். ஒரு நாள் பகல் நேரம். மகு தலங்குக் கட்டத்துக் கடைத் தெருவிலிருந்து வந்து கொண்டிருந்தான். வீட்டிற்கு வந்த அவன், ஹீரா, கஞ்சன்மதியின் அறையிலிருந்து வெளியே வருவதைப் பார்த்து விட்டான். மகு பாயன் கோபத்தால் துடிதுடித்தான். மகளின் அறையில் அவனுக்கு என்ன வேலை? ஹீரா சென்ற பிறகு மகு தன் மகள் காஞ்சன்மதியிடம் விவரத்தைக் கேட்டான். அவள் களைத்துப் போய்ப் படுக்கையில் கிடந்தாள். மத்தியான வேளைக்கு முன்பு

மகளுக்குத் தூக்கம் வரக் காரணம் என்ன? இது பற்றித் தாய் தந்தையருக்குப் புரியவில்லை. இவர்கள் அறிந்து கொள்வதற்கு முன்னதாகவே கிராமத்து மக்கள் கூடிக்கூடிப் பேசிக் கொண்டனர். மன்படி கூறினாள், "கஞ்சன் மதியின் படுக்கையறையில் நுழையும் போதே மார்பு 'படபட' வென்று அடித்துக் கொள்கிறது. உன்னைப் போன்ற வயதுடையவர்கள் அந்த அறைக்குப் போனாலே மனம் அதிர்ச்சி யடையும்."

வாசந்தி மிகுந்த பரபரப்புடன் கேட்டாள், "நீ மதுவின் வீட்டிற்குப் போகிறாயா?"

மன்படி பதிலுரைத்தாள் "அடிக்கடி போவேன். ஆனால் அவளுடைய அறை விசித்திரமாக அலங்கரிக்கப்பட் டிருக்கிறது. சுவரில் வண்ணச் சித்திரங்கள் தொங்கவிடப்பட் டிருக்கின்றன. பார்க்கவே வெட்கமாக இருக்கிறது. இந்தப் படங்கள் ஆங்கிலப் புத்தகத்திலிருந்து எடுத்தவையாம். புத்தகங்கள் யாருடையவை தெரியுமா உனக்கு? கடைக்காரன் வீரேனுக்குச் சாமான்களைக் கட்டிக் கொடுக்க பழைய காகிதங்களும் புத்தகங்களும் வருகின்றன. அவனிடமிருந்து அந்தப் படங்களைக் கிழித்து வந்து ஹீரா, கஞ்சன் மதியிடம் கொடுக்கிறானாம். அவளுடைய அறையில் மனோரஞ்சிதம், மகிழம்பூ, மல்லிகை முதலிய மலர்களின் மணம் வீசுகிறது."

"அது கிடக்கட்டும், மதுபாயன் ஹீராவிடம் பிறகு என்ன சொன்னான்?"

"அன்று ஒன்றும் கூறவில்லை. மறு நாள் அவனை எச்சரித்ததோடு நில்லாமல், பயிர்த்தொழில் செய்ய நிலத்தைக் கொடுக்காமல் அவனைத் துரத்திவிட்டான்." வாசந்தி பெருமூச்செறிந்தாள்.

பல தினங்களாகிவிட்டன. மன்படி கஞ்சன் மதியைப் பற்றித் தொடர்ந்து ஒன்றும் சொல்லவில்லை. பதினோறு தினங்களுக்குப் பிறகு, "கஞ்சன் மதி தந்தையிடம் அடி வாங்கினாள்" என்று கதையை மன்படி ஆரம்பித்தாள். "அவளுடைய தாயும் செம்மையாகத் திட்டினாள். இப்போதெல்லாம் கஞ்சன் மதியைத் தனிமையில் தூங்க விடுவது கிடையாது. தாயுடன்தான் தூங்க நேர்ந்தது. இரவு நேரத்தில் கஞ்சன்மதி இருக்கிறாளா என்று அவ்வப்போது தொட்டுப் பார்ப்பது வழக்கம்."

வாசந்திக்கு இது பிடிக்கவில்லை. அவள் கேட்டாள், "ஹீரா நல்ல அழகனாக இருந்தால், கஞ்சன் மதியை ஏன் அவனுக்குத் திருமணம் செய்து வைக்கக் கூடாது?"

மன்படி உடனே பதிலளித்தாள், "நல்ல பேச்சு இது. மருபாயன் உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவன். கந்தார் பாயன் போன்ற புகழ் பெற்றவனின் மகன். ஹீரா தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவன். ஒரு காலத்தில் அவனுடைய தாய் சட்டி பானை விற்று வந்தாள். ஹீராவுக்கு கஞ்சன்மதியைத் திருமணம் செய்து கொடுத்தால் குலகௌரவமே போய்விடும். நம் போன்றவர்களுக்கு அதில் ஒன்றும் வேற்றுமை தெரியாது. போதாதற்கு ஹீரா ஒரு நாடோடிப் பயல்; நிலம்—நீச்சு ஒன்றுமே கிடையாது. சோணுய் நதிக்கரையில் ஒரே ஒரு குடிசையுண்டு. அதுதான் அவனுடைய சொத்து."

ஹீராவைப் பற்றி மன்படி இப்படிக் கூறியது வாசந்திக்குப் பிடிக்கவில்லை. அவளுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. "பாவம், இந்தக் காதலர்கள் பேரில் உனக்குச் சிறிது கூட இரக்கம் இல்லையா?" என்று மன்படியை வாசந்தி கேட்டாள். மன்படி பேசாமலிருந்து விட்டாள்.

பதினைந்து நாட்கள் கழிந்தன. மன்படி சோணுய் நதிக்கரையில் ஹீராவைச் சந்தித்தாள். ஒரு ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்கு வாங்கிக் கொண்டு அவன் பயிர்த் தொழில் செய்யப் போவதாகக் கூறினான். மன்படி அவனிடம் வேறொன்றும் கேட்கவில்லை. ஆனால் இரண்டே தினங்களில் மறுபடியும் நிலைமை மோசமாகி விட்டது. 'கஞ்சன்மதியின் கைகளிலிருந்த ஒரு ஜோடி கங்கணத்தைக் காணோம். தாய் அவற்றைப் பற்றிக் கேட்டதற்கு கஞ்சன் மதி பதிலே சொல்லவில்லை. அடியும் கிடைத்தது. அவள் தாய் தந்தையருக்குத் தீராப் பிரச்சினையாகி விட்டாள். அன்றிலிருந்து அவளுடைய நிலைமை இன்னும் கவலைக் கிடமாகிவிட்டது. அவளை ஓரறைக்குள் போட்டுப் பூட்டி வைத்து விட்டனர். இப்படி மூடி வைப்பதற்கு முன்னமேயே அவள் ஹீராவைச் சந்தித்திருப்பாள் என்று பெற்றோர் சந்தேகித்தனர். நிச்சயமாகக் கங்கணங்களை அவள் அவனுக்குத்தான் கொடுத்திருக்க வேண்டும்!'

"ஹீராவிற்குக் கங்கணம் கொடுக்கக் காரணம் என்ன மன்படி?"

"அன்பின் போக்கை யாராலும் அறிந்து கொள்ள முடியாதம்மா நிலத்தில் பயிர்த்தொழில் செய்ய முடியாமல் கஷ்டப்பட்டிருப்பான். குத்தகைக்கு வாங்கிய நிலத்தையும் உழுது பயிரிட்டு விளைச்சல் கண்ட பின்புதானே சாப்பிட முடியும்! அவனுடைய கஷ்டம் தாங்காமல் கங்கணத்தைக் கொடுத்திருப்பாள். அவன் மிகவும் சோதனைக்கு ஆளாகியிருக்கிறான். இந்த மாதத்தில் இரண்டு தடவை அவன் பட்டணத்திற்குப் போயிருந்தான். நான் தலங்குக்

கட்டத்தில் அவனைச் சந்தித்தேன், மற்றொரு முறை 'ஹாத்தி சகுவில்' பார்த்தேன். இதிலிருந்து கங்கணத்தை விற்றுத்தான் தன் கஷ்டங்களைப் போக்கிக் கொண்டிருப்பான் என்று தோன்று கிறது. சோணைய் நதிப் பக்கத்திலிருந்து உரம் மட்டும் எடுத்து வந் தால் போதுமா? விதைக்கு விலை கொடுத்தாக வேண்டுமே! இவர் கள் சணல் உற்பத்தியில் ஈடுபட்டிருந்ததால், தானியங்களின் விலை அதிகரித்து விட்டது. சணலை அதிக விலைக்கு விற்று அரிசி வாங்கி இவர்கள் சாப்பிடுகின்றனர்."

மன்படி இவ்விதம் வருத்தத்துடன் கூறினாள்: "பாலும் தயிரும் ஆறாகப் பெருகி வந்த இடத்தில் இப்போது பால் கிடைப்பது அரிதாகி விட்டது. நல்ல அரிசி ஒரு கிலோ கூடக் கிடைப்பதில்லை. சோணைய் நதியின் மீது பாலம் அமைத்தாகி விட்டது. கற்பாதையின் மீது மோட்டார் வண்டிகள் இப்போது செல்கின்றன. கிராமம் முன் னேற்ற மடைந்து விட்டது என்று பலர் பெருமையடித்துக் கொள் கின்றனர். ஆனால் உண்மையில் முன்னேற்றம் எங்கே என்பது தான் தெரியவில்லை. மக்களின் தொகை என்னமோ அதிகரித்து விட்டது. ஆனால் பயிர்த் தொழில் செய்யும் நிலம் அதிகமாக வில் லையே. முன்பு போல் பயிர்த்தொழில் செய்பவர் இப்போது வியாபாரி களிடம் தானியத்தை விற்பது கிடையாது. தானியம் விற்பவருக்கு வேறு தொழிலைக் கொண்டு தினசரித் தேவையைச் சமாளிக்க நேரிடு கிறது. தோய்சக்லாவைச் சேர்ந்த பாயன் ஆண்டுதோறும் நூறு குவிண்டால் தானியம் விற்பனை செய்கிறான். பட்டணத்தில் அவனுடைய மகன் நாஜிர் கூட இந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறான். நிலம் கிடைக்காத காரணத்தால் சோணைய் பரியா மக்களுக்கு மற்ற இடங்கள் செல்ல நேரிடுகிறது. 'காக்கி' என்ற இடத்தில் சிலர் வசிக்க ஆரம்பித்துள்ளனர். சிலர் குழல் ஊதி, நாட்டுப் பாடல் களைப் பாடிப் பிழைக்கின்றனர். கிராமத்து அழகான இளைஞர்கள் பட்டணத்தில் கூலி வேலை செய்து பிழைக்கின்றனர்."

"அவர்கள் இனி இவ்விதம்தான் இருப்பார்கள் என்று நீ நினைக் கிறாய்? இத்தனை இன்னல்களை அவர்களால் எவ்விதம் சகித்துக் கொள்ள முடியும்? மன்படி, வாழ்வில் ஒரு முறைதான் நல்ல வாய்ப்பு எல்லோருக்கும் கிட்டும். அதை நழுவ விடுவது சரியல்ல."

இவ்விதம் கூறிய வாசந்தி இறைவனின் பெயரை ஜபிக்கத் துவங் கினாள். அவளுடைய கண்களில் நீர் நிரம்பியது. வாசந்தி தன் வாழ்நாள் முழுவதும் கூண்டுக் கிளியைப்போல் கழித்தாக வேண்டும். தக்க தருணம் பார்த்துத் தக்கபடி நடந்து கொள்ளா

ததால் கஞ்சன்மதியும் வாசந்தியைப் போல்தான் வாழ நேரிடும் என்று மன்படி கருதினாள்.

"வாசந்தி, நான் நன்றாகச் சிந்தித்துப் பார்த்து விட்டேன். கஞ்சன்மதிக்கு இந்தப் பிறவியில் மன நிம்மதி கிட்டப்போவதில்லை. காலதேவனைப் போன்ற பெற்றோர்களின் கையில் அவள் அகப் பட்டுக்கொண் டிருக்கிறாளே!"

"எனக்கு நம்பிக்கையில்லை, மன்படி! அவர்கள் என்றாவது ஒருநாள் ஓடிவிடுவார்கள். இது நிச்சயம். அவளுடைய வாழ்வில் மாற்றம் இல்லை என்று நீ சொல்வதையும் நான் கேட்டுக் கொண்டுதா னிருக்கிறேன். ஆனால் உன்னைவிட எனக்குச் சற்று அதிக மாகவே எல்லாம் தெரியும்."

மறுநாள், ஹீரா கடன் வாங்க அலைந்துகொண் டிருப்பதாக மன்படி தகவல் தெரிவித்தாள். "ஒரே வருடத்தில் திருப்பிக்கொடுத்து விடுவதாகக் கூறுகிறானாம். அசாமின் வடபகுதியில் புதிய புதிய இடங்களில் பெட்ரோல் எடுக்கப் படுகிறது. அங்கு ஆயிரக்கணக் கானவர்கள் வேலை செய்கிறார்கள். நிலத்திலிருந்து எண்ணெய் எடுப்பதற்காக நிலத்தைத் தோண்டுகிறார்கள். அங்கு பகல் வேளை யில் காவல் வேலை பார்த்தால் கூட தினசரி ஐந்து அல்லது ஆறு ரூபாய் கூலி கிடைக்கிறதாம். பட்டணத்திற்குச் சென்று பார்த்ததில் ஹீராவுக்கு மிக எளிதில் அங்கு வேலை கிடைக்கும் என்று தெரிய வந்தது. ஆனால் அங்கே செல்வதற்குப் பணம் வேண்டுமே. அவ னுக்குக் கடன் கொடுப்பார் யாருமில்லை."

இதைக் கேட்ட வாசந்தி மகிழ்வுற்றாள். "இப்போது புரிந்து விட்டது, மன்படி. அவர்கள் நிச்சயமாக ஓடிவிடுவார்கள். வடக்கே செல்லும்போது அவன் நிச்சயமாக அவளையும் அழைத்துக் கொண்டு ஓடிவிடுவான்" என்று வாசந்தி கூறினாள்.

"அதென்னமோ அம்மா, யார் கண்டார்கள்.? நானும்தான் காதலில் சிக்குண்டு ஒருநாள் எல்லோரையும் துறந்து ஒருவருடன் கிளம்பி வந்தவள். ஆனால் இம்மாதிரி சூழ்ச்சியை நான் அறியேன்," என்று பதிலளித்தாள் மன்படி.

ஒரு வாரம் கழித்து, சாபுக்தராவைச் சேர்ந்தவர்கள் கஞ்சன் மதிக்கு மோதிரம் அணிவித்துச் சென்றதாக மன்படி வாசந்தியிடம் தெரிவித்தாள். வைகாசி மாதம் நான்காம் தேதி திருமணம் நிச்சய மாகி யிருக்கிறது என்று கேட்ட பிறகும் வாசந்தி நம்பிக்கையிழக்க வில்லை. அவள் கூறினாள், "நான் சொன்னது நினைவிருக்கட்டும்,

மன்படி, அவர்கள் நிச்சயமாக ஓடப்போகிறார்கள். தக்க தருணம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள், அவ்வளவுதான்."

"உனக்கு எப்படித் தெரியும்?"

"கஞ்சன்மதி, அயலார் அளித்த மோதிரத்தை அணிந்து கொண்டு மகிழ்வுற்றிருப்பாள். அவள் ஹீராவை மறந்துவிட்டாள் என்று பெற்றவர்கள் நினைத்துக்கொண் டிருப்பார்கள். ஆகையால் அவ ளிடமிருந்த சந்தேகமும் போய்விடும். அவளைக் கடுமையாகக் கண்காணிப்பதை விட்டுவிடுவார்கள். திருமணமாகித் தன் தாய் தந்தையரை விட்டுச் செல்லப்போகும் பெண்ணிடம் எல்லோருக்கும் பரிவு அதிகம் ஏற்படுவது சகஜம். இது அவர்கள் ஓடுவதற்குத் தக்க தருணமாகிவிடும். இதைப் பயன் படுத்திக் கொள்ளா விட் டால் வாழ்க்கை முழுதும் அழுதுகொண்டு கழிக்க நேரிடும். பிறகு என் போன்ற நிலைதான்."

ஒரு தெய்வத்தினிடம் தன் உள்ளத்தைத் திறந்து காண்பிப்பது போல், உணர்ச்சி வசப்பட்டு இவ்விதம் மள மளவென்று பேசினாள், வாசந்தி. மன்படி இருக்கிறாள் என்பதைக் கூட அவள் மறந்து விட்டாள். தன்னைப் பற்றி இதுவரை யாருக்கும் தெரிவிக்காத விஷ யம்கூட அவளது வாயினின்றும் வெளிப்பட்டுவிட்டது. அந்த நேரத் தில் அவள் படபடத்துப் போனாள். உதடுகள் உலர்ந்து போயின. கண்களை இறுக மூடிக்கொண்டாள். மன்படி அவளது வருத்தம் தோய்ந்த நிலையைக் கண்டு பிரமித்துவிட்டாள். அவளுக்கு வாசந்தி யின் வாழ்க்கைபற்றிய விவரம் கிடைத்துவிட்டது. வாசந்தியிடம் இன்னும் தெளிவாகக் கேட்டுத் தெரிந்துகொள்ள அவள் விழைந் தாள். ஆனால் கேட்க இயலவில்லை. ஏற்கெனவே வருத்த முற் றிருக்கும் அவளை இன்னும் ஏதாவது கேட்டால் எரிகிற புண்ணில் புளி பெய்தாற்போலாகிவிடும். பாவம், வாசந்தி நிம்மதியாக இருக் கட்டும். இறைவன் அவளுக்கு அருள் புரியட்டும். வருந்தி வருந்தி அவள் மன நலிவடைந்து விட்டாள். இறைவன் அவளுக்கு அமைதிவழி நல்கட்டும் என்று மன்படி வேண்டிக் கொண்டாள்.

அன்று நடந்தது அவ்வளவு தான்.

அடுத்த நாள் வாசந்தி துணிவான மன நிலையுடன், "நீ தனிமை யில் பட்டணம் வரை சென்று வருவாயா?" என்று மன்படியைக் கேட்டாள்.

"ஏன் முடியாது. பஸ், மோட்டார் எல்லாம் இருக்கும்போது இப்போதெல்லாம் சுலபமாகப் பட்டணம் போய்வர முடியுமே. என் நிலம் ஏலம் போடப்பட்டபோது, போன வருடம், நான் மட்டும்

தான் பட்டணம் சென்று திரும்பினேன் என்று மன்படி பதிலளித்தாள்.

"அப்படியானால் என் பொன் நகைகளைப் பட்டணத்திற்குக் கொண்டு போய் விற்று வா. ஏன் விற்கிறாய் என்றெல்லாம் என்னைக் கேட்கக் கூடாது."

இவ்விதம் கூறிய அவள் தன் படுக்கையறைக்குள் சென்றாள். பெட்டியிலிருந்து இரண்டு கங்கணங்களைக் கொண்டுவந்து மன்படியிடம் கொடுத்தாள். எங்குசென்று, எவ்விதம் விற்கவேண்டும் என்பதையும் கூறினாள். பட்டணத்திலுள்ள பெரிய ஆல மரத்திற்கருகே ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறது. அது சிவப்புநிறக் கட்டடம். இரண்டடி மேலே நடந்தால் ஒரு தட்டான் கடை தென்படும். மன்படி போன்றவள் இப்படி நகையை விற்றால் எங்காவது பிடிபடப் போகிறாளே என்ற பயத்திற்கும் இடமில்லை. காரணம் அந்தத் தட்டான் திருட்டுப் பொருள்களைத்தான் விலைக்கு வாங்குவான்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு மன்படி கங்கணங்களை விற்றுப் பணத்தை வாசந்தியிடம் கொடுத்தாள். "பாவம், ஹீரா பணம் கிடைக்காமல் சுற்றி அலைகிறான். எங்கும் கிடைக்கவில்லை" என்று மன்படி சொன்னாள்.

வாசந்தி மன நிம்மதியடைந்தாள். முன்போலவே சற்று கம்பீரமான குரலில், "தோட்டத்தின் பின்புறம் இருக்கும் செடிகள் பட்டு விட்டன. அவற்றை வெட்டி வெளியே எறிய வேண்டும்; நன்றாகக் கொத்தி இஞ்சியும் மஞ்சளும் நடலாம். இதை நீ என் மாமனாரிடம் சொல். நிலத்தை நன்றாகக் கொத்த மண்வெட்டியுடன் ஒரு ஆளை அழைத்து வரச்சொல்வார். ஹீராவை நீ அழைத்து வரலாம். நான் அவனுடன் சிறிது பேச விரும்புகிறேன். அவனைப் பார்க்கவும் ஆசையாக இருக்கிறது.

வாசந்தி கூறியதுபோலவே நிலத்தைக் கொத்திவிட ஹீரா வந்தான். வாசந்தி அவனுடன் பேசினாள். இவ்வுலகில் இவ்வளவு இரக்கம் படைத்த பெண்டிரும் இருக்கிறார்கள் என்று முதலில் ஹீராவினால் நம்பவே முடியவில்லை.

"உன்னைப்பற்றி எல்லாவற்றையும் கேள்விப்பட்டேன்."

ஹீரா வெட்கத்தால் மௌனமாக இருந்தான்.

பிறகு, "அசாமின் வடக்குப் பக்கம் எப்போது செல்லப் போகிறாய்?" என்று கேட்டாள்.

"நிச்சயமில்லையம்மா" நிறையப் பணம் வேண்டும்.

ஏதோ கொஞ்ச நாட்கள் இருந்து விட்டு வரக்கூடிய விஷயமல்ல அது. அதுவும் வைகாசிக்கு முன்பே செல்ல வேண்டும்."

"அவனையும் உடன் அழைத்துக்கொண்டு போகிறாயா?"

"அப்படித்தானம்மா எண்ணிக்கொண்டிருக்கிறேன்."

வாசந்தி மகிழ்ச்சியால் பொங்கிவிட்டாள். அதன் பிறகு இன்னும் அந்தரங்கமான பேச்சுகள் வெளிவந்தன. வாசந்தியின் முன் ஹீரா கண்ணீர் உதிர்ப்பதைத் தொலைவிலிருந்து மன்படி பார்த்தாள். தன் கடந்தகாலக் கதையை ஹீராவிடம் கூறி வாசந்தி அவளுடைய வருத்தச் சுமையைக் குறைக்க முயற்சிக்கிறாள் போலும் என்று மன்படி நினைத்தாள். காரணம் கங்கணங்களை விற்று அதிலிருந்து வந்த பணத்தை வாசந்தி ஹீராவின் கையில் கொடுத்துவிட்டுக் கூறியது மன்படியின் செவிகளில் விழுந்தது. "இதோ பார், கூடிய சீக்கிரம் காரியத்தை நடத்து. தாமதமாக்கினால் அவளுடைய மனம் மாறினாலும் மாறக்கூடும். நீயும் கிடைத்த வாய்ப்பை இழந்துவிடு வாய். ஹீரா, நினைவிருக்கட்டும். வாய்ப்பு என்பது வாழ்க்கையில் ஒரு முறைதான் வரக்கூடும். என்னைப்போல் வாய்ப்பை இழந்து தவிக்கும் பெண்டிரை நீ எங்குமே பார்த்திருக்க முடியாது."

மாலை நேரத்திற்குள் ஹீராபாஜு வீடு திரும்பிவிட்டான். மன்படி யின் ஆவல் எல்லையை மீறிவிட்டது. அவள் சற்றே நிதானித்துக் கேட்டுவிட்டாள். "அது சரி. அவர்கள் இருவரும் ஓடி விடுகிறார்கள் என்றே வைத்துக் கொள்வோம். அதனால் உனக்கென்ன லாபம் கிடைக்கப் போகிறது?"

வாசந்தி கம்பீரமான குரலில் பதிலளித்தாள். "மனிதன் லாப நஷ்டத்தைக் கருதிதான் ஒவ்வொரு வேலையையும் செய்கின்றானா என்ன? அவர்களுடைய காதலைக் கேட்டதிலிருந்து கடவுள் அவர்களுக்கு நன்மை புரியட்டும் என்று நான் வேண்டிக் கொள் கிறேன். அவர்களிருவரும் ஓடிப்போய்விட்டார்கள் என்ற செய்தி யைக் கேட்க நான் மிகவும் ஆவலாக இருக்கிறேன்."

வைகாசி இன்னும் தொடங்கவேயில்லை. பங்குனி மாதமாகி நான்கு நாட்கள்தான் கழிந்திருந்தன. சந்தன்மதி மதுபாயனை ஏமாற்றி விட்டு ஹீராபாஜுவுடன் எங்கோ சென்றுவிட்டாள். மன்படி கூறிய படி சோணாய் நதிக்கரையில் வாழும் மீனவருக்குக் கூடத் தெரியாத படி நள்ளிரவில் சோணாய் நதியைக் கடந்து இருவரும் சென்றுவிட்ட னர். மக்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. அவர்கள் எங்கு சென்றிருக்கின்றனர் என்பதை மன்படி, வாசந்தி அவ்விருவர்தாம் அறிவர். வாசந்தியின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று.

கஞ்சன்மதி சென்றபிறகு வாசந்தியின் உள்ளத்தில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. முன்பெல்லாம் மௌனமாக அவள் துக்கத்தைச் சகித்து வந்தாள். இப்போது அவள் அமைதியிழந்து காணப்பட்டாள். தனஞ்சயனைப் பற்றிய கவலை மறுபடியும் உள்ளத்தில் வந்து புகுந்தது. 'முதலில் இருந்ததைவிட அதிமாக நெஞ்சைக் கல்லாக்கிக் கொள்ள வேண்டும்; நம் பெயர் கெட்டுவிடுமே என்றோ, மாமி—மாமன் இருவருடைய பாசத்தையும் எப்படித் துறப்பது என்றோ நினைக்கக் கூடாது' என அவள் நிச்சயம் செய்து கொண்டாள்.

மன்படியுடன் அவளுடைய நட்பு இன்னும் நெருங்கிற்று. தன்னிடம் மன்படிக்கு அன்பு அதிகம் என்றும், அவளை முழுமையாக நம்பலாம் என்றும் அவள் அறிந்துகொண்டாள். ஒரு நாள் மிகவும் உணர்ச்சி வசப்பட்டு மன்படிக்கு அவள் தன் கதை முழுவதையும் கூறிவிட்டாள். மன்படியிடம் அவள் சற்றும் வெட்கமடைய வில்லை. மதுராவிடமும் அவள் அவ்விதமே உண்மையை எடுத் துரைத்தாள். ஆனால் முழுவதும் உரைக்கவில்லை. மற்றவரிடம் தன் வேதனைக் கதையை உள்ளபடி கூறியதன் காரணத்தால் இன்று அவளுடைய உள்ளச் சுமை குறைந்தது. மன்படியும் அவ ளுடைய விருப்பத்தை ஆமோதித்தாள்.

"மன்படி, உனக்கு அவரைத் தெரியுமா?"

"எனக்குத் தெரியும், ஆனால் அவருக்குத்தான் என்னைத் தெரியாது."

"அப்படியானால் ஒரு காரியம் செய். நான் ஒரு கடிதம் தருகிறேன். எப்படியாகிலும் அதை அவரிடம் கொடுத்துவிடு. ஆனால் ஒரு வருக்கும் தெரியக்கூடாது."

மன்படி அவளுக்கு வாக்குக் கொடுத்தாள். அவள் பஞ்சிலா சென்று தனஞ்சயனைத் தனிமையில் சந்தித்தாள். வாசந்தியின் நிலைமை பற்றியும் அவனுக்குத் தெரிவித்தாள். தனஞ்சயன் மிகவும் கவலையுற்றான். மன்படி கொண்டுவந்த கடிதத்தைப் பல முறைகள் படித்தான்.

'அன்புள்ள தனஞ்சயனுக்கு,

கடைசிமுறையாக நாம் சந்தித்தபோது நீங்களும் என்னைப் போன்றுதான் வாழ்க்கை நடத்துகிறீர்கள் என்பதை அறிந்து கொண்டேன். மன்படி என்னைப்பற்றி எல்லாம் கூறுவாள். நாம் இன்னும் கிழவர்களாக ஆகவில்லை. இன்னும் பல காலம் உயிர் வாழ்ந்தாக வேண்டும். எஞ்சிய காலத்தை நாம் இப்படியே கழித்து விடுவதா? இதுபற்றி ஒருவிதமான ஏற்பாடும் செய்ய முடியாதா?

எத்தனையோ தார்மிக நூல்களைப் படித்தேன். ஆயினும் பரலோகத்துப் புண்ணியத்தைப் பற்றி எனக்கு முழு நம்பிக்கை ஏற்படவில்லை. எந்தக் கடவுள் இந்த உலக வாழ்வில் என்னை இத்தனைச் சோதனைகளுக்கு ஆளாக்கினரோ, அதே கடவுள் மேலுலகத்தில் சுகமாக வைப்பார் என்று எப்படி நம்பமுடியும்? நான் உங்களுக்குரியவள். ஆமாம், இதைக்கேட்டு மக்கள் பிரமித்துவிடுவார்கள். ஆனால்...'

தனஞ்சயனுடைய வாழ்வில் மிகப்பெரிய வியப்புக்குரிய விஷயம் இது. கடைசியாகச் சந்தித்தபோது எந்த வாசந்தியைப் பொறுமைக்கே இருப்பிடம் என்று கருதினனே, இதயத்தில் சொல்லொணா வேதனையைத் தாங்கிக்கொண்ட போதிலும் இந்து மதத்துக் கைம்பெண் என்று தன்னைப் பெருமையுடன் கூறிக்கொண்டாளோ, உள்ளத்து வருத்தத்தை வாழ்நாள் முழுவதும் தாங்கிக்கொண்டு உயிர்வாழும் உறுதி எவளுடைய கண்களிலும் முகத்திலும் பிரதிபலித்ததோ, அதே வாசந்தியா இன்று திடீரென இப்படி மாறியிருக்கிருள்! சொல்லொணுத் துணிச்சலுடன், சமுதாய நீதியைத் துச்சமாக உதறித் தள்ளிவிட்டுத் தனஞ்சயனுக்குச் சொந்தமானவள் என்று சொல்லிக்கொள்ளத் துடிக்கிருள்! அவன் என்ன செய்வது என்று புரியாமல் குழம்பித் தவித்தான். அவனுடைய கடிதத்தைப் பற்றி இருந்த கரங்கள் நடுங்கின. நெற்றியில் வியர்வைத் துளிகள் கிளம்பின. மன்படியிடம் ஏதோ சொல்லத் துவங்கியவன் நிறுத்திவிட்டான். மனம் வெதும்பிச் சற்றுநேரம் பேசாமல் உட்கார்ந்துவிட்டான்.

மன்படியை இன்னதெனப் புரியாத ஒருவித பயம் பற்றிக்கொண்டது. அவள் அமைதி இழந்தாள். தனஞ்சயன் சற்று நிதானித்துக்கொண்டு கூறினன். "இன்று நான் பதில் ஒன்றும் எழுதித் தரப்போவதில்லை. நான் சிந்தனை செய்து கொண்டிருக்கிறேன் என்று சொல்லுங்கள். என்ன ஏற்பாடு செய்யவேண்டும், எவ்விதம் செய்யவேண்டும் என்பது பற்றி நானே தர்கியால் சென்று அவளுடன் பேசிக்கொள்கிறேன். நாளை மறுநாள் நானே அங்கு வருகிறேன்."

மன்படி நடந்ததை ஒன்றுவிடாமல் உரைத்தாள். வாசந்திக்குக் கவலை இன்னும் மேலிட்டது. கடைசியில் அவளே அவமானத்திற்கு உள்ளாகிவிட்டாளா என்ன? அவன் அவளைச் சுயநலம் பிடித்தவள் என்றும் நடத்தை கெட்டவள் என்றும் கருதிவிட்டான?

இரண்டு பகல், இரண்டு இரவு—வாசந்தி சாப்பிடுவதையும், உறங்குவதையும் விட்டுவிட்டாள். தனஞ்சயன் வாக்களித்தபடி

அவளைக் காண வரவில்லை. ஆகையால் வாசந்தி சொல்லாமலேயே மன்படி பாப்சிலா சென்றாள். அங்கு நடந்த நிகழ்ச்சியை அறிந்த அவள் மிகுந்த வருத்தமடைந்தாள். சோணுய் நதியின் வடக்குப் பகுதியில் வாழ்ந்த மக்கள் தெய்வம் போல் கருதி வந்த அந்தத் தனஞ்சயன், தன் வீட்டை மீனவரின் தலைவனுக்கு விற்றுவிட்டு எங்கோ சென்றுவிட்டான். எங்கு சென்றான் என்று யாருக்கும் தெரியவில்லை. யாரிடமும் ஏதும் அவன் சொல்லிவிட்டும் போக வில்லை. பாப்சிலா கிராமத் தலைவனை ஒரு கிழவனிடம் மட்டும், 'இனி பாப்சிலாவிற்கோ, சோணுய் நதிப்பக்கமோ வரமாட்டேன்' என்று கூறிச் சென்றுவிட்டான்.

இந்தச் செய்தியைக் கேட்டதுமே வாசந்தி மூர்ச்சையாகி விடுவாள் என்று மன்படி அஞ்சினாள். ஆனால், மன்படி கூறியதைக் கேட்ட வாசந்தி ஒரு முறை ஆகாயத்தைப் பார்த்தாள். எங்கும் வெளிறிப் போன சூனியம்தான் தென்பட்டது. கண்களைக் கண்ணீர் மறைத் தது. மன்படியிடம் ஒன்றும் பேசாமல் அவள் பூனைக்குட்டியைப் போல் மெதுவாகப் படுக்கையறைக்குச் சென்றாள். கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொண்டாள்.

அதற்குப் பிறகு வாசந்தி மன்படியுடன் பேசுவதையே நிறுத்தி விட்டாள். முன்புபோல் மௌனமாக இருக்கும் கன்னிபோல் மாறி விட்டாள். மாமனாரின் அலமாரியில் வைக்கப்பட்டிருந்த புத்தகங்க ளெல்லாவற்றையும் தன் அறையில் கொண்டுவந்து வைத்துக் கொண்டாள். பருந்தின் சிறகுகளில் ஆறு பருவங்களின் வர்ண ஜாலங்கள் நிரம்பியிருந்தன. உயிர் வாழும் ஆசை மிகவும் தீவிரமாக அந்தச் சிறகுகளில் படபடத்தது. சோணுய் நதியின் மீது மேலும் கீழுமாகப் பறந்து செல்லும் கங்கைப் பருந்து நதியில் மீன் நீந்து வதற்கான சைகை காட்டியது.

கங்கைப் பருந்தின் சிறகுகள் படபடக்க அதன் காற்று வாசந்தி யின் உடலிலும் பட்டது. ஆனால் அந்தக் காற்று அசைவற்று நின்றுவிட்டது. அழகிய சோணுய் நதி எப்போதும் போல் பாய்ந்து கொண்டேயிருந்தது.